# அழகப்பா பல்கலைக்கழகம்

தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதியும்
மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப்
பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

காரைக்குடி - 630003

## தொலைநிலைக்கல்வி இயக்ககம்


## இளங்கலை தமிழ் - இரண்டாமாண்டு

## நான்காம் பருவம்

## தாள்- 10741

# கவிதை இலக்கியம்.

## தொலைநிலை கல்வி இயக்கம் - இளங்கலைத் தமிழ்
## தாள் - 10741 – கவிதை இலக்கியம்.
## பாடத்திட்டம் - பொருளடக்கம்.

**நோக்கம்: கவிதை இலக்கியத்தை மாணவர்கள் கற்றறிதல் மூலம் கவிதை குறித்த அறிவினைத் தெளிவாகப் பெறுதல்.**

**பிரிவு 1 : மரபுக்கவிதை**

கூறு1 : அ - பாரதியார் - பாஞ்சாலி சபதம்
(முதல் பாகம் துரியோதனன் சூழ்ச்சிச்சருக்கம் வரை)
கூறு 2 : ஆ - பாரதிதாசன் - புரட்சிக்கவி (முழுமையும்)
கூறு 3 : இ - பாரதிதாசன் - புதியதோர் உலகு செய்வோம் ( 1- கவிதை)
கூறு 4 : ஈ - மரபுக்கவிதை – மனோன்மணியம் சுந்தரம்பிள்ளையின் தமிழ்த் தெய்வ வணக்கம். (1-கவிதை)

**பிரிவு 2 : புதுக்கவிதை**

கூறு 5 : கவிஞர் சுரதா - சிக்கனம் (1- கவிதை)
கூறு 6 : கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை – உமர்கய்யாம் பாடல்கள் (முழுமையும்)
கூறு 7 : கவியரசு கண்ணதாசன் - தைப்பாவை (முழுமையும்)
கூறு 8 : சிற்பி பாலசுப்பிரமணியன் - கண்ணாடிச் சிறகுள்ள பறவை (1-கவிதை)

**பிரிவு 3 : புதுக்கவிதை**

கூறு 9 : அப்துல்ரகுமான் - பால்வீதி (முதல் 20 கவிதைகள் )
கூறு10 : ந.பிச்சமூர்த்தி – தெரியவில்லை (1-கவிதை)
கூறு 11: காசி ஆனந்தன் - வெற்றிவிழா (1-கவிதை)

**பிரிவு 4 : கவிதைகள் - ஹைக்கூ கவிதைகள்**

கூறு 12: கல்யாண்ஜி – வாழ்க்கை (1-கவிதை)
கூறு 13: கவிஞர் வைரமுத்து – ஓ! மரங்கொத்தி மனிதர்களே (1-கவிதை)
சவகர்லால் கவிதைகள் - (1) நான் யார்? (11) பாவம்! (2கவிதைகள்)
கூறு 14: ஹைக்கூ கவிதைகள் - தமிழன்பன், கழனியூரன்.

# பிரிவு-1



## கூறு – 1 - மரபுக்கவிதை

அ. பாரதியார் - பாஞ்சாலி சபதம் - முதற்பாகம் - துரியோதனன் சூழ்ச்சிச் சருக்கம் வரை (1-153 பாடல்கள் வரை)

1.1 அறிமுகம்

1.2 நோக்கம்

1.3 மரபுக்கவிதை

1.4 மரபுக்கவிஞர்கள்

1.5 பாரதியார் - அறிமுகம்

1.5.1 - பாஞ்சாலி சபதம் - படைப்புக்காரணம்

1.5.2 – முதற்பாகம் - கடவுள் வாழ்த்து

1.5.2.1 – துரியோதனன் சூழ்ச்சிச் சருக்கம் (1-153வது பாடல் வரை)

1.5.2.2 – அத்தினபுரம் - நகர வருணனை

1.5.2.3 – துரியோதனன் சபை

1.5.2.4 – துரியோதனன் சகுனி உரையாடல்

1.5.2.5 – சகுனியின் சதி

1.5.2.6 – சகுனி – திருதிராட்டிரனிடம் கூறுதல்

1.5.2.7 – திருதிராட்டிரன் பதிலும் துரியோதனன் சினமும், மொழியும் சம்மதமும்.

1.5.2.8 – விதுரன் தூதும், பாண்டவர் சந்திப்பும், பயணமும்,

1.5.2.9 - மாலை வருணனை

1.6 பாரதியின் கவித்திறம்

1.7 தொகுப்புரை

1.8 மாதிரி வினாக்கள்

1.9 பயிற்சி வினாக்கள்

1.10 மேலும் படித்தறிக.

குறிப்பு

# கூறு – 1
# மரபுக்கவிதை

## 1.1 அறிமுகம்

"எமக்குத் தொழில் கவிதை" என்னும் பாரதியின் வழிவந்தோரும் பாரதிக்கு முன்னோரும் தமிழ்க்கவிதை உலகில் தமக்கென தனியிடம் கொண்டோர் பலர். தமிழ்க்கவிதை 'மரபு' என்னும் சிம்மாசனத்தில் அமர்ந்து கோலோச்சிய நிலையிலிருந்து 'புதுமை' என்னும் மக்களாட்சி முறைக்குத் தடம் பதித்து ஆண்டுகள் பல கழிந்து விட்டன. எனினும் தமிழின் 'மரபும்', 'புதுமையும்' தனக்கான தாக்கத்தை கவிதை உலகில் ஏற்படுத்தாமல் இல்லை. பண்டிதன் மட்டுமே இயற்றிய கவிதைகள் எழுத்தறிவு உள்ள எவரும் கவிதை உணர்ச்சி மட்டும் இருந்தாலே கவிதை எழுத முடியும் என்னும் பரந்த கவிதை உலகிற்குப் பாதை அமைத்து கொடுத்தவர்களுள் மகாகவி பாரதியும் ஒருவர். அம்மகாகவி இயற்றிய 'பாஞ்சாலி சபதம்' என்னும் மரபுக்கவிதை, காப்பியம் பாரதியின் உள்ளத்து உணர்ச்சிக்கு வடிகாலாக விளங்கிய காப்பியம். 'பாஞ்சாலி சபதம்' என்னும் மகாபாரத கதாபாத்திரம் திரௌபதி எவ்வகையில் பாரதியின் பாரதத் தாயின் எண்ணங்களுக்கு உருவம் கொடுக்கும் எழுச்சியாக, புரட்சியாக விளங்குகிறாள். பாஞ்சாலி சபதம் ஐந்து பகுதிகளைக் கொண்டு,'அழைப்புச்சருக்கம்','துரியோதனன் சூழ்ச்சிச்சருக்கம்','சூதாட்டச்சருக்கம்','துகிலுரித்த சருக்கம்','சபதச்சருக்கம்' எனக் காவியத்தன்மையோடு கட்டமைக்கப் பெற்றுள்ளது.

"ஒரு காவியத்திற்குத் தேர்ந்தெடுக்கும் கதைப்பொருள் காவியத்திற்கேற்றவாறு சிறப்புடையதாக அமைதல் வேண்டும். அது வாழ்க்கையின் உயிர்நாடியாகவும் தவிர்க்க முடியாத ஊழ்வலியை உணர்த்தவல்லதாக இருப்பதுடன் மனித அனுபவத்தையொட்டியும் அமைதல் வேண்டும். இவ்விடத்தில் ஆங்கிலத் திறனாய்வாளர் ஆபர்குரோம்சி என்பார் கூறியிருப்பது கவனத்திற்குரியது" என்று டாக்டர். ந.சுப்புரெட்டியர் குறிப்பிட்டுள்ளார். அவ்வகையில்'பாஞ்சாலி சபதம்' ஒரு புதிய பொருண்மையைத் தந்து காவியமாக மிளிர்கின்றது. 'அறம் வெல்லும்','பாவம் தோற்கும்' என்ற வகையில் தொடக்கத்தில் தீயவர்கள் வெற்றி அடையினும், இறுதியில் நல்லவர்களே அறத்தின் பயனை

அனுபவிப்பது உறுதி என்பதையே பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' உரைத்துள்ளது.

குறிப்பு

## 1.2 நோக்கம்

1. மரபுக்கவிதை குறித்து மாணவர்கள் அறிதல் .
2. பாஞ்சாலி சபதம் - காப்பியத்தினைத் தெரிந்து கொள்ளல்.
3. அறச்சிந்தனைகளையும், மறச்சிந்தனைகளையும்அறிதல் - அறத்தின் வலிமையும், மறத்தின் வீழ்ச்சியும்,உலகத்தன்மை கருதியதே என்னும் உண்மையை உணர்தல்
4. மகாகவி பாரதியாரின் கருத்துகளை அறிதல்
5. கவிதைத்திறமும், நாட்டுப்பற்றும், கவிதை உணர்ச்சியும், மாணவர்கள்பெறுதலே இப்பாடத்தின் முதன்மை நோக்கமாகும்.

## 1.3 மரபுக்கவிதை:

"காரிகை கற்றுக் கவிபாடுவதை விடப் பேரிகைகொட்டிப் பிழைப்பது மேல்" எனக் கூறப்படும் கூற்று பழங்கால யாப்பிலான செய்யுட்களுக்கு அல்ல என்கிறது. கவிதை என்பது வேறு. யாப்பிலமைந்த செய்யுள் பாடல்கள் என்பது வேறு. யாப்பிலமைந்த செய்யுள் பல. மருத்துவம், சோதிடம், கட்டிடநூல், இசைநூல் எனப் பலவற்றிலும் உள்ளதை அறியலாம். யாப்பு வடிவம் என்பது வெண்பா, ஆசிரியப்பா, மருட்பா, வஞ்சிப்பா, கலிப்பா, என அமைவன. யாப்பு வடிவில் அமைந்த நூல்கள் எல்லாம் இலக்கியமும் அல்ல. அதனால் இலக்கிய வகையில் யாப்பு என்பது ஒரு கவிதை வடிவம். மொழியின் சிகரமாக விளங்குவது கவிதை. அதில் யாப்புவடிவில் அமைந்த இலக்கியமே கவிதை. இந்த இலக்கிய மொழியானது பன்முகத் தன்மை கொண்டது.

மரபுக்கவிதை பாவகையில் மட்டுமல்ல, ஓசைநயம், அணிநயம், கற்பனைநயம், உணர்ச்சிநயம் கொண்டு சிறந்து விளங்குவது. சங்கஇலக்கியம், பக்தி இலக்கியம், காப்பியங்கள், சிற்றிலக்கியம் என அனைத்து இலக்கிய வகைகளும் யாப்பிலே எழுதப்பட்டவையே. அவற்றையே மரபுக்கவிதை என்னும் கட்டமைப்பில் அடக்குகின்றோம்.

குறிப்பு

'புதுக்கவிதை' என்னும் புதிய இலக்கிய வகையும், வடிவமும், மேற்கத்திய இலக்கியத்தின் தாக்கத்தினால் தோன்றியவை. புதுக்கவிதைக்குப் பின்னும் மரபுக்கவிதைகள் (யாப்புவடிவிலே) எழுதப்பட்டு வரினும் புதுக்கவிதையின் எளிமை பரவலான இலக்கியத் தாக்கத்தை உருவாக்குவதால் பலரும் புதுக்கவிதை எழுதுவதில் ஈடுபாடு கொள்கின்றனர்.

## 1.4 மரபுக்கவிஞர்கள்:

கவிதைமரபில்'மரபுக்கவிஞர்கள்' என அழைக்கப்படுகின்றவர்கள், பாவடிவில் கவிதை இயற்றுபவர்கள். சங்கக்கவிஞர்கள் தொடங்கி வள்ளுவரும், இளங்கோவடிகளும், கம்பரும், ஒட்டக்கூத்தரும், புகழேந்தியும், திரிகூடராசப்பக்கவிராயரும், பாரதியும், பாரதிதாசனும் என நீளும் மரபுக்கவிஞர்கள் பட்டியலில் கண்ணதாசன் வரை பலர் உள்ளனர். அவர்களில் சிலர் பாரதியார் மரபினைப் பின்பற்றியும், பாரதிதாசன் மரபினைப் பின்பற்றியும் கவிதைகள் படைத்துள்ளனர்.

பாரதிதாசன் மரபினராக வாணிதாசன், முடியரசன், சுரதா போன்றோர் குறிப்பிடத்தக்கவர். மரபுக்கவிஞர்கள் தம் கவிதை வடிவிலிருந்து மாறாநிலையில் புதிய சிந்தனைகளைத் தந்துள்ளனர். எனினும் மரபுக் கவிதையிலே சொல்ல இயலாத பலவற்றை எளியமுறையில் புதுக்கவிதையில் கூறும்பொழுது மரபுக்கவிஞர்கள் மறைந்து புதுக்கவிஞர்கள் புற்றீசல் போலப் பெருகத் தொடங்கினர். மரபுக்கவிதையும் புதுக்கவிதையும் ஆகிய இரு வடிவங்களிலும் கவிதைகள் எழுதும் கவிஞர்களும் உள்ளனர். மகாகவி பாரதியார் மரபுக்கவிதையிலே ஆழங்கால் பெற்றிருந்தாலும் புதியன படைக்கும் அவர் கவியுள்ளமே 'வசனகவிதை' என்னும் புதிய வடிவத்தை உருவாக்கியது. அவ்வகையில்புதுக்கவிதைக்குப் புதிய பாதையினைப் பாரதியே அமைத்துக் கொடுத்தார்.

## 1.5 பாரதியார் - அறிமுகம்:

"கவிபாடுவோன் மாத்திரம் கவிஞனல்லன். வாழ்க்கையே கவிதையாகக் - கவிதையே வாழ்க்கையாகக் கொள்வோனே

கவிஞன்." என்று சக்திதாசன் சுப்பிரமணியன் கூற்று மகாகவி சுப்ரமணிய பாரதியாருக்குப் பொருத்தமானது. சுப்ரமணிய பாரதியார், பாரதி என்னும் மகாகவிஞன் 'கண்ணன் பாட்டு','குயில் பாட்டு', 'பாஞ்சாலிசபதம்' ஆகிய முப்பெருங்காவியங்களை இயற்றியவன். விடுதலைப்பாடல்கள், பெண்ணுரிமைச் சிந்தனைக்குரிய பாடல்கள், சுயசரிதம், சமூகச் சிந்தனைகளில் விழிப்புணர்வு ஊட்டும் பாடல்கள் எனப் பல்வேறு பாடல்களையும் 'வசனகவிதை' என்னும் சொல்புதிது, பொருள்புதிது,சோதிமிகு நவகவிதையாகிய புதிய கவிதை வடிவத்தையும் தமிழிற்கு அறிமுகம் செய்தவர். 'சின்னசங்கரன் கதை போன்ற சிறுகதைகளையும் எழுதியவர். 'கோயில் யானை' என்னும் நாடகத்தினையும் இயற்றியவர். பல மொழிபெயர்ப்பு கவிதை, கட்டுரைகளையும் எழுதியவர். சுதேசமித்திரன், இந்தியா, விஜயா போன்ற பத்திரிக்கைளில் பணியாற்றி சுயமாக பத்திரிக்கையையும் நடத்தியவர். காந்தியடிகள் இவரைச் சந்தித்தபொழுது பாரதியைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளுமாறு கூறியதாக வரலாறு பதிவு செய்துள்ளது. விடுதலையுணர்ச்சியைத் தூண்டக்கூடிய பாடல்களையும், கட்டுரைகளையும் எழுதியதால் தமிழ்நாட்டிலிருந்து விரட்டியடிக்கப்பட்டு புதுச்சேரியில் தஞ்சமடைந்தார். புதுச்சேரியில் பாரதி சுதந்திரமாக தன் கருத்துக்களையும், பாடல்களையும் எழுதி வாழ்ந்தார். ஆன்மீகத் தேடலையும் கொண்டார்.

"அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே

உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்

அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே"

என தமிழக மக்களை ஆங்கிலேயரிடம் மட்டுமின்றி இயல்பாகவே அச்சமின்றி வாழக் கூக்குரலிட்டார். பாரதி என்னும் சகாப்தத்தின் பக்கங்களில் 'பாஞ்சாலி சபதம்' என்னும் காவியம் புதிய சிந்தனை கொண்ட காவியமாக விளங்குகின்றது.

### 1.5.1 பாஞ்சாலி சபதம் -படைப்புக் காரணம்

பாரதியார் 'பாஞ்சாலி சபதம்' என்னும் காவியத்தைப் படைப்பதற்கான காரணத்தை முன் வைக்கும் பொழுது தமிழிற்குப் புதிய

குறிப்பு

காவியம் என்பதை விட மகாபாரதத்தின் ஒரு பகுதியைக் காவியமாக்கிட விரும்பினார். 'திரௌபதி' யின் சபதம் பாரதமாதவின் சபதமாக உருமாறியது. கௌரவர்கள் ஆங்கிலேயர்களாக, பாண்டவர்கள் சுதந்திரப் போராட்ட வீரர்களாக, பாஞ்சாலியாகிய திரௌபதி பாரதமாதாவாக மகாகவி பாரதியார் தன் கற்பனைத் திறத்தினால் உருவகமாக்கிப் படைத்திட்ட காப்பியம். தமிழிற்குப் புது வரவாக்கிட பாரதி படைத்திட்ட 'பாஞ்சாலி சபதம்' மகாபாரதத்திற்கு ஒரு புதிய சிந்தனையைத் தந்தது. தமிழகமக்கள்விடுதலை உணர்ச்சியைப் பெற்று ஆங்கிலேயர்களை விரட்டி அடிக்க வேண்டுமென்ற நோக்கம் கொண்டு பாரதியார் பாஞ்சாலி சபதத்தினைப் படைத்துள்ளார் என்பது காரணமாக இருந்தாலும் தமிழிற்குப் புதிய சிந்தனை, புதிய வரவு என்பதே நோக்கமாக இருந்துள்ளது.

"புதிய நெறிப் பாஞ்சாலி சபதம் போலே
தேன் இனிப்பில் தருபவர் யார்? "

என்று பாரதிதாசன் பாடியுள்ளார்.

"நாட்டு வளங்கள் அனைத்தும் நிறைந்த இந்தப் பாரத தேவி, பெண்நலம் அனைத்திற்கும் கொள்கலமாக உள்ள பாஞ்சாலியை நினைவ+ட்டுகிறாள். லாலாலஜபதிராய், திலகர், மகாத்மா போன்ற வீரர்கள் தாயின் துயர் துடைக்க நிற்பதைப் போலப் பாஞ்சாலியின் கணவர்களும் அவள் துயர் துடைக்க நிற்கின்றனர். துச்சாதனன் உரிகின்ற துகிலைப் போல் கொள்ளையர்கள் இப்பாரதத்தாயின் பண்பைக் குலைத்த அவளுடைய உயிர்ச்சத்தைச் சுரண்டிக் கொண்டு இருக்கின்றார்கள். மேலே கூறிய மகாத்மா போன்ற வீரர்கள் ஒரு சிலரைத் தவிர முப்பது கோடி மக்களும் ஆட்டு மந்தைகள் போல் இதனை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த இயல்பு, துரியோதனன் அவையில் கங்கை மகன் (பீஷ்மர்) போன்றவர்கள் வாய்மூடி மௌனியாக இருந்த நிலையை நினைவூட்டுகின்றன" என்று அ.ச.ஞானசம்பந்தன் 'பாரதியும் பாரதிதாசனும்' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

'பாஞ்சாலி சபதம்' தோன்ற காரணமாக இருந்ததன் நோக்கமானது பாரதத்தாயின் விடுதலை என்பதே பாரதி இக்குறுங்காவியத்தை உருவாக்கிட நேர்ந்ததற்கான உண்மைக்காரணம்.

### 1.5.2 முதற்பாகம் - கடவுள் வாழ்த்து.

குறிப்பு

மகாகவி பாரதி கடவுள் வாழ்த்தாக சிவசத்தியையும், சரஸ்வதியையும் வணங்குகிறாா். 'ஓம்' என்னும் மந்திரமாய் பெரியோா்கள் என்றும் ஓதுவா். பழவினைகளை மோதி விரட்டும், தீமைகளை மாய்க்கும், நலம் வாய்க்கும், நாமமும் உருவமும் அற்றதாய், புத்தியானது நாடுவதற்கும் அரியதாய், மனமும் தேடுவதற்கு அரியதாய்,'ஓம்' என்று கூறும் பொருள் அனைத்திலும் வெறும் அறிவுடன் ஆனந்த இயல்புடையதாக நிலைப்பெற்றிடும் பிரம்மம் என்று கூறுவா். அத்தகைய தூய்மையான ஒன்றினை எப்பொழுதும் சிந்திப்பேன். நன்மை தரக்கூடிய தவம், யோகம், சிவஞானமும், பக்தியும் யாவும் என்னை அணுகிடும் வண்ணம் வெற்றியைத் தரும் சிவசக்தியானது என்னை மேன்மையுற செய்யும். இருளானது விலகிட, புகழ் கொண்டு என்றும் விளங்கிடவே இனிமையான இந்நூலினை செய்யும்படி செய்தது.

பாரதியாா் கடவுள் வாழ்த்தில் இரண்டாவதாக சரஸ்வதியைப் போற்றித் துதிக்கின்றாா். வெள்ளைத் தாமரையில் வீற்றிருந்து புகழினைப் பெற்றிருப்பாள். செவிகளையும், மனங்களையும் கொள்ளைக் கொள்ளும் கனி போன்ற சுவையான இசையினை நன்கு கொட்டும் நல்ல யாழினைக் கொண்டிருப்பாள். கள்ளினைப் போன்ற,கடலிலிருந்து பெறப்பட்ட அமுதினை ஒத்த,ஈடிணையில்லாத பூந்தமிழ்க் கவியினைச் சொல்வதற்கே என் பிள்ளைப் பருவத்திலேயே என்னை ஆட்கொண்டு பேண வந்தாள்: அருளினைப் பூண வந்தாள்.

வேதத்திற்கு இருவிழியானவள். அதிலே மிகப் பல 'உரை' என்னும் கருமையை இட்டவள். குளிர்ச்சி பொருந்திய கதிர் மதியாக நெற்றியினைக் கொண்டவள். அவள் சிந்தனை என்னும் குழலினை உடையவள். வாதம் தருக்கமென்னும் இரு செவிகளை உடையதோடு அதில் நல்ல துணிவு என்னும் தோடினை அணிந்தவள். அறிவு என்னும் நாசியினாள், நன்மை மிக பொங்கும் பல சாத்திரமாகிய வாயினை உடையவள். கற்பனை என்னும் தேன் இதழினை உடையவள். சுவைமிக்க காவியம் என்னும் மாா்பினை உடையவள். சிற்பங்கள் முதல் பல கலைகளையும், அழகுமிக்க கரங்களாக கொண்டிருப்பாள். சொல்லின் நயத்தினையும், இசை தோய்ந்திடும் சுவையினை அறிவாா்.

விற்பன குணமுடைய தமிழ்ப்புலவோர் என்னும் அந்த மேலவர்களின் நா என்னும் மலர்ப்பாதங்களை உடையவள்.

குறிப்பு

வாணியாகிய சரஸ்வதியை சரணடைந்தேன். அவள் அருள் வாக்கினை அளித்திடுவாள் என்னும் திடம் கொண்டேன். தவத்தினைப் பேணிய பெருந்தவத்தினள். நிலமே பெயர்ந்து போகினும் தான் பெயர்ந்திடாதவள். அணிகலன்களை அணிந்த மார்பினை உடையவள். அவள் ஐவர்களுக்கு (பாண்டவர்கள்) மனைவியான திரௌபதியின் புகழ் மிக்க இசையினை சிறப்புமிக்க தமிழ்ப்பாட்டால் எடுத்துரைத்திட கலைமகள் என்னை வாழ்த்துகவே.

### 1.5.2.1. துரியோதனன் சூழ்ச்சிச் சருக்கம்

துரியோதனன் சூழ்ச்சிச் சருக்கத்தில் அத்தினபுரத்தின் நகர வருணனையும், துரியோதனன் சபையில் நிகழும் நிகழ்வுகளையும், சகுனியின் சதியினையும், சகுனி திருதிராட்டினனிடம் கூறும் செய்தியினையும் எடுத்துரைக்கும் வகையில் துரியோதனனின் அகமனப் போராட்டங்களையும், அதற்கு பாண்டவர்களை வீழ்த்தும் உபாயத்தினையும் எடுத்துரைத்துள்ளது.

### 1.5.2.2 அத்தினாபுரம் - நகர வருணனை

இவ்வுலகிலே அத்தினாபுரம் என்னும் நாடு உண்டு. அதற்கு உலகத்தில் ஈடுஇணை இல்லை. பகுதி பகுதியாய்ப் பிரித்தது போல வீதிகள் உண்டு. அதில் வெண்மையான பனிச்சிகரம் போல பலப்பல மாளிகைகள் உண்டு. முத்து போன்று ஒளி வீசும் மாடங்கள் உண்டு. எங்கும் வண்டுகள் மொய்க்கின்ற மலர்கள் சூழ்ந்த சோலைகள் உண்டு. சங்குகள் நிறைந்த குளங்கள் உண்டு. அங்கு நாடி வருகின்ற இரதி போன்ற பெண்களும் உண்டு

“அந்தணர் வீதிகளாம் - மறை
ஆதிகளாம் கலைச்சோதிகளாம்.
செந்தழல் வேள்விகளாம் - மிகச்
சீர்பெறும் சாத்திரக்கேள்விகளாம்
மந்திர கீதங்களாம் - தர்க்க
வாதங்களாம் நவநீதங்களாம்
சிந்தையில் அறமுண்டாம் - எனில்

சேர்ந்திடும் கலிசெயு — மறமுண்டாம்”

உண்மைத் தவம் செய்தோர் பலருண்டாம். வெற்று வேடங்களைப் பூண்டவர்கள் பலரும் உண்டாம்.

குறிப்பு

பொய்யான இந்திரசாலம் ஒத்த பூசைகளையும் சடங்குகளையும் புன்மையான நடையும் கொண்டு வெறுப்புமிக்க பொய்ம்மொழிகளையும் பேசி, கண்ணால் மயக்கம் செய்து பிழைக்கின்றவர் பலராவார்.

கழுத்திலே மாலைகள் புரண்டு அசையும் பெரு மலையென திரண்ட தோள்களை உடையவர். வேல், வாள், தண்டு எனப் போர்க்கருவிகள் யாவற்றையும் விரும்பிடுவார். காலையிலும், மாலையிலும் பகையுணர்ச்சியை ஊட்டிடும் தொழில்கள் பலவற்றை பழகி வெம்மையான போர் குறித்த நூலினையும் கற்று தேர்ச்சி அடைவார். யானைகள் நூறினையும் தனியொரு ஆளாக நின்று நொறுக்கிடுவார்.

ஆரியராகிய வேல்மறவரும், புவியினை ஆளுகின்ற கடுமையான தொழில் இனிது உணர்ந்தோரும், சிறப்புமிக்க மதிமுகத்தினை உடையார், மணி போன்ற தேனிதழிலுள்ள அமுதினை நுகர்ந்திடுவார். தேன் போன்ற கள்ளினை அருந்தி, எங்கும் வெம்மையான மதயானைகள் எனத் திரிந்திடுவார். பாரினிலே இந்திரர் போல வளர்ந்திடும் பான்மையைக் கண்டு அவர் வீதிகள் கண்டுபாடுவோமே.

நல்லிசை முழக்கங்களும், பல நாட்டியமாதர்களின் பழக்கங்களும், தொன்மையான இசைக்காவியங்களும் அருந்தொழிலாக விளங்கும் சிற்பமும், ஓவியமும் உண்டாம். கொல்லுகின்ற தன்மையும், ஓசையும் உடைய யானைகளும், கடுமையான குதிரைகளோடு, பெருந்தேர்களும் உள்ளதாம். ‘மல்’ என்னும் குத்துச் சண்டைகளும் போன்ற திறமிக்க செயல்களைப் பார்த்திடுவோர் பலருண்டாம்.

எண்ணுவதற்கு முடியாத நவரத்தின மணிவகைகளும், நன்கு ஒளி வீசிடும் பலப்பல அணிவகைகளும், குளிர்ச்சி பொருந்திய சந்தனங்களும், மலர்கள் தொடுக்கப் பெற்ற மாலைகளும், பலவகையான சுண்ணப்பூச்சுகளும்,நறுமணம் வீசும் புகைகளும், யாவரும் துய்ப்பதற்கு உரிய பலவகையான பண்டங்களும்,

உண்பதற்கான நல்ல கனிவகைகளும் கண்டு மிகுந்த உவகையும் (மகிழ்ச்சி) கேளிக்கையும் ஓங்கினவே.

குறிப்பு

சிவனுடைய நண்பனாகிய வடதிசைக்கு அதிபதியாக (தலைவனாக) விளங்கும் அளகேசன் (குபேரன்) என்றும் அவன் பெருஞ்செல்வம் யாவும் அத்தினபுரத்தின் தெருக்கள் தோறும் புகுந்திருப்பதுவாம். தவம் மிக்க வணிகர்களும், பலவிதமான தொழில்களைச் செய்யும் பெரும் மக்களும், எவருடைய பயமும் இல்லாது இனிமையாக இருந்திடும் தன்மையுடைய எழில் நகரே.

### 1.5.2.3 – துரியோதனன் சபை

'துரியோதனன்' என்னும் பெயருடையான். நெஞ்சிலே துணிவினை உடையான். பணிவு என்பது அறியான். ஆயிரம் யானைகளின் வலிமையைக் கொண்டவன் என்று கவிஞர்பிரான் பெரியோன் வேதமுனியாகிய வியாசர் அன்று பேசிடும்படி வலிமைமிக்க தோளினை உடையவன். எனினும் பகைவர்களுக்கு வெம்மையான தீயினை ஒப்பான்.

"தந்தைசொல் நெறிப்படியே - இந்தத்
தடந்தோள் மன்னவன் அரசிருந்தான்
மந்திரம் உணர்பெரியோர் - பலர்
வாய்த்திருந் தாரவன் சபைதனிலே
அந்தமில் புகழுடையான் - அந்த
ஆரிய வீட்டுமன் அறமறிந்தோன்
வந்தனை பெறுங்குரவோர் - பழ
மறைக்குல மறவர்கள் இருவரொடே
மெய்ந்நெறி உணர்விதுரன் - இனி
வேறுபல் லமைச்சரும் விளங்கிநின்றார்
பொய்ந்நெறித் தம்பியரும் - அந்தப்
புலைநடைச் சகுனியும் புறமிகுந்தார்
மைந்நெறி வான்கொடையாள் - உயர்
மானமும் வீரமு மதியுமுளோன்
உய்ந்நெறி யறியாதான் - இறைக்
குயிர்நிகர்க் கன்னனும் உடனிருந்தான்"

குறிப்பு

கணக்கற்ற பெருங்செல்வமும், அனைத்துலகை ஆட்சி செய்யும் ஆணைச்சக்கரமும் மண்ணிலுடையவர்க்கு பெறுவதற்கு அரிதாகும், கடல் போன்ற பெருஞ் சேனைகளும் கொண்டு விண்ணுலகத்திலே இந்திரன் இன்பம் துய்ப்பது போலப் பெரும் இன்பமும் பெற்றவனாயினும் கண்பார்வையற்ற திருதராட்டிரன் மகன் துரியோதனன் மனம் காய்ந்த (பொறாமையுணர்ச்சி) நெஞ்சுடன் எண்ணுவது கேளுங்கள்.

பாண்டவர்கள் இந்த உலகிலே தம் ஆட்சியினைச் செலுத்தும் நாள் வரை, நான் ஆளும் ஆட்சியும் ஒருஆட்சியாகுமோ? என்னுடைய ஆண்மையும் புகழும் ஓர் பொருளாகுமோ? காண்பதற்குரிய வில்லினை உடைய காளை போன்ற அருச்சுனன் கண்களிலும், வீரமும், தீரமும் மிக்க வீமனின் அகன்ற பெரிய மார்பிலும் என்னுடைய இகழ்ச்சியானது வரையப்பட்டு உள்ளதே.

பாரதநாட்டிலே பாண்டவரின் முதன்மையான தருமனின் முடிசூட்டு விழாவினை, இந்திரபிரஸ்தநகரின் சிறப்பினைக் காட்டிட நாரதன் முதல் முனிவர் அனைவரும் வந்து பங்கேற்கும்படி தருமன் வேள்வி செய்தான். சோரனாகிய யதுகுலத்தைச் சேர்ந்த கண்ணன் சொல்லும் சூழ்ச்சியும், அருச்சுனன், வீமன், நகுலன், சகாதேவன் ஆகிய தம்பிகளின் தோள் வலிமையும் கொண்டு வீரமற்றவனாகிய தருமன் அவனையே வேந்தர்களுக்கெல்லாம் முதல்வனென விதித்தனவே.

பல்லாயிரம் முடிவேந்தர்களும் பதினாயிரத்து ஆயிரம் குறுநில மன்னர்களும் கணக்கற்ற திறையினை (கப்பம்) கொண்டு வந்து வைத்த சிறப்பினை மறந்திட முடியுமோ? தூய்மையான ஆடைகளும், மணிமாலைகளும், பொன்னும் கணக்கிட முடியுமோ? அணிகலன்கள் அணிந்த மடவார்களும் (பெண்களும்), குதிரைகளும் தேர்களும் கொடுத்து சிறிய அளவிலோ?

மேன்மையான பொன் கலசங்களும், சூரியனைப் போல ஒளி வீசும் வைரத்தினால் செய்த மகுடங்களும், மாணிக்கக் குவியல்களும், பச்சைமரகதத்தின் குவியல்களும், நல்ல முத்துக்களும், அணிகலன்களில் பதிக்கப்பெற்ற திருமணிகளும் எனப் பலப்பல,

புதுப்புது வகைகளில் பொலிந்து காணிக்கையாகவே கொணர்ந்தார். அந்தக் காட்சியை மறப்பது எளிதாகுமோ!

குறிப்பு

ஆடகம், பொன், கிளிச்சிறை, சாம்பூநாதம் என நான்குவகை தூய்மையான பசும்பொன்னும், நான்காயிர வகைப் பணக்குவியல்களும்,வேல்வகை, வில்வகை, அம்புவகை, அம்பறாத்தூணிகள், வாள்வகை, சூலாயுதவகை, தடிவகை, பலவகையான தொனிகளை உருவாக்கும் பறைகளும் கொண்டு வந்து வேற்றுநிலத்தைச் சேர்ந்த மன்னர்கள் அங்கு வந்து பணிந்ததை என் உள்ளம் என்றும் மறந்திடுமோ?

“கிழவியர் தபசியர்போல் - பழங்
கிளிக்கதை படிப்பவன் பொறுமையென்றும்
பழவினை முடிவென்றும் - சொலிப்
பதுங்கிநிற் போன்மறத் தன்மையிலான்
வழவழத் தருமனுக்கோ - இந்த
மாநில மன்னவர் தலைமை தந்தார்
முழவினைக் கொடி கொண்டோன் - புவி
முழுதையும் தனியே குடிகொண்டான்”

தம்பியர்களின் தோள் வலிமையினால் தருமன் சக்கரவர்த்தி என்று உயர்ந்ததுவும். மதகரியனாகிய நான் பாண்டவரின் வேள்வியிலே அதைப் புகழ்ந்ததும் ஏற்றுக் கொள்வதற்கு இல்லை. இவ்வுலகத்திலுள்ள மன்னர்கள் அனைவரும் தருமனின் ஆணையை ஏற்று அதனைத் தன் தலைமேல் கொண்டவராய், அளவற்ற பெருஞ்செல்வத்தினை நன்மைமிக்க இந்திரபிரஸ்தம் சபையிலே பொழிந்தனர்.

எவ்வாறு இதனை நான் பொறுத்துக் கொள்ள இயலும்? பாண்டவர்களாகிய இவர்களின் இளமையின் வளமைகள் அறியமாட்டேனோ? குப்பையென முத்துக்களை அலைகலையுடைய கடல் சார்ந்த மன்னர்கள் கொண்டுவந்தார். சிப்பியும் பவளங்களும், ஒளிவீசும் திரண்ட வெண்மையான சங்கின் குவியல்களும்,ஈடு சொல்லமுடியாத வைடூரியமும், கொடுத்து வணங்கி ஒதுங்கி நின்றார்.

குறிப்பு

மறைநாட்டினைச் சார்ந்த மன்னர்கள் பலரும் மானினைக் கொணர்ந்தார். புதுத் தேனினைக் கொணர்ந்தார். மலைக்குதிரையும், பன்றியும் கொண்டு வந்து தந்தார். கலைமான் கொம்புகளும் தொங்குகின்றவான உடைய பெரும் யானைகளின் தந்தமும், கவரிகளும், விலை மதிப்பில்லாத தோல்வகைகளும் கொண்டு வந்து மேலும் பொன்னினை வைத்து அங்கு வணங்கி நின்றார்.

செந்நிறமான தோலினையும் கருந்தோலினையும், அந்தச் சிறப்புமிக்க ஒரு வகை மான் தோலினையும் வெந்நிறமானப் புலியின் தோலினையும், பல வேழங்கள் (யானைகள்) ஆடுகள் இவற்றினுடைய தோலினையும் பல நிறமுடைய தோல்மயிர்களையும், விலை கூற முடியாத அரிய பறவைகள், விலங்கினங்கள் போன்றவற்றோடு பொன்னிறமான பாஞ்சாலி மகிழ்ந்து பூசுவதற்குரிய சந்தனம், அகில் வகைகளையும், ஏலக்காய், கருப்பூரம், நறுமணமிக்க இலவங்கம் (கிரம்பு), பாக்கு போன்றன, நால்வகை சாதிவகைகளையும், அழகுற கொண்டுவந்தே அவர்கள் தருமனிடம் கொட்டி நின்றார், பிறகு தங்கள் கரத்தினைக் கட்டிக்கொண்டு அடிமையாக நின்றார். மேலும் இவ்வுலகத்திலுள்ள பல வேந்தரும் அப்பாண்டவர் விரும்பும் வண்ணம், நான் ஓலமிட்டு அழும்வண்ணம் ஒவ்வொன்றையும் கொணர்ந்து வைத்தனர். அவை என் மனத்தினில் பட்டு உறைத்ததுவே.

மாலைகள் பொன்னும் முத்தும் புனையப்பட்ட மணிவகைகளும் கொண்டு வந்து குவித்தார். அன்ன வேலைப்பாடுகள், சித்திர வேலைப்பாடுகள் செய்த நூறு வகை சேலைகளையும், பொன் இழைத்த சேலைகள் பலவும் தெய்வத் தையலார் விரும்புதற்கேற்ப கொண்டு வந்தார்.அழகிய நல்ல பட்டுத்துணிகளின் எண்ணிக்கையும் கூற இயலுமோ?காலில் அணியும் கழல்களும், கையில் அணியும் கடகங்களும், மணிகள் பதிக்கப்பெற்ற கலசமும், மகுடங்களும், கணக்கற்றவை கொண்டுவந்தார். பல நிறமுடைய குதிரைகளாகிய செந்நிறம், வெண்ணிறம், தழல் நிறம், மேகநிறம், நிழல்நிறம், விண்ணில் தோன்றும் இந்திர வில்லை (வானவில்லை) ஒத்த நிறம்,அழகிய கிளி வயிற்றின் நிறமென ஆரவாரம் மிக்க குதிரைகளைத் தந்தனர்.

காற்றென செல்வதற்கேற்ற,மிக விரைந்து செலுத்துதற்கேற்ற திறன் மிக்க வீரர்கள், போற்றிய கைகளோடு புரவலர்கள் (கொடுப்போர்)

குறிப்பு

பலர் தருமன் சபையிலே கொணரப் புகுந்ததார். சீற்றம் மிக்க போர் செய்யும் யானைகள் பலப்பல மந்தைகளை ஆற்றல் மிக்க வெளிநாட்டு மன்னர்களும் தொலைவிலிருக்கும் அரபியர் ஒட்டகங்கள் பலவும் கொணர்ந்து தந்தார்.

நெய்க்குடங்களைக் கொண்டு வந்தார். வேதங்களில் நியமம் (சடங்குமுறை) பார்ப்பனர் தம் வேள்விக்கு வண்டுகள் மொய்க்கும் கள் வகைகள் யாவும் எடுத்துக் கொண்டு அரசினர் மகிழ்ச்சி அடையும்படியாக அலைமோதினர். தைத்த நற்சட்டைகளும், செம்பொன்னாலாகியது போன்ற சால்வைகள், போர்வைகள், கம்பளங்கள், கைக்குள் அடங்காதவை, காண்பவர் விழிகளுக்குள் அடங்கிடுமோ?

தந்தத்தில் கட்டில்களும், நல்ல தந்தத்தில் பல்லக்கும் வாகனமும், தந்தத்தின் பிடியில் வாளும், அந்தத் தந்தத்திலே சிற்பமும், தொழில்வகையும், தந்தத்தில் ஆசனமும், பிறகு பொன்னும் மணிகளும் இவையனைத்தும் இணைந்து தந்தத்திற்கு ஈடு சொல்ல முடியா நிலையில் இவ்வுலகம் முழுவதற்குமான செல்வமும் தருமனுக்கோ? என்று இவ்வாறு பலப்பல உரைத்து தனக்குத்தானே ஏழையாக இரங்குதலுத்தான். வன்மைத்திறம் கொண்ட கல்நெஞ்சன், வானமே வீழ்ந்தாலும் அச்சம் என்பது இல்லாதவன். குன்றம் ஒன்று குழைவுற்று இளகிக் குழம்பு பட்டு அழிவெய்திடும் (எரிமலைக்குழம்பு) வகையில் பூமியினுள்ளே கனன்று கொண்டிருக்கும் வெம்மையென காய்ந்தெழுந்து வெளிப்படுவது போல நெஞ்சத்திலே பொறாமை என்னும் தீயானது நீண்டு எரிவதால் உள்ளம் நெக்குருகிப் போய், துரியோதனன் நின்றான். அவனிடமிருந்த ஆண்மை, மறம், திண்மை (உறுதி), மானம், வன்மை (வலிமை) யாவற்றையும் மறந்தவனாகி பஞ்சை போன்று பெண்மகளாய்ப் பரிதவித்து, சிறிது நேரத்தில் பாதகத்தோடு கூடிய உறவு எய்தி நின்றான்.

யாறேரினும் எவ்வகையானும்
யாது போயினும் பாண்டர் வாழ்வைத்
தீது செய்து மடித்திட எண்ணிச்
செய்கை ஒன்ற றியான்திகைப் பெய்திச்
சூதும் பொய்யும் உருவெனக் கொண்ட

துட்ட மாமனைத் தான்சரண் எய்தி
ஏது செய்வம் எனச்சொல்லி றைந்தான்
எண்ணத் துள்ளன யாவையும் உரைத்தே"



மன்னர்களுக்கு மன்னனான உதிட்டிரன் (தருமன்) செய்த பெரிய யாகத்தில் வந்து பொழிந்த (குவிந்த) பொன்னும் மணியும் மற்றும் பலவற்றை கண்டும், அதன் தோற்றம் கண்டும் மதிப்பினைக் கண்டும் தன் உள்ளம் அடைந்த நிலையை நற்பண்புகளற்ற (ஈன) மாமனாகிய சகுனி அறிந்திடும் வகையில் முன்பு தன் நெஞ்சிற்குக் கூறிய அனைத்தையும் மூடனாகிய துரியோதனன் தன் மாமன் சகுனியிடம் எடுத்துரைத்தான்.

உலகு தொடங்கிய நாள் முதலாக நம் குலத்திலே புகழோடு விளங்கியவர் தருமனைத் தவிர வேறு எவரும் உண்டோ மாமனே! புகழ் மிக்க மனு முதலிய முன்னோருக்கு இவ்வகையான பொருள் ஏற்றமும் மாட்சிமையும் (சிறப்பும்) உண்டோ மாமனே!

கலைகளை நன்கறிந்த வேதியர்கள், பாவலர்கள் செய்த பழங்கற்பனைக் காவியங்கள் பலவற்றையும் கற்ற மாமனே! அக்கதைகளிலும் தருமனைப் போல பல கடல் கடந்த நாடுகளையும் வென்றதைச் சொல்லப் பார்த்து உண்டோ? கதை கேட்டதுண்டோ! கூறுவாயாக மாமனே!

எதனை உலகில் மறந்தாலும் பாண்டவர் செய்த யாகத்தினை நான் என்றும் மறவேன். பொருட்களின் குவியல்கள் பெரிதில்லை: அந்த வேள்வியில் என்னை வெறுப்படையும் படி செய்த வேறு நிகழ்வுகளும் பலவுண்டே மாமனே! இவற்றையெல்லாம் அவ்விழியற்ற தந்தையிடம் சென்று சொல்லி, பாண்டவர்கள் மீது பகை மூளும்படி செய்வாய். கட்டற்ற அன்பினை அவர் மீது கொண்டுள்ளார். அவர் செவியில் படும்படியாக, பாண்டவர் வேள்வியினைக் கண்டு என் உயிர் புண்படும் செய்தியினை விளம்புவாயாக!

கண்ணைப் பறிக்கும் அழகுடையார் இளமங்கையர் பலர் விருப்பமிகு பொன்னால் ஆகிய மணிகள் பதிக்கப் பெற்ற அணிகலன்கள் அணிந்தவர் தம்மையே மண்ணினைக் காக்கும் மன்னர்கள் பாண்டவரின் வேள்வியில் கொண்டு வந்து வாழ்த்தி அளித்தனர். எண்களையே பழிக்கும் அளவிற்கு எண்ணிக்கையற்ற இளம் மைந்தர்களை அவர்களின்

தொண்டு செய்வதற்கு தந்தனர். விண்ணைப் பிளக்கும் ஒலி செய்யும் சங்குகள் ஊதினர். தெய்வத்தைப் போற்றும் வேதியர் மந்திரத்தோடு பல வாழ்த்துக்களை ஓதினர்.

நாரதனும், வேதவியாசனும் மற்றும் அரிய பெரிய முனிவரும், பெரிய ரதங்களைக் கொண்ட அவ்வீரர் அப்பாண்டவர் வேள்விக்கு வந்ததும். அவர்களுக்கு பெரிய ஆசிகள் கூறிப் பெரும் புகழ்தந்ததும், வீர்தம் போரின் அரிய நற் சாத்திர வாதங்கள் பலவற்றை அந்தணர் தம்முன் விளக்கமளித்திட அதனைக் கேட்டு உதிட்டிரனாகிய தருமனும் வியந்து நின்றான். அவர்களுக்கு தங்கத்தினை மழையாய்ப் பொழிந்து மகிழ்வினைத் தந்ததும் மறக்கமுடியா நிகழ்வுகள்.

அந்தணராகிய நால்வருணத்தைச் சேர்ந்தவரும் துய்ப்பதற்கேற்ற நல்ல விருந்தினை அளிப்பதற்கு அளவற்ற பொன்னினைச் செலவிட்டதும், என் பிறவியிலே இதுபோன்ற வேள்வியினை விருந்தினை இவ்வுலகில் எங்குமே கண்டது இல்லை. விருந்தினராக வந்த அனைவருக்கும் அவரவர் தகுதிகள் கண்டு தக்க சன்மானம் அளித்து கணக்கற்ற பொருளினை வாரி வழங்கியதும் விழியற்ற என் தந்தைக்கு உரைத்து, அவன் மகனாகிய நான் அத்தகைய செல்வம் பெறாவிடில் செத்திடுவான் என்றும் செப்பிடுவாயாக!

அண்ணன் மைந்தனாகிய நானே இவ்வுலகினை ஆளுவதற்கு உரியவனன்றோ? அப்பாண்டவர்களே எம்மைப் பற்றி நின்று எமக்கு அடிமையாய் இருத்தல் வேண்டுமன்றோ? செய்த வேள்வியில் எவருக்கு முதன்மை அவர் தந்தார்?அந்தப்பாண்டவர்நம்மைப்(கௌரவர்கள்) புல்லென எண்ணுவதைப் பார்த்தாயோ?

கண்ணனுக்கு முதல் உபசாரங்கள் காட்டினார். கண்ணிலாத் தந்தைக்கு இச்செயலின் பொருளினைக் காட்டுவாய். மண்ணில் வேந்தனுக்கு முற்பட்டவராக கண்ணன் எவ்வாறு உயர்ந்தான்? என்றன் மாமனே! கண்ணன் எவ்வகையில் நம்மை விட உயர்ந்தவன் என்று கூறுவாயாக.

சந்திரகுலத்தில் பிறந்தோர் நம் தலைவன் என்று உலகமெல்லாம் சொல்லும் வார்த்தை மெய்யோ? பொய்யோ? தந்திரமாகிய தொழில் செய்யும் சிறுவேந்தனை (கண்ணன்) இவ்வுலகத்து மன்னருக்கும் மேலாக

குறிப்பு

வைத்திடல் சரியானதோ? மந்திரத்தினால் அச்சிசுபாலனை மாய்த்திட்டார். இந்த உலகில் விருந்தினராய் (அதிதி) வந்தோரைக் கொல்வது மரபு உண்டோ? இந்திரத்துவம் பெற்றிவர் வாழும் நெறி நன்றே! இதை எண்ணி, எண்ணி என் நெஞ்சு கொதிக்குது மாமனே!

சதி செய்தார்க்குச் சதி செயல் வேண்டும் என் மாமனே! இப்பாண்டவர் தாம் என் அன்பிற்குரிய சராசந்தனுக்கு எவ்வகையான முடிவினைத் தந்து விதி செய்தார்? அதை என்றும் என் உள்ளம் மறக்குமோ? இந்த உலகத்திலிருப்போர் அவற்றையெல்லாம் மறந்துவிட்டனர். இ∴தோர் விந்தையே! வெறும் சொல்லுக்கே அறநூல்கள் துணிவினை உரைக்கும். பொருள் உள்ளவரையே இம்மானிடர் பணிவர். அது எந்நெறியாயினும் இவ்வுலகம் அவர்களை துதி செய்தே அடிநக்குதல் கண்டனை மாமனே!

பொற்றடந் தேரொன்று வாலிகன் கொண்டு விடுத்ததும் - அதில்
பொற்கொடி சேதியர் கோமன் வந்து தொடுத்ததும்
உற்றதோர் தம்பிக்குத் தென்னவன் மார்பணி தந்ததம் - ஒளி
ஓங்கிய மாலைஅம் மாகதன்தான் கொண்டு வந்ததும்
பற்றலர் அஞ்சும் பெரும்புகழ் ஏகலவியனே — செம்பொன்
பாதுகை கொண்டு யுதிட்டிரன் தாளினில் ஆர்த்ததும்
முற்றிடும் அஞ்சனத்திற்குப் பலபல தீர்த்தங்கள் - மிகு
மொய்ம்புடையான் அவ்அவந்தியர் மன்னவன் சேர்த்ததும்"

தருமனுக்கு வேதவியாசன் மஞ்சனநீரினை (அபிஷேகதீர்) பொழிந்ததும், பல வைதிகர் ஒன்றுகூடி நல்ல மந்திர வாழ்த்தினை மொழிந்ததும், யானைகளுடைய சாத்தகி வெண்கொற்ற குடையினைத் தாங்கிடவும், வீமனும் இளங்கொற்றவனாகிய அருச்சுனனும், பொன்னாலாகிய விசிறியினை வீச, இரட்டையர்களாகிய நகுலனும், சகாதேவனும் சாமரை வீச, கடல் பகுதியினை ஆட்சி செய்யும் மன்னன் ஒருவன் கொடுத்த ஓர் தெய்வீகச் சங்கினில் வஞ்சகனாகிய கண்ணன் புனிதமிக்க கங்கை நீரினைக் கொண்டு திருமஞ்சனம் செய்யும் பொழுது எவரும் மகிழ்ச்சி அடைந்தனர்.

இந்நிகழ்வுகளையெல்லாம் கண்டு எனக்கு மூச்சினை அடைத்ததடா மாமனே! சபைநடுவிலே நான் விழுந்து மயக்கம்

குறிப்பு

அடைந்ததும் கண்டனையே என்றன் மாமனே! அங்கு யாவரும் என்னைக் கேலி செய்து கொண்ட நகைப்பினையும் எண்ணுவாயோ! அந்த திரௌபதியானவளும் என்னைக் கண்டு சிரித்தாள். இதை எண்ணிப் பாராயோ! பேச்சை வளர்த்துப் பயனொன்றும் இல்லை என் மாமனே! அவர் சிறப்பினை அழிக்க உபாயம் சொல்லுவாய் என்றன் மாமனே! தீச்செயல் நற்செயல் எதுவாயினும் நாம் ஒன்றிணைந்து அவர்களுடைய செல்வத்தினைக் கவர்ந்து நடுத்தெருவிலே அவரை விடவேண்டும் என்றன் மாமனே!

### 1.5.2.5. சகுனியின் சதி

துரியோதனன் கூறியது கேட்டு சகுனி இன்றைக்கே வெற்றியைத் தருவேன். எதற்காக இத்தனை வீணான சொற்களை வளர்க்கின்றாய்? நான் ஒரு உபாயம் கூறுகின்றேன். அதை ஊன்றிக் கருத்தோடு கேட்க வேண்டும். ஒரு தெய்வமண்டபம் போன்ற ஒன்றை உருவாக்கி, அதனைக் காண நீங்கள் வரவேண்டுமென்று பாண்டவர்களை அழைத்து நாம் கொண்ட எண்ணத்தை முடிப்போம். அவர்களை சூதிற்கு வரவழைத்து நம்மோடு போட்டியிடச் செய்வோம். அந்த சூதாடும் நாழிகையிலே (நேரத்திலே) அவர்களுடைய மிகுதியான பொருள் யாவற்றையும் இழக்கச் செய்து உனக்கு அடிமையாக ஆக்கிடுவேன். என்றன் சூதாட்டத்தின் வலிமையை நீ அறியாயோ!

போர்க்களத்தில் போர் செய்திடுவோம் என்றால் அதில் வெற்றியும் தோல்வியும் எவரே கண்டார்? அந்தப் பாண்டவர்கள் வீரம் பெரிது தான். பார்த்தனாகிய அருச்சுனன் வில்லிற்கு எதிருண்டோ? உன்னுடைய நெஞ்சத்தில் சூதாட்டத்தினை இகழ்ச்சியாகக் கொள்ள நீதியில்லை. பெருஞ்சூதினால் வெற்றி கொண்டு பகையினை அழித்துள்ளார்கள். நாட்டையும் குடிமக்களையும் அவர்களின் பொருளையும் எண்ணி இவ்வுலகத்தோர் கொடுமையான போர் செய்து ஓடுகின்ற குருதியினைத் தேக்கமுடியுமோ? உற்றாரின் சதைப் பிண்டத்தைக் கண்டு களிக்கவோ? அந்த நாடும் குடிகளும் செல்வமும் ஒரு நாழிகைப் பொழுதில் சூதினால் வெல்வதற்குக் கூடுமென்றால் பிறிது வேறு எண்ணுவதற்கு என்னவுண்டு. இதுவே என் கொள்கை என்று சகுனி கூறினான்.

குறிப்பு

இதனைக் கேட்ட துரியோதனன், மாமனைப் பார்த்து, மனதிற்கு நயமான வார்த்தைகளைக் கூறினாய் மாமனே என்று சங்கிலிப் பொன்னின் மணியிட்ட ஒளிவீசுகின்ற மாலையினைச் சகுனிக்குச் சூட்டினான். பின்னர் எங்கும் இப்பூமியில் உன்னைப் போல எனக்கு எவரும் நன்மை (இனியது) சொல்வோர் இல்லை மாமனே என்று பொங்கும் உவகையில் மார்புறக் கட்டிப் பூரித்து விம்மித் தழுவினான்.

### 1.5.2.5. – சகுனி திருதிராட்டிரனிடம் கூறுதல்:

துரியோதனன் சகுனி இருவரும் கலந்து உரையாடிய பின் அருமந்திரக் கேள்வி உடைய அமைச்சர்களும், மற்றவர்களும் வீற்றிருக்கும் அரசனுடைய சபையாகிய திரிதராட்டிரன் சபையை நோக்கிச் சென்று மன்னனை வணங்கினர். சகுனி திருதராட்டிரனிடம், மதிப்பிற்குரிய மன்னனே! உன்மகன் கூறுவதைக் கேட்பாயாக! துரியோதனன் உடல் வற்றிப் போய்த் துரும்பினைப் போல இருக்கின்றான். உயிர் வாழ்க்கையை முற்றிலும் வெறுத்துள்ளான். சுவையான உணவினை உண்ண மறுக்கின்றான். உடுத்துவதும் உயர்வாக உடுத்துவது இல்லை. தன் நண்பர்களோடு கலந்து பேசிடாது உள்ளான். இளம் பெண்களைச் சிந்தை செய்திடான். உன் பிள்ளையானவன் பசலை நோய் கொண்டு இருப்பவன் போல் உள்ளான். காரணம் யாதென்று திண்மையான யானையின் தடம் போன்ற தோளினை உடைய மன்னனே நீ கேட்பாயாக! என்று தீய சகுனியும் கேட்டான்.

துரியோதனனின் தந்தையாகிய திருதிராட்டிரனும் சகுனியின் உரை கேட்டு, உள்ளம் மிகவும் குன்றி வருந்தியே – என்றன் மைந்தனே! உனக்கு வருத்தமேன். இவன் வார்த்தையில் எதுவும் பொருளுண்டோ? உனக்கு எந்தவகையில் குறை வைத்திட்டேன். உன்னை யாரும் எதிர்த்திடுவாரும் உண்டோ? உன்றன் சிந்தையில் எண்ணும் பொருளையெல்லாம் உடன் தேடிக் கொடுப்பவர் எவரும் இல்லையோ?

குறிப்பு

"இன்னமு தொத்த உணவுகள் - அந்த
இந்திரன் வெ∴குறும் ஆடைகள் - பலர்
சொன்ன பணிசெயும் மன்னவர் - வருந்
துன்பந் தவிர்க்கும் அமைச்சர்கள் - மிக
நன்னலங் கொண்ட குடிபடை - இந்த
நானில மெங்கும் பெரும்புகழ் - மிஞ்சி
மன்னும் அப்பாண்டவச் சோதரார் - இவை
வாய்ந்தும் உனக்குத் துயருண்டோ?

திருதிராட்டிரன் கூறிய வசனம் கேட்டு அரவக் கொடியைக் (பாம்பின் கொடி) கொண்ட துரியோதனை வெம்மையான தீயினைப் போலச் சினம் கொண்டு தன்னை மீறிப் பல சொற்களைக் கூறினான். சகுனியோ! திருதிராட்டிரனிடம், துரியோதனன் அறிவற்றவனாக கூறும் சொற்களை, மனம்கொண்ட வெம்மையினால் கூறும் சொற்களைப் பொறுத்துக் கொள்ளுமாறு கூறினான். துரியோதனன் தன்னுடைய உள்ளத்தின் குறைகளையெல்லாம் உன்னுடைய அவையில் சொல்லிட என்னையும் வேண்டினன். நான் அவனைஇவ்விடத்திற்கு அழைத்து வந்திட்டேன். பிள்ளை நல்விதமாகவே சிந்தை செய்கிறான். ஆனால் சொல்வதற்கு அறிந்திலன். அவன் மனதைத் தின்னும் கொடுந்தீயினைப் போன்ற நிலையில் எவரே தெளிவாக உரைத்திட இயலும்?

நீ பெற்ற புதல்வனே துரியோதனன். ஒரு தீபத்தில் சென்று கொளுத்திய பந்தமானது தன் ஒளி குறைய எரியுமோ? பொருளினைப் பெருக்கிடும் தாபத்தை (தாகத்தை) நெஞ்சினில் வளர்த்திடல் மன்னர்களின் சாத்திரத்திலே முதல் சூத்திரமாகும். அதனினும் ஆபத்து அரசருக்கு வேறுண்டோ? அதுவும் பகைமன்னரின் செல்வம் தம்மிடம் மிகுதல் போல.... ஆபத்து அரசருக்கு வேறுண்டோ?

பாண்டவர்கள் தம் வேள்வியில் முடிந்தவரை குறை செய்தனர். ஒரு கேள்வியிலே உன் மகனாகிய துரியோதனனைக் கேலி செய்து நகைத்தனர் கண்டாய்? இந்தப் பூமியை ஆள்வது முன்னோருக்கு அன்றி புகழ்மிக்க இளையோருக்குக் கொடுத்தல் என்ற நிலையில் வாள் போன்ற விழி கொண்ட மாதர்களும் நம்மையே வலிமையற்ற மக்கள் என்றெண்ண நகைத்திட்டார்.

குறிப்பு

ஆயிரம் யானைகளின் வலிமையைக் கொண்டவன் உன்னுடைய மைந்தன் துரியோதனன். இந்தப் பரந்த உலகத்திலே உயர்ந்ததாக விளங்கும் நிலவினைப் போல முதன்மையானவன். ஒளி வீசுகின்ற ஞாயிறு இருக்கும் பொழுது மின்மினி போன்ற நட்சத்திரத்தை நாடித்தொழுதிடுவது போல பாண்டவர்கள் கண்ணனை அந்த யாகச்சாலையில் முதன்மை தந்தார்.

உன் மகன் துரியோதனனுக்கு முதன்மை இல்லை காண். இந்த உலகத்தினர் வியப்பெய்து வண்ணம், புவியிலுள்ள மன்னவர் சேர்ந்த சபையிலே, மிகச் சிறப்பான முதல் பூஜையானது கண்ணனுக்குத் தந்தார். உன்னுடைய புதல்வனைப் பணி செய்யவும், கேலிகள் செய்யவும் வைத்தனர் பாண்டவர்.

பாண்டவர்கள் பெற்ற செல்வத்தைத் தானும் பெற விரும்புகின்றான். இப்பூமியினை ஆளும் பாரத்தை விரும்பிப் பெற விழைகின்றான். உங்கள் புகழானது, ஆணைச்சக்கரமானது இவ்வுலகம் முழுவதும் செல்வதைக் கேட்க விரும்புகின்றான். அரசகுலம் கொண்ட பெருமை கெடாதவாறு காக்க பொங்குகின்றான். தங்கள் நன்மையையே நாடுகின்றான். தங்கள் மகனாகிய துரியோதனனுக்கு இது தகுமன்றோ? இல்லையென்றால் இவ்வுலகம் நகைக்குமன்றோ? உயர்ந்த கல்வியறிவுடையோர் போற்றும் கங்கையாறு தன்னிடமுள்ள நீரினை நிதமும் கடலில் கொண்டு சேர்க்குமாம். அக்கங்கையாறு விணாகப் பொருளினை அழித்திடுமோ? ஒரு சத்தமில்லாத நடுக்காட்டினில் நீர் தங்கி நிற்கும் குளம் ஒன்று உண்டாம். அது தான் வைத்திருக்கும் நீரைப் பிறர் கொள்வதற்கும் பயன்படுத்துவதற்குமின்றிப் பாசி படிந்தே மூடியிருக்குமாம். சூரிய வெப்பம் படாது மரம் சூழ்ந்த மலையடிவாரத்திலே உள்ள நீரினை தினமும் காக்குமாம். இந்த நீண்ட சுனை போலவே பலருண்டே? ஆட்சிக்குரியோர் தம் செல்வம் வளர்வதற்கே ஆயிரம் வழிகளை புதியதாய்க் கண்டு அதனை மேலும் பெருக்குவர். இந்த தந்திரமும் நீ அறியாததோ?

குறிப்பு

### 1.5.2.6 சகுனி திருதராட்டிரனிடம் கூறுதல்:

கள்ள மனமுடைய சகுனியும் இவ்வாறே பல கற்பனைகளைக் கூறி, தன் உள்ளத்தின் பொருள் திருதிராட்டிரனுக்குப் பொருள் கொள்ளும்படியாகக் கூறினான். பெருங்கோபத்தோடே திருதிராட்டிரன் தன் மகன் துரியோதனனை நாசம் செய்யவே பேயென வந்து தோன்றியிருக்கின்றாய். பெருவெள்ளத்தினைப் புல்லொன்று எதிர்க்குமோ? இளமையோடு உள்ள வேந்தர்களை நாம் வெல்வது இயலுமோ?

சகோதரர்களுக்கிடையே பகை என்பது உண்டோ? ஒரு சுற்றத்தினருக்கிடையே (உறவினர்) ஒரு பெரும் பகையோ? நம்மோடு அவர் இணைந்தவர் அல்லவோ? முன்பு ஆயிரம் சூழ்ச்சிகள் துரியோதனன் செய்தும் அந்தப் புகழுக்குரியோன் அருளால் அன்றி சிறந்த ஒழுக்கத்தினாலும் தன் தோள் வலிமை கொண்டும் எந்தவொரு தீங்குமின்றி பிழைத்து எண்ணுதற்கரிய கீர்த்தியினைப் பெற்றனர் அன்றோ?

பிள்ளைப் பருவத்திலிருந்தே துரியோதனனாகிய இந்தப் பித்தன் பாண்டவர்களுக்குப் பெரும் பகையினைச் செய்து, பெரும்பழியினைக் கொண்டதன்றி நன்மை சிறிதும் இல்லை. மனதளவில் கூட எவருக்கும் தீங்கு செய்யாத அவர்களைப் பற்றி நொள்ளைக் கதைகள் கதைக்கின்றாய். நூலின் பொருளைச் சிதைக்கின்றாய்.

மன்னவர்க்கு நீதியினைச் சொல்லவந்து விட்டாய். மாமலையினைச் சிறிய மண்குடம் தனக்குள் கொண்டுவிடுமோ? அவ்வாறு கூறிய நூலினைச் சற்றுக் காட்டுவாய். விண்ணிலே சூரியன் போல நிகரின்றியே புகழோடு விளங்கும் புவியிலுள்ள மன்னர்களெல்லாம் உடன் பிறந்த சகோதரர் போலவும் தந்தை எனக் கருதி என்னைப் பணிந்து என் சொல்லிற்கு அடங்கி நடக்கின்றனர்.

முன்பு துரியோதனன் செய்த தீமையனைத்தையும் (பாண்டவர்) முற்றும் மறந்துவிட்டு தன்னையே தின்பதற்கு வருகின்ற தவளையைக் கண்டு சிங்கம் சிரித்து அருள் செய்வது போல் துணையென்று துரியோதனனை மதிக்கவும் அவர் ஏற்றத்தினைக் கண்டும் அச்சமின்றி பகை கொள்ளும் எண்ணம் கொண்டு பிதற்றுகின்றாய்.

குறிப்பு

ஒப்பற்ற வலிமையோடு துணையாக உள்ளவரை பகைத்தல் உறுதியோ? நமக்குப் பிழை செய்தார் என்று அவர் நடத்திய வேள்வியிலே என்று தந்திரம் எவரிடம் செய்கின்றாய். மயக்கம் கொண்டு விழி தடுமாறியே துரியோதனன் அங்குமிங்கும் விழுந்தாடுவது கண்டு, அந்த மைத்துனியாகிய திரௌபதி சிரிப்பதில் என்ன தோஷம் வந்ததோ?

தவறி விழுகின்றவர் எவராயினும் சிரிப்பது மரபே. அவ்வாறெனில் துரியோதனனைக் கண்டு பாண்டவராகிய துணைவர் சிரித்த செயலானது சொல்ல முடியாத பாதக செயலாகுமோ? மனக்கவலை வளர்த்திட வேண்டுவோருக்கு ஒரு காரணமும் தேவையோ?

வேற்று அவலமான (சோகமான) மொழிகளை எண்ணுவதும் ஏன்? ஆயிரஞ் செயல்கள் செய்வதற்கு உள்ளபோது ஏன் இவ்வாறு வெற்றுமொழிகளைக் கூறிக் கொண்டு?

சின்னஞ்சிறு வயதிலே துரியோதனன் தீமைகள் பல செய்தது கண்டு, அதனைப் பொருட்படுத்தாது, என்னுடைய மகன் என்று எண்ணியே தங்கள் யாகத்திற்கு இவனையே தலையாகக் கொண்டு பசும்பொன்னை நிறைத்த ஓர் பையினை மனம் போலச் செலவிடுவாய் என்றே தந்தனர். பல மன்னரும் காணும் வகையில் இவனுக்கே தம்முன் மாண்பினைக் கொடுத்தனர் அல்லவோ?

கண்ணனுக்கு ‘முதல் பூஜை செய்தனர் என்று பழித்தாயே! நாடி வரும் விருந்தினருக்கு அன்றி நம்மிடையே நாம் உபசாரங்கள் செய்வதோ? நாம் அண்ணன் தம்பியுமாக உறவு கொண்டநிலையில் பாண்டவர் நம்மை அந்நியமாகக் கொள்ளவில்லை. முகில் வண்ணனாகிய கண்ணன் வந்த விருந்தினர்களில் மாண்புடையவனாக உள்ளவன் என முதன்மை செய்திருப்பர்.

கண்ணனுக்கு அது உரியது என்று உயர்ப்பண்பு கொண்ட கங்கை மகனாகிய வீடுமனைக் கொண்டு சொல்லச் செய்தனர். இதனைச் செய்யக் கூடாத பாவம் என்று எண்ணினால் அதன் பாரம் அவரையே சாருமோ?

பின்னும் கண்ணனைத் தவிர வேறு பல மன்னர்களில் எவர் அத்தகுதியைப் பெறுவதற்கு உரியவர்?

குறிப்பு

ஆதிப்பரம் பொருளாகிய நாராயணன், தெளிந்த பொற்கடலாம் பாற்கடல் மீதிலே நல்ல ஒளி வீசும் ஆயிரம் தலை ஆதிசேஷன் என்னும் பாம்பணை மேல் பள்ளி கொண்டு துயில் கொள்பவனே, குளிர்ச்சி பொருந்திய குவளை மலர் போன்ற விழியினை உடைய கண்ணனாக பிறந்தான் என உண்மை அறிந்தோர் கூறுவர்.

'நான்' என்னும் ஆணவத்தைத் தள்ளுவதும், இந்த உலகத்தையே 'தான்' எனக் கொள்ளுதலும் பரமோன ஞானநிலையினை அடைதலும், முக்காலத்தையும் கடத்தலும், நடுநிலையோடு அறங்கள் செய்தலும், உயிர் யாவற்றிற்கும் நல்லருளினைத் தருதலும், பிறர் ஊனினைச் சிதைத்தாலும் தன் உள்ளத்தின் அருளால் வருந்துதலும், ஆயிரம் கால முயற்சி பெற்றாலும், பெறுதற்கரிய பேறுகளைப் பெறுவர் ஞானியர். இதனைத் தாயின் வயிற்றில் பிறக்கும் பொழுதே சார்ந்து பெற்றராரென்றால் இந்த பரந்த உலகமானது அவரைத் தெய்வத்தின் அருள் பெற்றாரென்றே போற்றிடும். ஒரு பேயிடம் வேதம் ஓதுவது போல் கண்ணன் பெருமையினை உன்னிடம் எவர் எடுத்துரைப்பார்?

**1.5.2.7. திருதிராட்டிரன் பதிலும், துரியோதனன் சினமும், பதிலும்:**

திருதிராட்டினன் கூறியது கேட்டு துரியோதனன் சினம் கொண்டு

" வெற்றிவேற்கைப் பரதர்தங் கோமான்
மேன்மை கொண்ட விழிய கத்துள்ளோன்
பெற்றி மிக்க விதுரனறிவைப்
பின்னும் மற்றொரு கண்ணெனக் கொண்டோன்
முற்றுணர் திரிதராட்டிரன் என்போன்
மூடப் பிள்ளைக்கு மாமன்சொல் வார்த்தை
எற்றி நல்ல வழக்குரை செய்தே ஏன்றவாறு
நயங்கள் புகட்ட"

கொல்லுகின்ற நோய்க்கு மருந்து செய்யும் பொழுது கூடுகின்ற வெம்மையினால் துன்பமுற்றே மருத்துவன் தான் சோர்வுறுதல் போல ஒரு தந்தை சொல்லும் வார்த்தையிலே அச்சமுறாது தீங்கு செய்யும்

மதியினை உடையவன். கல்லுக்கு ஈடாக தந்தையின் பேச்சினை மதியாது கடுங் கோபமுற்றான்.

குறிப்பு

பாம்புக் கொடியினைக் கொண்ட துரியோதனன் பாம்பெனச் சீறிக் கூறினான். தான் பெற்ற மகனுக்குத் தீங்கு செய்திடும் தந்தை இவ்வுலகில் எங்கேனும் உண்டோ? வேம்பினைப் போன்று என்னை எண்ணுகிறான். ஆனால் பாண்டவரோ சுவை மிக்க சர்க்கரை. அவர் தீமை செய்தாலும் புகழுகின்றான். அவர்கள் செல்வங்கள் சேர்த்தால் என்னை இகழுகின்றான்.

மன்னர்களுக்கு நீதி என்பது ஒரு வகை. மக்களுக்கு நீதி மற்றொரு வகை எனக் கூறிய குருபகவானை (திருதிராட்டிரன்) இவன் சுத்த மடையன் என்று எண்ணியே மற்றும் என்னென்னவோ கதை சொல்கிறான். ‘உறவு’ என்றும் ‘நட்பு’ என்றும் கதைக்கிறான். அவர் அடையாளம் பெறுவதற்கே அறிவற்ற செத்தை (குப்பை) என என்னை நினைக்கின்றான்.

இந்திரனுக்குரிய போகங்கள் என்று கூறுகிறான். உணவினால் உண்டாகும் இன்பமும், மாதர்களினால் பெறும் இன்பமும் இவன் (திருதிராட்டிரன்) மந்திரமும், படையும் அதன் பெருமையும் கொண்டு வாழ்வதை விட்டுவிட்டு பிறர் செல்வ வளமை கண்டு வீணாக வெம்பியே உள்ளம் தேம்புதல் பேதமை என்கிறான். மன்னரின் தந்திரம் தேர்ந்தவர்களிலே என் தந்தை போல எவருமில்லை காண்.

பெண்கள் மூலமாக கிடைக்கும் இன்பம் எனக்கு (துரியோதனன்) என்றான். இப்புவியை ஆளுகின்ற ஆட்சி அவருடையது என்றான். சாதமும், நெய்யும் எனக்குரியது என்றான். எங்கும் போற்றிடும் புகழ் பாண்டவர்களுக்கு உரியது என்றான். பிள்ளையிடம் இவ்வாறு ஆதரவு காட்டும் அப்பன் உலகினில் இங்கே உண்டோ? சகோதரராகிய பாண்டவர்களை தந்தையே நீ குறை சொல்வதற்கு இடமேயில்லை.

“சொல்லின் நயங்கள் அறிந்திலேன், உனைச்
சொல்லினில் வெல்ல விரும்பினேன், கருங்
கல்லிடை நாருரிப் பாருண்டோ? நினைக்
காரணங் காட்டுத லாகுமோ? — என்னைக்
கொல்லினும் வேறெது செய்யினும் நெஞ்சில்

கொண்ட கருத்தை விடுகிலேன் அந்தப்
புல்லிய பாண்டவர் மேம்படக் கண்டு
போற்றி உயிர் கொண்டு வாழ்கிலேன்".

குறிப்பு

உன்னோடு வாதம் புரிந்திடேன். ஒரு வார்த்தை மட்டும் சொல்ல கேட்க வேண்டுகிறேன். ஒரு தீது நமக்கு வாராமலே, வெற்றியை அடைவதற்கு ஓர் வழி உண்டு காண். சூதாட்டத்திற்கு அவரை அழைத்து அவர்கள் தோற்குமாறு செய்யலாம். இதற்கு ஏது நீ தடைகள் சொல்லாமலே, என் எண்ணத்தை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும் தந்தையே என்று துரியோதனன் கூறி முடித்தான்.

திருதிராட்டிரன் துரியோதனன் சின மொழிகள் கேட்டு செவியில் தீமொழி புகுந்தது போல திகைத்து விட்டான். கொடும் பேயெனப் பிள்ளைகளைப் பெற்றுவிட்டேன். மிகப்பெரும் துயரித்தினைக் கொண்டு வந்தாய். பாண்டவரோடு போர் புரிவது அவலம் என்றேன். இச்செயல் நரி தாக்குவது போலாம். இந்த நாணமற்ற செயலினை எவரும் செய்வாரோ? இந்த ஆண்மை இல்லாச் செயலை ஆரியர் செய்வாரோ? எண்ணுவரோ? இந்த உலகினிப் பிறருடைய உடைமையை கவரும் பதரினைப் போலொரு பதருண்டோ? பெரிய செல்வங்களும், புகழும், பெருமையும் பெற விரும்பினால் செய்யும் செயல் இதுவாகுமோ? என்றன் காளையாகிய நீ இவ்வாறு கருதலாமா?

வீரனுக்கே செல்வமும், உலகமும் என்னும் இரு மனைவியர் அமைவர். உறவல்லாதவரோடு போரிட்டு வெற்றி கண்டு ஓங்குவாயாக! பாரத நாட்டினிலே அந்தப் பாண்டவர் எனப் புகழ் படைத்திடுவாய். தவறான பாதையில் செல்பவரின் மகனோ நீ? உயர் சோமனின் (சந்திர குலம்) குலத்தில் வந்தவன் அன்றோ?

"தம்மொரு கருமத்ததிலே – நித்தம்
தளர்வறு முயற்சி மற்றோர் பொருளை
இம்மியும் கருதாமை – சார்ந்
திருப்பவர் தமை நன்கு காத்திடுதல்
இம்மையில் இவற்றினையே – செல்வத்

திலக்கணம் என்றனர் மூதறிஞர்
அம்ம இங்கிதனை யெலாம் - நீ
அறிந்திலை யோ! பிழையாற்றல் நன்றோ!"

குறிப்பு

உன்னுடைய தோளிற்குரிய வயதுடையார், இளந்தம்பியரை அழித்திட நினைப்பாயோ? என்னுடைய உயிரன்றோ? எனை எண்ணி இக்கொள்கையை விட்டுவிடு. பொன்னுடை மார்பகத்தார் இளம் பொற்கொடி மாதரைக் களிப்பதிலும் இன்னும் பல இன்பத்திலும் உள்ளம் இசைந்திட இதனை மறந்திடா! என்று உரைத்தான்.

திருதிராட்டிரன் இவ்வாறு கூறியதும் துரியோதனன், எந்தையே உன்னோடு வாக்குவாதம் புரிய விரும்பவில்லை. பலமுறை கூறியும் கேளாய். உன் வார்த்தை இன்றி பாண்டவர் இங்கு வந்திடார். நீ அழைக்கவில்லையெனில் நான் உயிர் துறப்பேன் என்றான். சாத்திரங்கள் பல கற்பினும் உண்மையினை ஆராய்ந்திடார். பானையிலிருக்கம் தேனினை அதன் சுவையினை அறியமுடியாத அதன் உள்ளிருக்கும் அகப்பையைப் போன்றவர். துதிபாடும் விதுரனின் மொழிகளை வேதமாய்க் கொண்டனை நீ தான். அதிக மோகத்தினை பாண்டவர் மீது கொண்டு எம்மை (கௌரவர்கள்) வெறுப்பான். தலைவனாகிய நீ பிறர் கையிலிருக்கும் பொம்மை போல சார்ந்து நிற்கின்றாய். உய்வதற்கு வழியுண்டோ? திருதிராட்டிரனின் பிள்ளைகளுக்கு நலம் என்பது இல்லை. போதுமென்று இருத்தல் போதாது. மன்னர் வாழ்க்கையை விரும்பி கணந்தோறும் காத்திருந்து வென்றழிக்கும் அந்நியரை அறியாயோ? முன்னர் மேன்மேலும் பெருமையும், சிறப்பும், செல்வமும், மாண்பும், புகழும் பெறுதல் வேண்டும். இதை நீ அறியாயோ தந்தையே! நல்வழி, தீவழி என நாம் இதில் சோதனை செய்வது தகுமோ? செல்லுகின்ற வழி யாவினுமே, பகை தீர்த்திடல் சாலும் என்றனர் பெரியோர்.பகை என்பது உற்ற துன்பத்தினாலே ஏற்படுவது அன்றி வேறு தோற்றம், பிறவி, பற்றுக்குரியார், நண்பர் என எதனையும் உலகினில் எவரும் பார்ப்பதில்லை. பகை என்பது வடிவத்தாலும் அளவினாலும் ஏற்படுவது இல்லை. பாண்டவரைப் போர் செய்து வெல்வது எளிதல்ல. யார் செய்த புண்ணியமோ? நமக்கு உற்ற துணையாக எங்கள் ஆருயிர் மாமன் சகுனி இருக்கின்றான். சூதாட்டத்தின் மூலம் வெற்றியைப்

குறிப்பு

பெற்று தருவான். நீதிக்குரியவனாகிய தருமனும் சூதாட்டத்தின் மீது விருப்பம் கொண்டவன். நம்மை பார்த்து நகைத்தாரை நாளை நாம் நகைப்போம். அதனால் ஐயனே! சூதாட்டத்திற்கு அவரை அழைத்தால் உய்குவோம். அதனை நிகழத்தவில்லை எனில் என் தலையினைக் கொய்தே நான் என்னுடைய உயிரினைத் துறந்திடுவேன் என்றான். திருதிராட்டிரன் மனம் உடைந்து போனான்.

திருதிராட்டிரன் விதி செய்யும் விளைவினை வேறு எவர் செய்ய இயலும் என்று அறிவுமிக்க விதுரன் அன்றே எடுத்துரைத்தான். அரச குலத்தினை அழித்திடும் என்றான். சதி செய்ய தொடங்கி விட்டாய். இச்சதியே உன்னை அழித்திடும்.

" விதிவிதி விதி மகனே! இனி
வேறெது சொல்லுவன் அட மகனே!
கதியுறுங் காலனன்றோ - இந்தக்
கயமகனென நினைச் சார்ந்து விட்டான்
கொதியுறு முளம் வேண்டா — நின்றன்
கொள்கையின் படி அவர் தமை அழைப்பேன்
வதியுறு மனை செல்வாய் - என்று
விழியுங் கண்ணீரொடு விடை கொடுத்தான்"

துரியோதனனும், சகுனியும் சென்ற பின்னர், திருதிராட்டிரன் அமைச்சர்கள் மற்றும் தொழில் வல்லாரை அழைத்து பாண்டவர் அமைத்த மண்டபம் போல சிறந்த மண்டபம் உருவாக்கிட ஆணையிட்டு அதற்கான மிகு பொருளினைத் தருவதாக கூறி அவ்வாறே கடவுளும் வியக்கும் பொற்சபை ஒன்றை நிர்மானித்தார்.

### 1.5.2.8 விதுரன் தூதும் பாண்டவர் சந்திப்பும்:

திருதிராட்டிரன் தம்பி விதுரனை அழைத்தான். தக்க பரிசுகள் பலவற்றை எடுத்துக்கொண்டு தம்பியின் மக்கள் அரசாளும் 'இந்திர பிரஸ்தம்' என்னும் மாநகரினை அடைந்து திரௌபதியோடு ஐவரையும் விருந்திற்கு அழைத்தார். உம்முடைய தந்தை எனக் கூறுவாயாக! நாடு முழுவதும் புகழுகின்ற 'நன்மணிமண்டபம்' செய்தார். அம்மண்டபத் திறப்புவிழாவில் அன்று நிகழும் பெருவேள்வியில் கலந்து கொள்வதற்கும் விருந்திற்கும் இத்தந்தைக்கிழவன் விரும்பி அழைத்ததாகக் கூறுவாய்.

குறிப்பு

பேச்சினிலே சகுனியின் சொல் கேட்டு பேயெனும் பிள்ளையாகிய துரியோதனன் கருத்தினைக் குறிப்பினால் சொல்லிடுவாய்.

“போச்சது போச்சது பாரதநாடு
போச்சது நல்லநம் போச்சது வேதம்
ஆச்சரியக் கொடுங் கோலங்கள் காண்போம்
ஐய! இதனைத் தடுத்தல் அரிதோ”

எனப் பல சொல் கூறி விதுரனிடம் ‘சென்று வருகுதி தம்பி, இனிமேல் சிந்தனை ஏதும் இதில் செய்ய வேண்டாம். வெவ்விதி, அன்று விதித்ததை இன்று தடுப்பது யார்க்கு இனி எளிது என்று மெய் சோர்ந்து கீழே விழுந்தான்.

விதுரன் அண்ணனிடம் விடைபெற்று ‘இந்திர பிரஸ்தம்’ நோக்கிச் சென்றான். காடு, மலை, ஆறு கடந்து அந்நகரினை அடைந்து நகரின் வளம் கண்டான். நீலமுடி தரித்த பல மலைகள் சேர்ந்த நாடாக, நீர்வளம், அழகிய பயன்தரும் மரங்கள், குளிர் தரும் சோலைகள், உலகம் பசியின்றி வாழ நன்செய், புன்செய் நிலங்கள், பாலும் தேனும், நறுமணம் மிக்க நெய்யும் நிறைந்த நாடு, அன்னங்கள் தாமரைத் தாடகத்தில் நீந்த, வண்டுகள் முரல, கிளிகள் மழலைச் சொல் அரற்ற, குயில்கள் பாட, தென்றல் வீச, ஆடவர் மகிழ, மாதர்கள் தம் மைவிழி காட்டும் வளமிகு நாடு.

“ பேரறமும் பெருந்தொழிலும் பிறங்கு நாடு
பெண்களெல்லாம் அரம்பையர் போல் ஒளிரும் நாடு
வீரமொடு மெய்ஞ்ஞானம் தவங்கள் கல்வி
கேள்விஎனும் இவையெல்லாம் விளங்கு நாடு
சோரமுதற் புன்மையெதுந் தோன்றா நாடு
தொல்லுலகின் முடிமணி போல் தோன்று நாடு
பாரதர்தந் நாட்டிலே நாசம் எய்தப்
பாவியேன் துணைபுரியும் பான்மை என்னே”

எனப் பல எண்ணியே விதுரன் அந்நகரின் உள்ளே நுழைந்தான். விதுரன் வருகின்ற செய்தியினை அறிந்து அவனை வரவேற்க ஐவரும் உளமகிழ்வு கொண்டு படைகளுடன் பல பரிசுகளுடன் தாளமும்

மேளமும் கொண்டு எதிர் கொண்டு வரவேற்றனர். விதுரனின் பதமலர் (தாள்களை) வணங்கி, மதுரமான மொழியில் குசலங்கள் பேசி, மன்னனொடு திருமாளிகை அடைந்தார்.

குறிப்பு

விதுரன் ஐவருக்குத் தாயான குந்தியை வணங்கிய பிறகு, துருபதன் மகள் மந்திரம் தேர்ந்த மாமனாகிய விதுரனை அடிபணிந்து வணங்கி நின்றாள். தங்கப் பதுமையாகிய திரௌபதிக்கு ஆசிகள் கூறி மனம் குளிர வாழ்த்திய பிறகு, அவ்விடம் வந்த உறவினர், நண்பர், சிங்கம் போன்ற வீரர், புலவர், சேவகர் எனப் பலரோடும் செய்திகள் பலவற்றை பேசி அந்நகரினை வலமாக சுற்றிவந்து இரவு கழிந்த பிற்பொழுதில் பாண்டவர் ஐவரையும் தனியாக அழைத்துப் பேசினான்.

மலை போன்ற தோளினையும், பெரும்புகழினையும், காந்தாரியின் கணவன், அறிவிற் சிறந்த வேந்தன், திருதிராட்டிரன் தெய்வநலங்கள் யாவும் இட்டிட உங்களைச் சீரோடும் சிறப்போடும் வாழ்க என்று வாழ்த்தினான். உங்களிடம் ஓர் செய்தி மன்னன் சொல்லி அனுப்பினான்.

அத்தினபுரத்தில் இணையற்ற எழில்மண்டபம் ஒன்றினைத் தம்பிகள் அமைந்தனர். அதனுடைய அழகினைக் காண அன்போடு உம்மை மன்னன் அழைத்தான். திரௌபதியோடு வந்திருந்து விருந்தினை ஏற்கவேண்டும். ஆயினும் சகுனியோடு மூடன் துரியோதனன் விந்தைமிகு மண்டபத்தில் சூதிற்கு அழைக்கும் மந்திரமொன்றினை மனத்திடைக் கொண்டான் என்னும் தீயஎண்ணத்தையும், உமக்கு அறிவித்தேன் என்றான் விதுரன்.

விதுரன் இவ்வாறு கூறியவுடன் தருமன் எண்ணத்திலே கலக்கமுற்று சில சொற்களைக் கூறுவான். மண்டபம் உருவாக்கியதும், விருந்திற்கு அழைப்பதும், அங்கு சூது விளையாட அழைப்பதும், மனதிலே வருத்தத்தை உண்டாக்குகின்றது. அறிவிலே தடுமாற்றம் உண்டாக்குகின்றது. துரியோதனன் நமக்கு நன்மை செய்பவன் அல்லன். எங்களைக் கொல்வதற்குத் துரியோதனன் சூழ்ச்சிகள் பல செய்துள்ளான். சொல்லமுடியாத துன்பத்தை நீ அறிந்திடாயோ? வெல்வது எவராயினும் மன்னர்கள் சூதினை விரும்புவது நல்லதல்லவே? மனதில் தோன்றும்

சஞ்சலம் நீங்க நீ ஒரு சூழ்ச்சியினைச் சொல்வாயாக என தருமன் விதுரனிடம் கேட்டான்.

குறிப்பு

விதுரனும் தருமனுக்குப் பதில் மொழிந்தான். 'சூது' என்பது விஷம் போன்றது. அதனை 'விளையாட்டு' என்று எவரும் ஏற்றுக்கொள்ளார். அதன் சிறுமையெல்லாம் உரைத்துவிட்டேன். திருதிராட்டிரன் 'இச்சூதுப்போர்' தீது என்று பலமுறை கூறியும் இளவரசனாகிய துரியோதனன், மது அருந்தியவன் போல ஒரு வார்த்தையையே பற்றிக் கொண்டு பிதற்றுகின்றான். கணக்கற்ற அறிவுரைகளை எடுத்துக் கூறியும், சிறுமைக்குரிய துரியோதனன் அவற்றையெல்லாம் உள்ளத்திலே புகவிடாது தன் மடமையினால் கீழான சூதாட்டத்திலே மனம் உறுதியாகப் பற்றி நின்றான். நான் கூறிய சொற்களிலிருந்து குறிப்பினை உணர்ந்து கொண்டு நலம் தோன்றும் வழியினைத் தொடர்க என்றான்.

தருமன் விதுரன் மொழிகளைக் கேட்டு தளர்ச்சி நீங்கி, உறுதி கொண்டே சொல்லிலே தடுமாற்றமின்றி உரைத்திட்டான். மதி கெட்டு விருந்தினைச் கொடுத்திடினும், மர்மங்கள் பல செய்திடினும், கடமையொன்றே நாங்கள் கொண்டு அதன் வழி நடத்திடுவோம்.

"தந்தையும் வரப்பணிந்தான் - சிறு
தந்தையும் தூதுவந்ததை உரைத்தான்
சிந்தை யன்றினி இல்லை – எது
சேரினும் நலமெனத் தெளிந்து விட்டேன்
முந்தையச் சிலைராமன் மறப்பதுவோ?
முடிவினை நம்மவர் மறப்பதுவோ?
நேர்ந்தது செயமாட்டோம் - பழ
நூலினுக் கிணங்கிய நெறி செல்வோம்"

நால்வகை படைகளுடன் அத்தினபுரம் செல்வதற்குரிய பயண ஏற்பாடுகளை வீமனே செய்திடுவாய் என அறநெறியினை முற்றிலும் உணர்ந்த தருமன் உரைத்திட்டான்.

குறிப்பு

தருமன் கூறியது கேட்டு வீமன் திகைத்திட்டான். விசயனாகிய அருச்சுனனைக் கண்டு மேலும் கூறினார். சகுனி மாமனும், மருமகன் துரியோதனனும் நம்மை அழிப்பதற்கு இவ்வழியினைத் தேர்ந்தெடுத்து உள்ளார். தாமதம் செய்வோமா? என இடியென நகைத்தான். கோமகன் தருமன் கூறியபடியே படை கொண்டு செல்வோம். தடை எதுவுமில்லை காண் என்றான். நெடுநாள் பகை, நினைவிலேயே கழிந்தன பல நாட்கள். கிருமியை அழிப்பதற்கு நல்லநாள் பார்ப்பதுண்டோ? தம்பி அருச்சுனா நாணினை எடடா? வில்லுனுக்கு இரை கேட்கின்றதடா!

"போரிடச் செல்வமடா! - மகன்
புலமையும் தந்தையின் புலமைகளும்
யாரிடம் அவிழ்க்கின்றார்? - இதை
எத்தனை நாள்வரை பொறுத்திருப்போம்?
பாரிடத் திவரொடு நாம் - எனப்
பகுதியிவ் விரண்டிற்கும் காலமொன்றில்
நேரிட வாழ்வுண்டோ? - இரு
நெருப்பினுக்கு இடையினில் ஒரு விறகோ?"

வீமன் உரைத்தது கேட்ட உள்ளம் வெதும்பி நெடிய வில்லினைக் கொண்ட அருச்சுனனும், காமனை சாமனைப் போல நின்ற நகுலனும், சகாதேவனும் சிவந்த தாமரை மலர் போன்ற கண்களை உடைய தருமன் சொல்லை எதிர்த்துப் பணிவோடு பேசினார்.

அன்பும் பணிவும் உருக்கொண்ட தம்பிகள், அணுவாயினும் தருமனை எதிர்த்து பேசாதவர். வன்புமொழி பேசுவதைக் கேட்டு அறத்தின் வடிவினனாகிய தருமன் புன்னகை புரிந்தான். துரியோதனன் நமக்கு முன்பு செய்த தீமைகளையும், இப்பொழுது அவன் மனதில் மூண்டிருக்கும் கொடுமையும், அதனால் ஏற்படும் விளைவுகளையும் நான் ஆராய்ந்து அறிந்துள்ளேன். என்னைப் பித்தன் என்றெண்ணி உரைத்திட்டீர்.

நம்மை கைப்பிடி கொண்டு சுழற்று இறைவன் காலக்கணக்கில் சக்கரமும் சுழன்றிடும். அது மிகை குறையாக மாறுவதற்கு இல்லை. புவியின் மேல் என்றும் உள்ள உயிர்களின் வாழ்விற்கே ஒரு செப்பிடு

குறிப்பு

வித்தையைப் போலவே புவிச் செய்திகள் தோன்றிடுமாயினும் இங்கிவை யாவும் தவறு இல்லாது விதி ஏற்று நடத்திடும் செயல்களாகும். முடிவு எங்கணுமின்றி, எவற்றினுமின்றி எவ்விதத் தடையுமின்றிச் செல்வதாம். இது ஒரு தொடர் இயக்கும் விதி. வீண் சாத்திரமன்று உண்மையானது. நம் வாழ்க்கை இதனைக் கடந்தது அல்ல.

"தோன்றி அழிவது வாழ்க்கை தான் இங்குத்
துன் பத்தோடின்பம் வெறுமையாம் இவை
மூன்றில் எதுவருமாயினும் களி
மூழ்கி நடத்தல் முறை கண்டீர் - நெஞ்சில்
ஊன்றிய கொள்கை தழைப்பரோ – துன்பம்
உற்றிடு மென்பதோர் அச்சத்தால் - விதி
போன்று நடக்கும் உலகென்றே – கடன்
போற்றி ஒழுகுவர் சான்றவர்"

சேற்றில் உழலுகின்ற புழுவிற்கும் புவிச் செல்வமுடைய அரசருக்கும், பிச்சை ஏற்று உடல் காத்திடும் ஏழைக்கும், உயிர் கொண்ட யாவற்றிற்கும் தினமும் ஆற்றவேண்டிய கடமை தான். முன்வந்து அந்தக் கணந்தோறும் நிற்கும். அக்கடமை நிறைவேற்றும் பொழுதிலே அதனைச் சூழ்ந்து அழிப்பது எவ்வகையில் முறையாகும். அனைவருக்கும் பொதுவாயினும் அரசர் குலத்திற்கே பொதுவென்று கூறுவர். உயர்ந்த தேவர்களை ஒத்த முன்னோர்களை நம் சிந்தையில் கொண்டு பணிதல் வேண்டும். தந்தையின் கட்டளையைப் பிள்ளைகள் நிறைவேற்றுவதற்கே இராமன் கதையைக் குறிப்பிட்டேன். இவ்வுலகினைக் காக்கும் காவலர்களாகிய நீங்கள் இன்று அறத்திலிருந்து மாறுவதோ? என்று தருமன் பல வாழ்வியல் கடமையை எடுத்துரைத்தான். இளைய தம்பிகள் யாவரும் தங்கள் கைகள் கூப்பி வணங்கினர்.

" குன்றினிலே ஏற்றி வைத்த விளக்கைப் போலக்
குவலயத்திற்கு அறங்காட்டத் தோன்றினாய் நீ
வென்ற பெறுந் திருவடியாய் நினது சொல்லை
மீறி ஒரு செயலுண்டோ? ஆண்டான் ஆணை
யன்றி அடியார் தமக்குக் கடன்வேறுண்டோ?

குறிப்பு

ஐயனே! பாண்டவர்தம் ஆவி நீயே”

என்று வணங்கி நின்றனர். மேலும் நமக்குத் துன்பம் ஏற்படும் என்று எண்ணியே உன் சொல்லினை மறுத்து உரைத்தோம். உன்னிடமுள்ள அன்பின் மிகுதியால் அன்றோ! உன் வார்த்தையை அறிவில்லாமல் எதிர்த்தோம். இவ்வுலகில் உள்ள செயல்கள் யாவற்றையும் தெளிவாய் கண்டிடும் மன்னவனே! நீ அறியாப் பிற உண்டோ? எங்களின் வன்புமொழியினைப் பொறுத்தருள்வாய்! வாழி,உன் சொல் வழி நாங்கள் அனைவரும் செல்வோம் எனக் கூறி வணங்கிச் சென்றார்.

அதன் பிறகு மூன்றாம் நாள் பாண்டவர்கள் திரௌபதியோடு பல படையோடும், பரிசினங்களோடும், இசையோடும் பயணமாகித் தீங்கிழைக்காத தருமனோடு அத்திருநகராம் ‘இந்திர பிரஸ்தம்’ விட்டு நீங்கினர். நெடுங்கரத்தோடு விதி காட்டும் வழியில் தீயோர் ஊருக்கு நீங்கினர். நரி வகுத்த வலையினில் தெரிந்தே சிங்கம் நழுவி விழும் சிற்றெறும்பினால் யானை சாகும். வரியுடைய புலியினைப் புழுவும் கொன்றுவிடும். வருங்காலம் உணர்ந்து நிற்போரும் மயங்கி நிற்பர். மலையெனும் ஓடையிலே திசைகளும் மாறிடும். கீழ் மேலாகும், மேல் கீழாகும். விதி வகுத்த பொழுதிலே யாவும் மாறிடும்.

**1.5.2.9 மாலை வருணனை:**

மாலைப் பொழுது வந்ததும் தருமனின் படைகள் வழியிடை ஒரு பூம்பொழிலில் அமர்ந்த பொழுது (திரௌபதி) மீன் போன்ற விழியாளைப் பார்த்தன் (அருச்சுனன்) அழைத்துச் சென்று ஆங்கோர் தனியிடத்தே பசுமையான புல்மேட்டிலே மேற்குத் திசையில் மறையும் கதிரவனை வணங்கித் திரௌபதியிடம் அதன் அழகினை விளக்கினான். வானத்தில் நிகழும் புதுமையெல்லாம் கணந்தோறும் மாறும் அழகினைக் காணாயோ? எண்ணற்ற பொருளினைக் கொடுத்தும் இந்த அரிய காட்சியினைக் காண இயலுமோ?

“கணந்தோறும் வியப்புகள் புதிய தோன்றும்
கணந்தோறும் வெவ்வேறு கனவு தோன்றும்
கணந்தோறும் நவநவமாய் களிப்புத் தோன்றும்
கருதிடவும் சொல்லிடவும் எளிதோ? ஆங்கே
கணந்தோறும் ஒரு புதிய வண்ணங் காட்டித்

காளி பராசக்தி அவள் களிக்குங் கோலம்
கணந்தோறும் அவள் பிறப்பாள் என்று மேலோர்
கருதுவதன் விளக்கத்தை இங்குக் காண்பாய்”

**குறிப்பு**

அடிவானத்திலே அங்கு பரிதியின் கோளம் அளப்பரிய விரைவினோடு சுழலக் காண்பாய். இடிவானத்து ஒளிமின்னல் பத்துக் கோடி எடுத்தவற்றை ஒன்றுபோல உருக்கி வார்த்து முடிவான வட்டத்தைக் காளியாகிய சக்தி சுழற்றுவதன் வலிமை காணாய். தகடு இரண்டு வடிவாக வட்டமுறச் சுழலுவதைக் காண்பாய். மின்வட்டு முன்னே ஒரு பச்சைநிற வட்டம் காண்பாய். தரணியிலே இது போலவொரு பசுமை உண்டோ? மின்வட்டின் வைரக்கால்கள் இடையிடையே எழுவதை இமை குவியக் காண்பாய். உமை கவிதை செய்கின்றாள். எழுந்து நின்றே பல்லாண்டு வாழ்க என்றே உரைத்திடுவோம்.

சுடர்ப்பரிதியாகிய கதிரவனைச் சுற்றியே படர்ந்த முகில், எத்தனை தீப்பற்றி எரிவன. ஓகோ! என்னடி! இந்த வண்ணத்தின் இயல்புகள். எத்தனை வடிவம். எத்தனை கலவை. தீயின் குழம்புகள்.

செழும்பொன்னை காய்ச்சியது போன்ற ஓடைகள், வெம்மை தோன்றாது எரிந்திடும் தங்கத்தீவுகள்! பாரடி; நீலப் பொய்கைகள்! அடடா! நீல வண்ணத்தில் எத்தனை வகையடி! எத்தனை செம்மையும், பசுமையும், கருமையும் - எத்தனை கரிய பெரும் பெரும் பூதம்! நீலப் பொய்கையில் மிதந்திடும் தங்கத் தோணிகள், கடரொளிப் பொற்கரையிட்ட கருஞ்சிகரங்கள், காணடி திரௌபதி! தங்கத் திமிங்கிலம் தாம் பல மிதக்கும்! இருளாகிய கடல்! ஆஹா எங்கு நோக்கிடினும் ஒளித்திரள், ஒளித்திரள் -- வண்ணக்களஞ்சியம்.

கதிரவன் எங்கள் அறிவினைத் தூண்டி நடத்துக என்னும் மங்களம் மிக்க வேதமொழி கொண்டு வாழ்த்தியே — தாங்கள் தங்கியிருந்த பொழிலினை அடைந்தனர். அங்கு இரவுப்பொழுதினைக் கழித்து வைகறை வந்ததும் தருமர் தன் கடல் போன்ற சேனைகளோடு புறப்பட்டு இயற்கைக் காட்சியில் இன்பம் அடைந்து கதிரவன் மறையும் முன்பே அத்தினபுரம் நகரினை அடைந்திட்டார்.

## 1.6 பாரதியின் கவித்திறம்.

குறிப்பு

பாரதி என்னும் மகாகவியின் சொல்புதிது, பொருள் புதிது. சோதிமிகு நவகவிதை என்னும் சிந்தனையின் வழி மகாபாரதத்தின் ஒரு பகுதி பாஞ்சாலியாகிய திரௌபதியின் சபதத்திற்குக் காரணமான முற்பகுதியை பாரதமாதாவாக உருவகித்து 'பாஞ்சாலியின் சபதம்''பாரதமாதாவின் சபதம்' என உருவெடுத்து குறுங்காவியமாகி உள்ளது.

பாரதியார் அழகான உவமைகளை, உருவகங்களை, கேள்விகளாக்கித் தம் கவிதையின் இடையில் கொணர்ந்து தருகின்ற கவிநயமும், பாநயத்தின் சந்தநயமும், வருணனைத் திறமும் பாஞ்சாலி சபதத்தின் அழகு மிக்க இடங்களாகும். பாஞ்சாலி சபதத்தில் பாரதியின் கவித்திறத்திற்குச் சான்றாக 'மாலை வருணனை' குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைகின்றது.

## 1.7 தொகுப்புரை

மகாகவி பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' முதற்பாகம் 'துரியோதனன் சூழ்ச்சிக் சருக்கம்' வரை உள்ள பாடல்கள் தொகுத்து கொடுக்கப்பெற்றுள்ளன. அத்தினபுரத்தின் நகர வருணனை, துரியோதனன் சபை, சகுனி துரியோதனன் சதி, திருதிராட்டிரன் நேர்மை, விதுரன் பாண்டவர் சந்திப்பு, தருமனின் தருமம், கதிரவனின் மறைதலாகிய மாலை வருணனை என பல்வேறு நிகழ்வுகளும், அவை சார்ந்த உரையாடலும் தொகுக்கப் பெற்றுள்ளன. துரியோதனன் - திருதிராட்டிரன் உரையாடலும், தருமன் - தம்பியர் உரையாடலும், அப்பாத்திரங்களின் இயல்பினைத் தனித்து அடையாளமிட்டுக் காட்டுவன. துரியோதனனின் பொறாமை, சினம், அடங்காத ஆசை, போட்டி, மூர்க்கக்குணம் போன்ற பண்புகளையும் திருதிராட்டினனின் நேர்மை, தம்பி பிள்ளைகள் மீது கொண்ட அன்பும், தூய்மையும், தன் மகனிற்காக பாண்டவர் மீது போலித்தனம் காட்டாத நேர்மை, வீரம் போன்ற பண்புகளையும், தருமன் தன் அறத்திலிருந்து மாறாத குணமும்,

தந்தையின் சொல்லை மதிக்கும் குணமும் கதாபாத்திரங்களை எடையிடுவதற்கான அளவுகோல்களாக விளங்குகின்றன. இவற்றிலிருந்த அப்பாத்திரங்களின் பண்புகளையும், சகுனியின் தீக்குணத்தையும், விதுரனின் நற்பண்பினையும் இக்கூறு அவர்களின் உரையாடல் வழி எடுத்துரைத்துள்ளது. அத்தினபுர நகரவருணனை, இந்திரபிரஸ்த நகர வருணனை, மாலை வருணனை போன்ற வருணனைகள் பாரதியின் கவித்திறத்திற்குச் சான்றாக அமைவன என்னும் கருத்துகளையும் இக்கூறு எடுத்துரைத்துள்ளது.

## 1.8 மாதிரி வினாக்கள்: (2 மதிப்பெண்கள்)

1. அரவக் கொடி எவருடைய கொடி?

    கௌரவர்கள்

2. பாண்டவர்கள் ஐவர் யார்?

    தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன்.

3. துரியோதனனின் மாமன் யார்?

    சகுனி

4. திருதராட்டிரன் பாண்டவர்களிடம் எவரைத் தூது அனுப்பினான்?

    விதுரன்.

5.விதுரன் பாண்டவர்களிடம், குறிப்பாக உணர்த்தியது என்ன?

விதுரன் பாண்டவர்களிடம் துரியோதனனும், சகுனியும் சூதாட்டத்திற்கு அழைப்பார்கள் என்பதை குறிப்பாக உணர்த்தினார்.

## 1.9பயிற்சி வினாக்கள்: (5 மதிப்பெண்கள், 10 மதிப்பெண்கள்)

1. அத்தினபுர வருணனையை விளக்குக? (5 மதிப்பெண்கள்)

2. சகுனி திருதிராட்டிரனிடம் கூறியது என்ன? (5 மதிப்பெண்கள்)

3. துரியோதனன் சினம் எத்தகையதாக விளங்கியது? (5 மதிப்பெண்கள்)

4. திருதிராட்டிரன் விதுரனிடம் கூறி அனுப்பிய செய்தி யாது? (5 மதிப்பெண்கள்)

குறிப்பு

5. துரியோதனன் தன் ஆற்றாமையை சகுனியிடம் எங்ஙனம் வெளிப்படுத்தினான் - விவரி

(10மதிப்பெண்கள்)

6. மகாகவி பாரதியின் வருணனைத் திறத்தை நும் பாடப்பகுதி கொண்டு விளக்குக?

(10 மதிப்பெண்கள்)

7.பாரதியின் கவித்திறத்தினை 'பாஞ்சாலி சபதம்' வழி நின்று விவரிக்க?

(10 மதிப்பெண்கள்)

**மேலும் படித்தறிக:**

பாஞ்சாலி சபதம் ஒரு நோக்கு-பாரதி நூற்றாண்டு விழா வெளியீடு.

பேராசிரியர்டாக்டர். ந.சுப்புரெட்டியர் சர்வோதய இலக்கியப் பண்ணை.32/1 மேலவெளி வீதி மதுரை – 625 001

முதற்பதிப்பு – அக்டோபர் 2, 1982.

## கூறு 2: பாரதிதாசன்

## புரட்சிக்கவி

2.1 – அறிமுகம்

2.2 – நோக்கம்

2.3 – பாரதிதாசன்

2.4 – புரட்சிக்கவி

2.4.1 – அரசன் - அமைச்சன் உரையாடல்

2.4.2 – அமுதவல்லி – உதாரன் - கற்றல்

2.4.3 – அமுதவல்லி – உதாரன் சந்திப்பு

2.4.4 – அமுதவல்லி – உதாரன் காதல்

2.4.5 – மன்னனின் கோபமும், உதாரன் உரையும்.

## 2.2. நோக்கம்

1. மரபுக்கவிதை குறித்த அறிவினைப் பெறுதல்
2. புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அறிமுகம் தெரிதல்
3. 'புரட்சிக்கவி' என்னும் படைப்பின் கவிநயமும் பாத்திரவார்ப்பும் குறித்து அறிதல்.
4. 'புரட்சிக்கவி'– போன்ற படைப்புகளை உருவாக்க மாணவர்கள் கவிதையறிவும், உணர்ச்சியும் பெறுதல்.

## 2.3 பாரதிதாசன்:

பாரதிதாசன் 1891ஆம் ஆண்டு கனகசபைக்கும் இலக்குமி அம்மாளுக்கும் புதுச்சேரியில் பிறந்தார். 'கனகசுப்புரத்தினம்' என்னும் பெயர் கொண்டவர். பாரதியின் சீடராகி, தன் பெயரைப் பாரதிதாசன் என மாற்றிக் கொண்டார். தொடக்கக் காலத்தில் இறைப்பக்திப் பாடல்களைப் பாடியவர். பிற்காலத்தில் பகுத்தறிவுச்சிந்தனை மிக்க பாடல்களைப் பாடியுள்ளார். திராவிட இயக்கத்தில் சேர்ந்து பணியாற்றியவர். அச்சிந்தனைகளை மக்களிடையே கொண்டு சென்றவர். 'இருண்டவீடு','குடும்ப விளக்கு' ஆகிய இவ்விரு நூல்களும் கல்வி கற்காத வீட்டினையும் கல்விகற்ற வீட்டையும் குறிக்கும் விதத்தில் எழுதப்பெற்றிருக்கும். 'பிசிராந்தையார்','வீரத்தாய்' போன்ற கவிதை நாடகங்களையும்,'பாண்டியன் பரிசு' போன்ற கவிதை பெருங்காப்பியத்தையும்,'எதிர்பாராத முத்தம்','புரட்சிக்கவி' போன்ற குறுங்காவியங்களையும்,'அழகின் சிரிப்பு','கண்ணகி புரட்சிக் காப்பியம்','மணிமேகலை வெண்பா','புதிய

ஆத்திச்சூடி','இசையமுது','தேனருவி','காதலா கடமையா' போன்ற பல நூல்களையும், தமிழுலகிற்குத் தந்த கவிஞர்.

குறிப்பு

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு"

எனத் தமிழின் சிறப்பினை முழக்கமிட்டுப் பாடியுள்ளார்.

"கல்வி இல்லாத பெண்கள் களர்நிலம், அந்நிலத்தில் புல் விளைந்திடலாம், நல்ல புதல்வர்கள் விளைவதில்லை.

எனப் பெண்களின் கல்வியறிவு குறித்தும், பெண்ணடிமை தீர்தல் குறித்தும் விதவைப் பெண்கள் மறுமணம் குறித்தும் பெண்ணுரிமை குறித்தும் பாடியுள்ளார். புரட்சிமிகு கருத்துகளை, எழுச்சி மிக பாடியதால் 'புரட்சிக் கவிஞர்' என அழைக்கப்பெற்றார். தமிழக அரசின் விருது, சாகித்திய அகாதெமி விருது எனப் பல விருதுகளைப் பெற்று தமிழிற்கும் தமிழ்நாட்டிற்கும் சிறப்பினைச் சேர்த்தவர்.

" எனையீன்ற தந்தைக்கும், தாய்க்கும்
மக்கள் தனையீன்ற தமிழ்நாடு தனக்கும்
தினையளவேனும் பயனிருக்குமாகில்
செத்தொழியும் நாள் எனக்குத் திருநாளாகும்".

என்னும் பாவேந்தர் பாரதிதாசன் 1964ஆம் ஆண்டு மறைந்தாலும் அவரின் படைப்புகள் என்றும் மறையா எழுத்துக்களாகும்.

## 2.4 புரட்சிக்கவி

பாவேந்தர் பாரதிதாசனால் இயற்றப் பெற்ற புரட்சிக்கவி குறுங்காவியமாக, அமுதவல்லி – உதாரன் ஆகிய இரு கதாபாத்திரங்களால் சிறப்பாக பேசப்பெற்ற காவியமாகும். முடியாட்சியினை எதிர்த்து, அதில் நிலவும் சர்வாதிகாரத்தினை எதிர்த்து முழக்கமிட்ட கவிதைப் படைப்பாகும். பாவேந்தரின் கவிநயமும், சொல்நயமும், பொருள்நயமும், ஆழமும், அழுத்தமும் மிக்கது. இந்நூல்

'பில்கணீயம்' என்னும் வடமொழி நூலினைத் தழுவி எழுதப் பெற்றதாகும்.

குறிப்பு

அமுதவல்லிக்கு 'குஷ்டரோகம்' எனக்கூறி கல்வி கற்க ஏற்பாடு செய்யலாம் என்று அமைச்சர் கூறுகின்றான். மன்னன் அதனைக் கேட்டு வியப்படைந்து தந்திரத்தினால் ஆகாதது ஒன்றுமில்லை. புகழ் பெற்ற உதாரனை அழைத்து வருமாறு கூறுகின்றான்.

"தேர்வாய்ந்த புவிராஜன் போலே, அந்தச்
செந்தமிழ்த் தீங்கவிராஜன் உதாரன் வந்தான்
பார்வேந்தன் நிகழ்த்தினான் உதாரன் கேட்டுப்
பைந்தமிழுக்குத் தொண்டு செயக் கடவோம் என்றான்"

**2.4.2 – அமுதவல்லி – உதாரன் - கற்றல்**

மன்னன் ஆணையின்படி கன்னிமாடத்தைச் சேர்ந்த ஒரு பூஞ்சோலையில் ஒரு பொன் மேடையிருக்க, அதன் நடுவே திரையிட்டு அப்புறம் அமுதவல்லியும், இப்புறத்தில் உதாரனுமிருந்து கல்வியைப் பெற்றாள். யாப்பு, அணி, ஆசுகவி, சித்திரகவி, மதுரக்கவி,வித்தாரக்கவி எனப் பல தீங்கவிதைகளை உதாரன் கற்றுரைக்க அமுதவல்லி கற்று வரலானாள். இருவரும் ஒருவரையொருவர் குறையுடையோர் என்று காணாதே காலம் பல கழித்தனர்.

இவ்வாறு நாட்கள் பல செல்ல, பொன்மேடையிலே அமுதவல்லி உதாரனுக்காக காத்திருந்தாள். அப்பொழுது இருட்காட்டை அழித்த நிலா உயர்ந்து தோன்றியது. உதாரன் நிலாவினைத் தன் இரு விழியால் நோக்கி உணர்வு வெள்ளம் தூண்டிவிட நற்கவிதையை சரஸ்வதியின் அருளால் அமைத்திட்டான். அத்தனையும் கேட்டிருந்தாள் அமுதவல்லி.

"நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து
நிலாவென்று காட்டுகின்றாய் - ஒளிமுகத்தைக்
கோலமுழுதும் காட்டிவிட்டால் - காதற்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்

குறிப்பு

சோலையிலே பூத்ததனிப் பூவோ நீ தான்!
சொக்க வெள்ளிப் பாற்குடமோ அமுத ஊற்றோ!
காலைவந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல்மாறிக் குளிரடைந்த ஒளிபிழம்போ!"

எனக் கவிதை இயற்றி நின்றான் உதாரன். தினமும் உழைத்து உழைத்து, வறுமையில் வாடிடும் ஏழைகளும் சிறிகு கூழ் தேடும் பொழுது, பானையிலே ஆரக் கனத்திருந்த வெண்சோற்றினைக் காணும் இன்பம். கவின் நிலவே உனைக் காணும் இன்பந் தானே! இன்பம் என்னும் பால் நுரையே, குளிர் விளக்கே என்னை இழந்தேன் எனப் பலப்பலக் கூறி நிற்க அமுதவல்லி, உதாரன் என்னும் ஆசிரியன், கவிவல்லவன், அறிஞன் ஆயினும் கண் பார்வையற்று நிலாவினை இவ்விதம் வருணிக்க இயலாது என்றுணர்ந்து, அவனருகே ஓடிச் சென்று கண்டாள். அவன் தாமரைக் கண்ணைக் கண்டாள். உயர்ந்த மலைக்குலம் போன்ற தோள்களைக் கண்டாள். ஓர் ஆண் எழில் குறையின்றித் திருந்திய சித்திரமென, ஒளி பொருந்திய நிலவிற்குக் குறை இருக்கலாம். இச்சந்திரனுக்கோ குறை ஒன்றுமில்லையாம் என வியப்புடன் நின்றாள். தன் முன் நிற்கும் அமுதவல்லியை உதாரனும் கண்டு வானிலே இருந்த மாமதியே மங்கையாய் தன் முன்னே வந்து நின்றதோ? கவிஞர்களின் கற்பனையே உருவம் பெற்று வந்ததோ? பொன்னை உருக்கி வார்த்த பூங்கொடியோ? மலர்க்கூட்டமோ? என வியந்து நின்றான்.

### 2.4.3 அமுதவல்லி – உதாரன் சந்திப்பு

அமுதவல்லியும், உதாரனும் ஒருவரையொருவர் கண்டு வியந்து நின்றனர். இருவரும் ஒருவரையொருவர் நீ யார் என வினவி நின்றனர். 'அமுதவல்லி' தான் யாரென்றும் 'உதாரன்' தான் யாரென்றும் கூற அமைச்சன் செய்த சதி என்று உணர்ந்தனர்.

"காரிருளால் சூரியன்தான் மறைவதுண்டோ?
கறைச் சேற்றால் தாமரையின் வாசம் போமோ?
பேரெதிர்ப்பால் உண்மைதான் இன்மையாமோ?
பிறர் சூழ்ச்சி செந்தமிழை அழிப்பதுண்டோ?
நேர் இருத்தித் தீர்ப்புரைத்துச் சிறையிற் போட்டால்

நிறை தொழிலாளர்களுணர்வு மறைந்து போமோ?
சீரழகே! தீந்தமிழே! உனையென்
கண்ணைத் திரையிட்டு மறைத்தார்கள் என்று சொன்னான்"

### 2.4.4 . அமுதவல்லி – உதாரன் காதல்

வானத்தை வெண்ணிலா வந்து தழுவ, மோனத்திருக்கும் முதிர்சோலை மெய்சிலிர்க்க, ஆனந்தத் தென்றல் வந்து ஆரத் தழுவுவதும், படருகின்ற முல்லையினை மாமரம் சென்று கரந்தழுவுதலும், தடாகத்திலிருக்கும் அல்லியினை முத்தமிட்டு வண்டு தேன்குடிக்கும் முடிவும், உணர்வினை உண்டாக்கவில்லையோ? சந்திரனும் என்மேலே தணலைத் தான் வீசுகின்றான். கொஞ்சவரும் கோதையரைக் காதற் பிணமாக்கித் தாங்கள் பிழைக்க நினைப்பாரோ? எனத் தன் காதல் எரிதழல் ஆற்றாது அமுதவல்லி தன் காதலுணர்வைத் தெரிவித்தாள்.

உதாரனும், பசியால் வாடுகின்றவனுக்கு குன்றுபோலஅன்னத்தைக்குவித்து வைத்து அதனை உண்ணமுடியாது ஊரினை ஆளும் மன்னன் கூர்வாள் வந்து மறிக்கின்றது. எண்ணக்கடலில் எழுகின்ற காதல் உண்ணும் குளத்தில் சென்று கலக்காது நால் வருணத்தினை உருவாக்கி, அதில் உயர்வருணம் நாட்டினை ஆளவும், அந்த உயர் வருணத்தில் பிறந்தவள் நீ. நான் தாழ்ந்த நாய் என்று எண்ணி என்னை நாடாமல் சென்று விடு. உன் பால்போலும் மொழியினையும் கண்ணாடிக் கன்னத்தைக் காட்டி என் உள்ளத்தைப் புண்ணாக்கிப் போடாதே. சென்று விடு, காதல் நெருப்பால் கடலில் தாவி விழுந்திடுவேன். ‘சாதி’ என்னும் சங்கிலி என்னை சிறைப்பிடித்து வைத்துள்ளது. நாளை மன்னனின் நச்சரவுக்கு என் செய்வேன்.

"குன்றும் இரங்கும் கொடும் பாம்பும் நெஞ்சிளகும்
ஏழையரைக் கொல்ல எதிரிருந்து பார்த்திருப்போர்
பாழான நெஞ்சம் சிலசமயம் பார்த்திரங்கும்
சித்தம் துடிக்கின்ற சேயின் நிலைமைக்கு
ரத்தவெறி கொண்டலையும் நால்வருணம் ஏனிரங்கும்?
ரத்தவெறி கொண்டலையும் ராசன் மனம் ஏனிரங்கும்"

என உதாரன் பற்பல கூறினான்.

குறிப்பு

அமுதவல்லி உதாரனிடம் மன்னன் வாளை உருவி வந்து நாளையே என்னை வெட்டி நடுகடலில் போடட்டும். காளை உன் கைகள் என்னைக் காவாது போகட்டும். உன் தாளினை அடைந்த என் உள்ளம் மாறாது. பாதரட்சை போல உன் பாதத்துடன் நான் தொடர்வது அன்றி வேறு கதியினை அறியேன். வேந்தனின் நால்வகை வருணப் பிரிவு காரணமாகிச் சீற்றம் அடைந்தது என்றால் இந்த உடல் முடிந்த பிறகே சீறிடும். ஆரத்தழுவிய அடுத்த விநாடியே என் உயிருக்கு முடிவு வருமென்றால் தேன் போல வரவேற்பேன். உள்ளம் ஒன்றுபட்ட பின்னர் உயர்வென்ன, தாழ்வென்ன? நாட்டின் இளவரசியாக நான் இருப்பதனால் கோட்டை அரசன் எனைக் கொல்வதற்குச் சட்டமில்லை. மன்னன் உங்களைக் கொல்ல வந்தால், நான் என்னுடைய செல்வாக்கால் காத்திடுவேன்.

சாதி உயர்வென்றும், பணத்தால் உயர்வென்றும், தொழிலாளர் சமூகம் இழிவானது என்றும் மிகப் பெரும்பாலோரைக் கத்திமுனை காட்டி காலமெல்லாம் ஓய்க்கும் மன்னன் நம் உயிர் பறித்தாலும், நம் உயிரையே அர்ப்பணம் செய்வோம். இதனை உன் மேல் கொண்டுள்ள காதலினால் ஆணையிட்டுக் கூறுகின்றேன். உடனே உதாரன் விரைந்தோடி அன்னம் போன்ற அமுதவல்லியைத் தூக்கி ஆரத் தழுவினான்.

### 2.4.5 மன்னனின் கோபமும் உதாரன் உரையும்:

அமுதவல்லியின் உடலில் ஏற்பட்ட மாறுபாடு கண்டு அரண்மனைப் பெண்கள் அமுதவல்லியின் தோழியர் மன்னனிடம் சென்று கூறினர். காதலெனும் இன்பக்கடலில் குளித்து விட்டவளாய் அமுதவல்லி தோன்றுகிறாள் என்றனர். அரசனும் எவருமறியாது அவர்களைக் காண வேண்டுமென்று உதாரன் வர, அமுதவல்லி அவனைச் சந்தித்தும் தமிழில் தனிக் காதலைக் கலந்து பேசினதும், அமுதவல்லி உதாரனுக்கு முத்தம் விளைத்த நடைமுறையும் கண்டு அரசன் கடுகடுத்தான். ஆயிரம் தேள் அரசனின் மண்டையில் கொட்டியது போல மனம் உளைச்சல் கொண்டு மாளிகைக்குச் சென்றான்.

மறுநாள் விடியலிலே வாளில் வீசத்தினைப் பூசி வைக்கக் கூறிவிட்டு உதாரனைச் சேவகரிடம் கூறி இழுத்து வருமாறு ஆணையிட்டான். உதாரனை இழுத்து வருவதை ஊர்மக்கள் அனைவரும் கண்டு ஒன்று கூடிவிட்டனர். கவியாகிய உதாரன் உயிர் இன்றோடு முடிந்தது என அனைவரும் திடுக்கிட்டனர். இச்செய்தியினை அமுதவல்லிக்குத் தெரியப்படுத்தினர். மன்னன்சிங்காசனத்திலே அமர்ந்து உதாரனிடம்

“கொற்றவன் பெற்ற குலக்கொடியைக் கவி
கற்க உன்பால் விடுத்தேன் - அட
குற்றம் புரிந்தனையா இல்லையா இதை மட்டும் உரைத்துவிடு
வெற்றி எட்டு திக்கும் முற்றிலுமே சென்று மேவிட ஆள்பவன் நான் - அட
இற்றைக்கு நின் தலை அற்றது! மற்றென்னை
என்னென்று தான் நினைத்தாய்?

இவ்வுலகில் வாள் பிடித்த அரசரெல்லாம் என் தாளினைப் பற்றியிருக்க, ஆள்பிடித்தால் போதுமென்று பிடி கொண்டு விட்டாயோ? என்ன ஆணவமோ உனக்கு? மீள்வதற்கு, வெல்வதற்கோ, இல்லை மாய்வதற்கோ எதற்கென்று அறியாது இத்தீமை செய்தாய். இன்று நீ மாள்வதற்கே வந்தாய் என்று உரைத்தான் மன்னன்.

உதாரனும் உடனே மாமயில் முகில் கண்டு ஆடும். மழை நாட்டிற்குரியோனே! நீ குற்றமென்றால் குற்றமாகிவிடுமோ? மன்னன் மகள் தன் காதலை ஏற்றுக் கொள்ள வேண்டிட, அவள் அழகினில் நான் மதி மயங்கினேன். காமனும் என்னைத் தன்னிடக் கால் இடறிக் கவிழ்ந்தேன். இருட்டினில் நானிருக்க, பல்லாயிரம் நிலவாய் அமுதவல்லி நிற்க, அவள் வெளிச்சம் என் மேல் அடித்தது. நான் தவறு செய்தேன் என்கிறாய். எனக்குதண்டனை தருவதற்கு முன்பு உன் மகளின் நிலையை எண்ணிப்பார்.

கவிஞன் உதாரன் இவ்வாறு கூறவும் மன்னன் வெகுண்டு, உன் உடற்சதையைப் பல கூறுகளாக்கி நரி தின்பதற்கு கொடுத்திடுவேன். தவமாகிய பெற்ற என் பெண் தன் மனதினால் தாங்குவதற்கு இயலாது என்றால் கவலையில்லை.

குறிப்பு

பெரும்பிழை செய்தனை, தக்க தண்டனை உண்டு என்றான். உன் குடியினை வேரோடே நான் அழித்திடுவேன். கொலைஞர்களே வருக என்றவுடன், அவர்களும் உடன் வந்தனர். உதாரன் தலையினைச் சிரச்சேதம் செய்ய கூறிடும் முன் மலையினைப் பிளப்பது போன்ற ஒரு சத்தம் அவ்விடத்திற்கு அமுதவல்லி வந்து கூறினாள். அரசனைப் பார்த்து உனக்கு எவ்வித அதிகாரமும் இல்லை. அந்த எழிலுடைய உதாரன் எவ்விதமான பிழையும் இழைக்கவில்லை என்றாள்.

“ஒருவனும் ஒருத்தியுமாய் - மனம்
உவந்திடில் பிழையென உரைப்பதுண்டோ?
அரசென ஒரு சாதி அதற்
கயலென வேறொரு சாதியுண்டோ?
கரிசன நால்வருணம் - தனைக்
காத்திடும் கருத்தெனில் இலக்கணந்தான்.
தரும்படி அவனை இங்கே நீ
தருவித்த வகையது சரிதானோ?

என் மனமே கவிஞனை இழுத்து அவன் இணங்கினானே அன்றி உதாரன் மீது எவ்வித பிழையுமில்லை. அதற்குக் காரணமாகிய என்னைத் தண்டிக்க வேண்டுமே அன்றி கவிஞனை அல்ல. உனக்கு ஒரு மகளாகிய என்னை வருத்திட அதிகாரம் இல்லை. உன் குடிக்கு கெடுதி இழைத்தான் என்றால், அதனை ஊர் மக்களிடம் எடுத்துரைத்தல் வேண்டுவதே உன் கடமை எனப் பல வார்த்தை கூறி, வானிலிருந்து இடி முழங்குவது போல முழக்கமிட்டுரைத்து, மின்னலென உதாரன் அருகே சென்று அவன் கையினைப் பற்றி அழைத்தாள். இது கண்டு மன்னன் இருவிழிகளும் தீப்பொறி பறக்க எழுந்தான். மொழிந்தான்.

அந்த நாயினை இழுத்து அப்புறம் சேர்ப்பீர். கெட்ட நாவினை அறுத்துத் தொலைத்திடும் முன்னே, நான் பெற்ற பெண்பேய் சொல்லும் பேச்சினை மறந்திடுவீர். என் தூய்மையான குடிக்கு தோஷத்தினைத் தந்த (சிறுக்கியை) அமுதவல்லியைக் காவல்சிறையிலே அடையுங்கள். அந்தப் பொய்யனை (உதாரனை) ஊர்மக்களின் எதிரே கொலை செய்வீர் என்றுரைத்தான். சேவகர்களும் உதாரன் அமுதவல்லியை நெருங்க அப்பொழுது அக்கூட்டத்திலிருந்த ஒரு மந்திரி மன்னனைப் பார்த்து

கூறினான். அமுதவல்லிக்குத் தரும் தண்டனை நீதியன்று. அதனைத் தவிர்த்திடுக என்றான்.



### 2.4.6 கொலைக்கள நிகழ்வும், புரட்சி உரையும்.:

அமுதவல்லி மந்திரியைப் பார்த்து என்னை மன்னித்து உதாரனுக்குத் தண்டனை தருவது நன்றோ? உதாரன் உயிர் துறக்க, நான் உயிருடனிருப்பேனோ?

“சாதல் எனில் இருவருமே சாதல் வேண்டும்
தவிர்வதனில் இருவருமே தவிர்தல் வேண்டும்
ஒருக இவ்விரண்டிலொன்று மன்னவன் வாய்!
உயிர்எமக்கு வெல்லமல்ல! என்றாள் மங்கை”

என்றாள்.

மன்னன் உடனே என் ஆணையைச் சபையிலுள்ளோர் மறுப்பீரோ? புகழ்மிக்க என் செங்கோலை வேற்று மன்னர் இகழும்படி பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதோ? என் ஆணை, என் ஆணை, உதாரனோடு அமுதவல்லி இருவரையுமே கொலை செய்வீர் என்று கட்டளை இட்டான்.

அவையானது பேச்சு மூச்சற்று அச்சடித்த பதுமைகள் போலே இருந்தனர். சுவையறிந்த பின் உணவின் தன்மை கூறுவார் போல அமுதவல்லியும் உதாரனிடம் என் காதல் துரையே! கேட்பாயாக! எவையும் நம்மைப் பிரிக்கவில்லை. இன்பம் கண்டோம். இறப்பதிலும் ஒன்றாவோம். அநீதி செய்த குற்றமுடைய மன்னனுக்கு இந்நாட்டு மக்கள் நல்ல பாடம் கற்பிப்பார்கள். இந்த அநீதியிலே வாழ வேண்டாம். இறப்பினைத் தழுவி இணையற்ற இன்பத்தினைப் பெறுவோம். பருந்தும், நரியும், பலிபீடமும், கொடுவாளும் தயாராகட்டும். கொலை செய்யும் ஏதேச்சதிகார மன்னன் வாள் பொருந்தட்டும் நம் தலையில், பொதுமக்கள் ரத்தச் சேற்றை அருந்தட்டும் என்றாள். காதலர்கள் இருவரும் சென்றனர்.

குறிப்பு

உதாரனும் அமுதவல்லியும் கொலை செய்ய காத்திருக்கும் கொலைஞர்களும், ஓரிடம் நின்றனர். அலைகடல் போல பெருமக்கள் தங்கள் வீட்டினைப் பூட்டிக் கொண்டு கொலை நடக்குமிடம் வந்தனர். உதாரனையும் அமுதவல்லியையும் பேசிடுமாறு தலைப்பாகை அதிகாரி நேரம் ஒதுக்கிட, தமிழ்க்கவிஞன் உதாரன் மக்களிடையே முழங்கிட்டான்.

பேரன்பு கொண்ட பெரியோரே, பெற்ற தாய்மாரே, நல் இளஞ்சிங்கங்களே, நீரோடை நிலத்தினைக் கிழித்துக் கொண்டு செல்ல, நெடிய மரங்கள் நிறைந்த பெருங்காடுகள் உருவாக, பெரிய விலங்குகள் அக்காட்டினில் வாழ்ந்திருக்க, பருக்கைக் கற்களானது நிறைந்த நெடிய குன்றில் குகைகளிலே பாம்புக்கூட்டம் வாழ்ந்திருக்க, அப்பாழ்நிலத்தைப் பண்படுத்தியவர் யார்? அழகிய நகராக்கி, சிறிய ஊர்களும், வரப்பும் கொண்ட வயல்களையும், ஆறு தேக்கிய நல்ல வாய்க்கால்களையும் வகைப்படுத்தி, நெல்மணிகள் சேர உழுது, அதனால் பயன் பெறுவதற்குக் காரணமான தோள்கள் எவருடைய தோள்கள்.

“கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
கருவியெல்லாம் செய்து தந்த கைதான் யார் கை?
பொற்றுகளைக் கடல்முத்தை மணிக் குலத்தைப்
போய் எடுக்க அடக்கிய மூச்சு எவரின் மூச்சு?

அக்காலத்தே உலகின் இருட்டைத் தலைகீழாக்கி அழகியதாய், வசதியாய்ச் செய்து தந்தார். இக்கால நான்குவகையான (அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர்) வருணத்தார் அன்றிருந்திருந்தால் இருட்டிற்கு முன்னேற்றம் ஆவதன்றி வேறு பயன் உண்டாகியிருக்குமோ? ஒவ்வொரு பொழுதும் நீர், நெருப்பு, சேறு, விஷப்பாம்பு, குகை, கடும்பசி, நோய் போன்றவற்றிற்குப் பலியாகி தங்கள் கால், கை,உடல்களைச் சிந்திப் பச்சை இரத்தம் பரிமாறி இந்த நாட்டினை வளமுடைய, வருவாயுடைய நாடாக உருவாக்கித் தந்தது எவர்? அந்த உழைப்பாளர்கள் அனைவரும் இன்று எலியாக, முயலாக இருக்கின்றனர். ஏமாந்த காலத்தில் ஏற்றம் உடையோன் புலி வேஷம் போடுகின்றான். பொதுமக்களுக்குச் சிறிதேனும் மதிப்பும் தருவதில்லை. அரசனுக்கும் எனக்கும் இடையே ஒரு வழக்கு உள்ளது. அதனைத் தீர்ப்பதே பொதுமக்கள் தீர்ப்பு தான். அமுதவல்லியும் நானும் சாவதற்கே தீர்ப்பு

குறிப்பு

அளித்தான். நாங்களிருவரும் சாவதற்கே வந்தோம். ஒரு மனிதன் தேவைக்கே இந்தத் தேசம் உண்டென்றால் அந்தத் தேசம் இருப்பதை விட இல்லாதிருப்பதே நன்று. நாங்களிருவரும் சாகின்றோம். நீங்கள் அனைவரும் நாளை உயிரோடு இருப்பீர்கள் என்பதற்கு என்ன உறுதி?

மன்னன், தன் மகளிற்குக் கவிதை கற்றுக் கொடுக்க வரச் சொன்னான். அவ்வாறு கற்றுத் தரும் வேளையில் இப்பொன் மகளும் காதல் எந்திரத்தால், என் புலன்களை மாற்றி வைத்தாள். நானும் ஒப்புக் கொண்டேன். என் உயிர் போவதற்கு அழவில்லை. எழுதாத சித்திரமென விளங்கும் அமுதவல்லியின் உயிர் போவதற்கே நடுக்கம் கொள்கிறேன்.

“தமிழறிந்ததால் வேந்தன் எனை அழைத்தான். தமிழ்க்கவியென்றெனை அவளும் காதலித்தாள். அமுதென்று சொல்லுமிந்தத் தமிழ் என்னாவி அழிவதற்குக் காரணமாயிரந்ததென்று சமுதாயம் நினைத்திடுமோ? ஐயகோ – என் தாய்மொழிக்குப் பழி வந்தால் சகிப்பதுண்டோ? உமை ஒன்று வேண்டுகின்றேன். மாசில்லாத உயர்தமிழை உயிர் என்று போற்றுமின்கள்”
அரசனுக்குப் பிறகு ஆளப்பிறந்த மகளைக் கொலை செய்வதற்கு அரசனுக்கு அதிகாரம் உண்டோ? அரசன் சட்டத்தை அவமரியாதை செய்கின்றானோ? தலை அறுப்பது வேந்தனுக்கு பொழுது போக்கும் சிறிய கதை போல, நமக்கோ அது உயிரின் வாதை. அரசன் மகள் ஆட்சி செய்யும் உரிமை மக்களுக்கும் உரியது என மாற்ற நினைத்திருந்தாள். அவளைக் காப்பீர்! அழகிய என் திருநாடே! அன்பு நாடே! இந்த உலகத்திலே உன் பெருமையினை, நல்ல நதியினை, உயர்ந்த குன்றினை, தேனை அள்ளிப் பெய்யும் நறுமணமிக்க சோலையினை, தமிழால் பாடும் மிகப் பெரிய ஆவலானது என்றும் தீர்ந்ததே இல்லை. அத்தகைய பேராவலானது உண்மை இதயம் அறுபட, அந்த இரத்த வெள்ளம் வெளிப்பட தீருமன்றோ!

“வாழியென் நன்னாடு பொன்னாடாக
வாழியநற் பெருமக்கள் உரிமை வாய்ந்தே
வீழியபோய் மண்ணிடையே விண்விழ் கொள்ளி
வீழ்வதுபோல் தனித்தாளும் கொடிய ஆட்சி

குறிப்பு

ஏழையினேன் கடைசிமுறை வணக்கம் செய்தேன்
என்பெரியீர், அன்னையீர் ஏகுகின்றேன்.
ஆழ்க என்றன் குருதியெலாம் அன்புநாட்டில்
ஆழ்க என்றான்! தலைகுனிந்தான்!"

அமுதவல்லியின் கண்களிலிருந்து கண்ணீர் சிலைக்கு பாலாபிஷேகம் செய்வது போலப் பெருக்கெடுக்கக் கண்டார்கள். அன்பு செய்தவர்கள் இவ்வுலகில் வாழ முடியாதோ என்று சொல்லிப் பதைபதைத்தாள். தேசமக்கள் அனைவரும் அது கேட்டு கொதித்தெழுந்து கொடிய வாளினைப் பறித்தார். அந்தக் கொலைஞர்கள் உயிர் தப்ப ஓடினர். கவிஞனுக்கும், காதலிக்கும் (உதாரன், அமுதவல்லி) சாவிலிருந்து மீட்சி கொடுத்தார். மன்னனிடம் தூதொன்று போகக் கூறினார். மன்னனுக்கு ஆட்சி என்பது இனி இல்லை என்னும் செய்தி தூது சென்று உரைப்பதற்கு முன்பு மன்னன் செவியில் சேர்ந்தது. மன்னனும் ஆட்சியும், உரிமையும், பொறுப்பும் யாவும் மக்களைச் சார்ந்தது என்று சட்டம் செய்தார். எவ்விதக் குறையுமின்றி நலம் யாவும் வாய்ந்தது.

## 2.5 தொகுப்புரை:

பாவேந்தர் பாரதிதாசன் இயற்றிய 'புரட்சி கவி' என்னும் குறுங்காவியம் அமுதவல்லி உதாரன் ஆகிய இருவரையும் மையப்படுத்தி எழுதப்பெற்ற காவியம். அமுதவல்லியின் தந்தையாகிய மன்னன் அவளுக்குப் கவிதை புனையும் பாடம் கற்பிக்க உதாரனை அமைச்சன் மூலம் ஏற்பாடு செய்திருந்த நிலையில், அவர்களிருவருக்கும் இடையே திரையிட்டு அமுதவல்லி குஷ்டரோகி என்றும் உதாரன் 'கண்பார்வை அற்றவன்' என்றும் கூறி வைத்திருந்தனர். உதாரன் நிலவினைப் பற்றிப் பாடிய கவிதையைக் கேட்டு அமுதவல்லி அவன் கண் பார்வை உடையவன்' என்பதை அறிந்தாள். அவனைக் கண்டு தன் காதலைச் கூறினாள். உதாரன் அமுதவல்லியும் குஷ்டரோகி அல்ல என்பதை அறிந்தான். அவள் அரசனின் மகள் என்பதை அறிந்தான். அவள் அரசனின் மகள் என்பதால் உதாரன் அவள் காதலை ஏற்றுக்கொள்ள மறுத்தான். பிறகு உதாரன் காதலை ஏற்றுக் கொண்டான். மன்னனுக்கு அமுதவல்லி உதாரன் காதல் தெரிந்து உதாரனைக் கொல்ல முற்பட, அமுதவல்லி

வந்து தடுத்து மன்னனிடம் இருவரையுமே கொன்றுவிடுமாறு கூறுகின்றாள். இறுதியாக உதாரன் மக்களிடம் உரையாற்ற, மக்கள் மன்னனை எதிர்க்க உதாரன் அமுதவல்லி இருவரும் மன்னனின் தண்டனையிலிருந்து விடுபடுகின்றனர். மன்னராட்சி முறை முடிந்து மக்களாட்சி மலருகின்றது. ஒரு கவிஞன் தன் பண்பால், மொழியால் உரையால் மக்களின் மனதை மாற்றி அமைக்கும் வல்லமை கொண்டதால் 'புரட்சிக்கவி' என்னும் தலைப்பு சிறப்பிற்குரியதாகின்றது. அமுதவல்லி உதாரன் உரையாடல் மொழிகளும், உதாரன் மன்னன் உரையாடலும், உதாரன் மக்களிடம் உரையாடும் உரையும், கவிச்சிறப்பும் கருத்துச் செறிவும் கொண்டு விளங்குவன போன்ற செய்திகளை இக்கூறு எடுத்துரைத்து உள்ளது

.

## 2.6 மாதிரி வினாக்கள் (2 மதிப்பெண்கள்)

1. பாரதிதாசனின் 'புரட்சிக்கவி' எவ்வகை இலக்கியம்?
   குறுங்காவியம்
2. புரட்சிக்கவியை இயற்றியவர் யார்?
   பாரதிதாசன்
3. 'புரட்சிக்கவி'யில் புரட்சிக்கவியாக விளங்கும் கதாப்பாத்திரம் யார்?
   உதாரன்
4. உதாரனின் காதலி யார்?
   அமுதவல்லி.
5. உதாரனும் அமுதவல்லியும் எத்தகையோர் எனக்கூறி அமைச்சன் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்தான்?
   உதாரன் கண்பார்வை அற்றவன் என்றும், அமுதவல்லி 'குஷ்டரோகி' என்றும் அமைச்சன் கூறி அவர்களிடையே திரையிட ஏற்பாடு செய்தான்.
6. மன்னன் உதாரனுக்கு எத்தண்டனை அளித்தான்?
   சிரச்சேதம்
7. உதாரன் எதனைக் கண்டு கவிதை பாடினான்?
   நிலாவினைக் கண்டு கவிதை பாடினான்.
8. அமுதவல்லி மன்னனிடம் என்ன கூறினாள்?
   உதாரனை மட்டும் கொல்லாது தன்னையும் சேர்த்துக் கொல்லுமாறு கூறினாள்.

குறிப்பு

9. உதாரன் எவரிடம் புரட்சி உரை ஆற்றினான்?
மக்களிடம்

10. மக்கள் இறுதியில் எவ்வித ஆட்சியைப் பெற்றனர்?
மக்களாட்சியைப் பெற்றனர்.

## 2.7 பயிற்சி வினாக்கள்

(5 மதிப்பெண்கள், 10 மதிப்பெண்கள்)

1. அரசன் அமைச்சன் உரையாடலை விளக்குக. (5 மதிப்பெண்)
2. உதாரன் நிலவினை எங்ஙனம் வருணித்தான்? (5 மதிப்பெண்)
3. பாரதிதாசனின் கவிநயத்தினை நிலவின் வருணை வழி விளக்குக. (5 மதிப்பெண்)
4. உதாரன் மன்னன் உரையாடலை விளக்குக (5 மதிப்பெண்)
5. உதாரன் மக்களிடம் ஆற்றிய உரையினை விளக்குக. (5 மதிப்பெண்)
6. 'புரட்சிக்கவி' குறுங்காவியத்தில் உதாரன், அமுதவல்லியின் பங்களிப்பினை விவரிக்க (10 மதிப்பெண்)
7. 'புரட்சிக்கவி' யில் உதாரன் அமுதவல்லியின் காதல் எங்ஙனம் வென்றது என்பதை அக்கதை வழி விளக்குக. (10 மதிப்பெண்)
8. பாரதிதாசனின் கற்பனைத் திறத்தை, கவித்திறத்தை 'புரட்சிக்கவி' மூலம் விவரிக்க (10 மதிப்பெண்)
9. 'புரட்சிக்கவி' என்னும் குறுங்காவியத்தை கதையினைக் கூறி அதன் புரட்சிக் கருத்துக்களைத் தொகுத்து விளக்குக. (10 மதிப்பெண்)
10. 'உழைக்கும் வர்க்கமே முதன்மை வர்க்கம்' என்பதை 'புரட்சிக்கவி' எங்ஙனம் நிறுவியுள்ளது? (10 மதிப்பெண்)

## 2.8 மேலும் படித்தறிக

பாரதிதாசன் கவிதைகள்
கற்பகம் புத்தகாலயம்
பதிப்பு ஆண்டு-2016

# கூறு 3
# இ - பாரதிதாசன்
## புதியதோர் உலகு செய்வோம்

குறிப்பு



## 3.1 அறிமுகம்:

மரபுக்கவிதையில் 'பாரதிதாசன் மரபு' என்னும் மரபினைத் தோற்றுவித்தவர் பாரதிதாசன். தமிழின் பெருமையினையும், தமிழ்நாட்டின் சிறப்பினையும், பெண்களின் உரிமையையும், பகுத்தறிவுச் சிந்தனையையும் தம் பாடல்களில் பாடியவர். 'புதியதோர் உலகு செய்வோம்' என்னும் பகுதியில் போரினை விடுத்து அன்பினைப் பாய்ச்சி, பொதுவுடைமைச் சிந்தனையைத் தம் பாடலில் எடுத்துரைத்து உள்ளார். இச்செய்திகளை இக்கூறில் அறியலாம்.

## 3.2 – நோக்கம்

1. பாரதிதாசன் அறிமுகம், சிறப்பு தெரிதல்.
2. பாடற்பொருள் அறிதல்.
3. கவிதைச் சிறப்பு தெளிதல்.
4. கவிதையுணர்ச்சி பெறுதல்
5. படைப்புணர்ச்சி வெளிப்படுத்துதல்.

## 3.3 – பாரதிதாசன்



பாரதிதாசன் இயற்பெயர் கனகசுப்புரத்தினம் இவர் 1891ஆம் ஆண்டு கனகசபைக்கும் இலக்குமி அம்மாளுக்கும் புதுச்சேரியில் பிறந்தவர். பாரதியிடம் கொண்ட அன்பினால் தன் பெயரை பாரதிதாசன் என மாற்றிக்கொண்டார். திராவிட இனம், திராவிட நாடு, திராவிட மொழியாகிய தமிழ் மொழி போன்றன குறித்தும், பகுத்தறிவுச் சிந்தனையையும் மக்களிடையே தம் பாடல் மூலமாக கொண்டு சென்றவர். தொடக்கத்தில் இறைப்பக்திப் பாடல்களை எழுதிய பாரதிதாசன் பிற்காலத்தில் திராவிட இயக்கத்தைச் சார்ந்து மக்களிடையே அறிவு சார்ந்த விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தும் பாடல்களை, இயற்றினார். 'பிசிராந்தையார்','வீரத்தாய்' போன்ற கவிதை நாடகங்களையும்,'பாண்டியன் பரிசு' என்னும் பெருங்காப்பியத்தையும் ' எதிர்பாராதமுத்தம்','புரட்சிக்கவி' போன்ற குறுங்காவியங்களையும்,'இருண்ட வீடு','குடும்பவிளக்கு','சஞ்சீவிப் பர்வதத்தின் சாரல்','அழகின் சிரிப்பு', கண்ணகி புரட்சிக் காப்பியம்', 'மணிமேகலை வெண்பா', 'புதிய ஆத்திச்சூடி', 'இசையமுது', 'தேனருவி', காதலா கடமையா' போன்ற பல நூல்களையும் இயற்றியுள்ளார்.

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு"

என்று தமிழின் சிறப்பினைப் பாடியுள்ளார். 'தமிழ்' என்னும் சொல்லினைப் பல்வேறு பொருளில் மிக அதிக எண்ணிக்கையில் பயன்படுத்திய கவிஞர் பாரதிதாசன் மட்டுமே.

"கல்வி இல்லாத பெண்கள் களர்நிலம் அந்நிலத்தில்
புல் விளைந்திடலாம் நல்லபுதல்வர்கள் விளைவதில்லை".

என்று பெண்கள் கல்வியறிவு பெறவும், பெண்ணடிமை தீரவும், விதவைப்பெண்கள் மறுமணம் புரியவும் எனப் பெண்ணுரிமை சார்ந்த சிந்தனைகளைத் தம் பாடல்களில் பாடியதால்,'புரட்சிக்கவிஞர்' என்னும் சிறப்பினைப் பெற்றார். இவர் 1964ஆம் ஆண்டு இம்மண்ணுலகை விட்டு மறைந்தாலும் பாரதிதாசனின் படைப்புகள் என்றும் மறைவதில்லை.

## 3.4 – புதியதோர் உலகு செய்வோம்

குறிப்பு

"புதியதோர் உலகம் செய்வோம் - கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்
பொதுஉடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்
புனிதமோ டதை எங்கள் உயிரென்று காப்போம்
இதயமெலாம் அன்பு நதினில் நனைப்போம்
இது எனதென்னுமோர் கொடுமையைத் தவிர்ப்போம்
உணர்வெனும் கனலிடை அயர்வினை எரிப்போம்
ஒரு பொருள் தனி எனும் மனிதரைச் சிரிப்போம்
இயல்பொருள் பயன்தர மறுத்திடில் பசிப்போம்
ஈவதுண்டாம் எனில் அனைவரும் புசிப்போம்"

புதுமையான ஓர் உலகத்தைப் படைப்போம். அதில் பல புதுமைகளைப் புகுத்துவோம். கொடுமையான போரினை நிகழ்த்திவரும் இவ்வுலகத்தை வேரோடு சாய்த்து விடுவோம். அதனை மாற்றி அமைப்போம். பொது உடைமைக் கொள்கையாகிய எல்லாரும் எல்லாமும் பெறவேண்டும் என்னும் கொள்கையை எட்டுத் திசைகளிலும் உள்ள மக்களிடம் கொண்டு சேர்ப்போம். புனிதமாக அதை எங்கள் உயிரென்று காப்போம். மக்கள் மனங்களில் அன்பு என்னும் நதியினைப் பெருக்கெடுக்க செய்து நனைப்போம். இது என்னுடையது, எனக்கு மட்டுமே சொந்தமானது என்னும் குறுகிய சிந்தனையை, கொடுமையைத் தவிர்ப்போம். நம் உணர்வென்னும் நெருப்பில் சோம்பல் என்னும் பண்பினைச் சுட்டெரித்து வாழ்வோம். ஒவ்வொரு பொருளும் ஒரு தனி மனிதனுக்குச் சொந்தம் என்னும் கொள்கையினைக் கூறும் மனிதரைக் கண்டு எள்ளி நகையாடுவோம். பொருட்கள் அனைத்தும் பயன்தர மறுத்துவிட்டால் அனைவரும் பசியோடு இருப்போம். பிறருக்குக் கொடுத்து வாழும் நிலை வந்தால் அதனை அனைவரும் ஏற்று புசித்து (உண்டு) மகிழ்வோம்.

## 3.5 - தொகுப்புரை

குறிப்பு

பாரதிதாசன் இயற்றிய ‘புதியதோர் உலகு செய்வோம்’ என்னும் மரபுக்கவிதை பொதுவுடைமைச் சிந்தனையைக் கூறுவது. இவ்வுலகம் பொதுவானது. இவ்வுலகிலுள்ள பொருட்கள் பொதுவானவை. அனைவரும் அனைத்தையும் பெறுவதற்கு உரிமை உண்டு. இதனை மறுத்திடுவோருக்கு எதிர்ப்பு தெரிவிப்பதோடு அவருக்கும் பொதுவுடைமைச் சிந்தனையை உணர்த்திட வேண்டும். எல்லாரும் எல்லாமும் பெறவேண்டும். எவரும் இல்லாத நிலை இவ்வுலகில் மறைதல் வேண்டும் என்னும் பொதுவுடைமைக் கொள்கையை வலியுறுத்தும் பாடல் போன்ற கருத்துக்களை இக்கூறு குறிப்பிட்டுள்ளது.

## 3.6 மாதிரி வினாக்கள் (2 மதிப்பெண்கள்)

1. பாரதிதாசனின் இயற்பெயர் என்ன?

   கனகசுப்புரெத்தினம்

2. பாரதிதாசன் எழுதிய நூல்கள் எவை?

   அழகின் சிரிப்பு, குடும்பவிளக்கு, இருண்டுவீடு,பாண்டியன் பரிசு, பிசிராந்தையார் போன்றன.

3. ‘புதியதோர் உலகு செய்வோம்’ என்னும் கவிதையை இயற்றியவர் யார்?

   பாரதிதாசன்

4. ‘புதியதோர் உலகு செய்வோம்’ பாடலின் மையப் பொருள் என்ன?

   ‘புதியதோர் உலகு செய்வோம்’ என்னும் பாடலின் மையப்பொருள் பொதுவுடைமைச் சிந்தனை.

5. ஒரு பொருள் தனிமனிதருக்கு அல்ல, பொதுவானது என்னும் சிந்தனையைக் குறிப்பிடும் கொள்கை எது?

   பொதுவுடைமைக் கொள்கை.

3.7 பயிற்சி வினாக்கள் (5 மதிப்பெண்கள், 10 மதிப்பெண்கள்)

1. பாரதிதாசனின் சிறப்புகள் எவை? (5 மதிப்பெண்கள்)
2. புதியதோர் உலகு செய்வோம் - கவிதை தரும் பொருளினை விளக்குக? (5 மதிப்பெண்கள்)

3. பாரதிதாசனின் கவிதையிலுள்ள கருத்தினை, சொற்பொருள் நயத்தினை விவரிக்க? (5 மதிப்பெண்கள்)



## 3.8 மேலும் படித்தறிக.

1. பாரதிதாசன் கவிதை நூல்கள் (தொகுப்பு)
   கற்பகம் புத்தகாலயம்
   பதிப்பு ஆண்டு -2016

# கூறு : 4 மரபுக்கவிதை

மனோன்மணியம் சுந்தரம்பிள்ளையின் தமிழ்த்தெய்வ வணக்கம்



## 4.1 - அறிமுகம்

மரபுக்கவிதைகளில் பாவும் பாவினங்களும் முதன்மையானவை. பாக்களில் நடம் புரியும் ஓசைநயத்தில் மரபுக்கவிதையின் வீச்சும் அழகும் அதன் தனிச்சிறப்பாகும். ‘மனோன்மணியம்’ என்னும் தமிழின் முதல் நாடகத்தில் உள்ள ‘தமிழ்த்தெய்வ வணக்கம்’ என்னும் வாழ்த்துப்பகுதி தமிழ்மொழியின் பெருமையினை உலகிற்குப் பறை சாற்றும் வாழ்த்து. தமிழின் சிறப்பினைக் கூறும் ‘தமிழ்த்தெய்வ வணக்கம்’ என்னும் பாடல் தமிழகத்தில் மட்டுமின்றி தமிழ்மொழி பேசும் அனைத்து விழாக்களிலும், பள்ளிகளிலும் வணக்கப்பாடலாக,

முதன்மைப்பாடலாகப் போற்றப்படுகின்றது. “கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றிய மூத்த குடி” என்னும் பெருமைக்கு உரியதாக விளங்குவது தமிழகம் மட்டுமின்றி தமிழ் மொழியுமாம். அவ்வகையில் தமிழின் பெருமையினை எடுத்துரைக்கும் ‘தமிழ்த்தெய்வ வணக்கம்’ பாடலின் கருத்தினையும், சிறப்பினையும் இக்கூறு எடுத்துரைக்க உள்ளது.

## 4.2 – நோக்கம்

1. மனோன்மணியம் சுந்தரம்பிள்ளையின் அறிமுகம், சிறப்புகள் அறிதல்.
2. தமிழ்மொழியின் பெருமையினை உணர்தல்.
3. மரபுக்கவிதையின் நயத்தினைத் தெரிதல்.
4. மாணவர்களின் கவிதை எழுதும் ஆர்வத்தினைத் தூண்டுதல்

## 4.3 – பேராசிரியர் சுந்தரம்பிள்ளை

பேராசிரியர் சுந்தரம்பிள்ளை கேரளாவில் ‘ஆழப்புழா’ என்னும் இடத்தில் 1855ஆம் ஆண்டு பிறந்தார். இவர் பெற்றோர் பெருமாள் பிள்ளை – மாடத்தி அம்மாள். இளம் வயதில் தேவாரம், திருவாசகத்தில் ஈடுபாடு கொண்டவர். திருஞானசம்பந்தர் குறித்த கால ஆராய்ச்சியினை மேற்கொண்டு 1894இல் வெளியிட்டார். ‘பத்துப்பாட்டு’ பற்றிய திறனாய்வினை ஆங்கிலத்தில் எழுதி சென்னை கிறிஸ்த்தவ கல்லூரி இதழில் வெளியிட்டார். இவர் ‘லிட்டன்பிரபு’ எழுதிய ‘இரகசிய வழி’ என்னும் நூலினைத் தழுவி ‘மனோன்மணியம்’ என்னும் செய்யுள் நாடகத்தினை இயற்றி வெளியிட்டார். இந்நாடகத்தில் தமிழ்த்தாயினை வணங்கும் வகையில் ‘தமிழ்த்தெய்வ வணக்கம்’ என்னும் பாடலை இயற்றியுள்ளார். இப்பகுதி 1970இல் தமிழக அரசினால் சில திருத்தங்களுடன் தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலாக அறிவிக்கப்பட்டது. தமிழக அரசு விழாக்களில் கல்வி நிறுவன விழாக்களில் பொதுநிகழ்ச்சிகளில் தமிழ்த்தாய் வாழ்த்து பாடிய பிறகே நிகழ்ச்சி தொடங்கப்பெறும். பேராசிரியர். பெ.சுந்தரம்பிள்ளை ‘ராவ்பகதூர்’ என்னும் பட்டம் பெற்றவர். இவர் மாணவராக தனித்தமிழ் இயக்கத்தின் தந்தை ‘மறைமலையடிகள்’ குறிப்பிடப்படுகின்றார். பேராசிரியர்

சுந்தரம்பிள்ளையின் தொண்டினைச் சிறப்பிக்கும் வகையில் தமிழகத்துப் பல்கலைக்கழகங்களில் ஒன்றிற்கு ‘மனோன்மணியம் சுந்தரனார்’ என்னும் பெயரினை வைத்துள்ளனர்.

குறிப்பு

## 4.4 – தமிழ்த்தெய்வ வணக்கம்

“நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கே
உன் சீரிளமைத் திறம் வியந்து செயல் மறந்து
வாழ்த்துதுமே! வாழ்த்துதுமே! வாழ்த்துதுமே!

நீர் நிறைந்த கடல் என்னும் ஆடை உடுத்திய நிலம் என்னும் பெண்ணிற்கு அழகு மிளிரும் சிறப்பு நிறைந்த முகமாகத் திகழ்வது பரதக்கண்டமாகிய இந்தியத்திருநாடு. அதில் தென்னாடும், தென்னாட்டில் சிறந்த திராவிடர்களின் நல்ல திருநாடும், அதில் பிறை போன்ற நெற்றியாகவும், அதிலிட்ட மணம் வீசும் திலகமாகவும் இருக்கின்றன. அத்திலகத்திலிருந்து வரும் வாசனை போல அனைத்து உலகமும் இன்பம் பெறும் வகையில் எல்லாத் திசையிலும் புகழ் மணக்கும்படி இருந்த பெருமை மிக்க தழிழ்ப்பெண்ணே! இன்றும் இளமையாக இருக்கும் உன் சிறப்பான திறனை வியந்து எங்கள் செயல்களை மறந்து உன்னை வாழ்த்துவோமே!

இப்பாடலில் அழகான பூமிப்பெண்ணிற்கு பரந்த இந்தக் கடல் தான் ஆடை. பாரதநாடே அவளின் முகம். தென்திசை அதன் நெற்றி. அதில் திலகமெனத் திகழ்வது திராவிட திருநாடு. அந்தத் திலகத்தின் வாசனை போல் அனைத்து உலகமும் இன்பம் காண எல்லா திசையிலும் புகழ் மணக்க இருக்கும் தெய்வமகளானவள் எங்கள் தமிழ்மகள்.

குறிப்பு

அவள் தன் இளமை மாறாது (முக்காலமும் வாழும் மொழியானவள்). சிறப்பு திறம் பெற்ற தமிழணங்கே! உன் பேரழகினைக் கண்டு வியந்து எங்கள் செயல் மறந்து வாழ்த்துகிறோம்! வாழ்த்துகிறோம்! வாழ்த்துகிறோம்! என்பதே கவிதைநயம் மிக்க வரிகளாக விளங்குகின்றன.

## 4.5 தொகுப்புரை:

மரபுக்கவிதையில் தமிழின் பெருமையினைப் பேராசியர் சுந்தரம்பிள்ளை இயற்றியுள்ளார். 'தமிழ்த்தெய்வ வணக்கம்' என்னும் வாழ்த்துப்பகுதி மனோன்மணியம் நாடகத்தில் இடம்பெற்றுள்ளது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் வாழ்க்கைக்குறிப்பும் தமிழின் சிறப்பினையும் இக்கூறு தொகுத்து உரைத்துள்ளது.

## 4.6 மாதிரி வினாக்கள்

1. 'தமிழ்த்தெய்வ வணக்கம்' இடம் பெற்ற நூல்' எது?

   மனோன்மணியம்.

2. பேராசிரியர் சுந்தரம்பிள்ளை இயற்றிய மனோன்மணியம் எவ்வகையான நூல்?

   நாடக நூல்

3. தமிழ்மொழி பேசும் அனைத்து இடங்களிலும் விழாக்களிலும் தொடக்கத்தில் பாடப்பெறும் பாடல் எது?

   தமிழ்த்தாய் வாழ்த்து

4. தமிழ்த்தாய் வாழ்த்தினை இயற்றியவர் யார்?

   பேராசிரியர் சுந்தரம்பிள்ளை.

5. 'லிட்டன் பிரபு' எழுதிய எந்நூலினைத் தழுவி மனோன்மணியம் இயற்றப்பெற்றது?

   இரகசிய வழி.

## 4.7 பயிற்சி வினாக்கள்

1. 'தமிழ்த்தெய்வ வணக்கம்' பாடல் - தரும் தமிழ்த்தெய்வத்தின் சிறப்புகளை விளக்குக. (5 மதிப்பெண்கள்)

2. பேராசிரியர் சுந்தரம்பிள்ளையின் பெருமைகளை விளக்குக. (5 மதிப்பெண்கள்)

3. தமிழின் பெருமையினைத் தமிழ்த்தெய்வ வணக்கம் வழி விவரிக்க. (10 மதிப்பெண்கள்)

குறிப்பு

## 4.8 – மேலும் படித்தறிக:

மனோன்மணியம் சுந்தரனாரின் இன்னொரு பக்கம்

அ.கா. பெருமாள்

நியூ செஞ்சுரி புக் விரிவுரை(பி)லிட்

41-டீ – சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்

அம்பத்தூர்

சென்னை - 600 098.

குறிப்பு

# பிரிவு -2

## கூறு - 5 - கவிஞர் சுரதா

### சிக்கனம்



## 5.1 அறிமுகம்

கவிஞர் சுரதா இயற்றிய மரபுக்கவிதையான 'சிக்கனம்' என்னும் கவிதை சிக்கனத்தின் அருமையினை எடுத்துரைப்பது. பாரதிதாசன் மீது கொண்ட பற்றினால் தம் பெயரை 'சுரதா' என அமைத்துக்கொண்டார். பல கவிதை நூல்களையும் கவியரங்குகளையும் நிகழ்த்தியவர். 'உவமைக்கவிஞர்' என்னும் சிறப்பினைப் பெற்றவர். பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர். மரபுக்கவிதை எழுத விரும்புவோருக்கு பயிற்ச்சிக்களமாக சுரதாவின் பாடல்கள் அமையும். இக்கூறு சுரதாவின் 'சிக்கனம்' கவிதை மூலம் கவிதைநயத்தினை அறிவதற்கும் உரியதாகின்றது.

## 5.2 நோக்கம்.

1. கவிஞர் சுரதா குறித்து அறிதல்.
2. 'சிக்கனம்'– கவிதைநயம் தெரிதல்.
3. கவிதையில் கருத்துச் செறிவு பற்றி அறிதல்.

## 5.3 - சுரதா

குறிப்பு

கவிஞர் சுரதாவின் இயற்பெயர் இராசகோபாலன். இவர் பாரதிதாசன் மீது கொண்ட ஈடுபாடு, பற்றின் காரணமாக தன் பெயரினை 'சுப்புரத்தினம்' என்னும் பாரதிதாசன் பெயரிலுள்ள 'சுர' என்பதோடு 'தாசன்' என்னும் பொருள்படும்படி 'தா' என்னும் எழுத்தினைச் சேர்த்து 'சுரதா' என்று பெயர் வைத்துக்கொண்டார். 'சுரதா' 1921ஆம் ஆண்டு திருவேங்கடம் செண்பகம் அம்மையாருக்கு பழையனூரில் மகனாகப் பிறந்தவர். இவர் பாரதிதாசனைச் சந்திப்பதற்குப் பணமில்லை என்று சுண்ணாம்படிக்கும் வேலை செய்து பணம் பெற்று பாரதிதாசனைப் புதுச்சேரியில் சென்று சந்தித்தார். 'உவமைக்கவிஞர் சுரதா' எனச் சிறப்பிக்கப்படுபவர். 'துறைமுகம்','அமுதும் தேனும்','சாவின் முத்தம்','ஊர்வலம்','சுவரும் சுண்ணாம்பும்','தேன்மழை','விண்மீன்','வார்த்தை வாசல்' போன்ற நூல்களைப் படைத்துள்ளார். திரையிசைப்பாடல்களையும் இயற்றியுள்ளார். படகுக் கவியரங்கம், கப்பல் கவியரங்கம், விமான கவியரங்கம் போன்ற கவியரங்கங்களையும் நிகழ்த்தியுள்ளார். இவர் 2006இல் தன் 86ஆம் வயதில் உயிர் துறந்தார்.

## 5.4 சிக்கனம்

"உரைநடையின் சிக்கனம் - கவிதை
ஓங்கும் உணர்ச்சிகளின் சிக்கனம் - அடக்கம்
காதல் வரவேற்பின் சிக்கனம் - பெண்ணின் நாணம்
மாளிகையின் சிக்கனம் - குடிசை
உரிமைகளின் சிக்கனம் - சட்டதிட்டம்
உணவுகளின் சிக்கனம் - பங்கீடு
அரசியலின் சிக்கனம் - இரண்டே கட்சி
அனுபவத்தின் சிக்கனம் - நீதிநூல்கள்
பகட்டு வாழ்க்கை நீராவி போன்றது
சீராகச் செட்டாக ஒவ்வோர் நாளும்
சிக்கனமாய்ப் பெரியார் போல் வாழ்ந்து வந்தால்

பாறாங்கல் மீதில் விழும் மழைநீர்ப் போலப்
பளிச்சென்ற துன்பமெல்லாம் சிதறிப்போகும்"

குறிப்பு

உரைநடை என்னும் இலக்கியவகையில் தருக்கமாக கூறுவதற்கேற்ற வடிவம் கவிதை, உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளின் சிக்கனமாக விளங்குவது அடக்கம். காதல் உள்ளத்தில் தோன்றிவிட்டது என்பதன் அடையாளமாக, வரவேற்பின் சிக்கனமாக விளங்குவது பெண்ணின் நாணம். மாளிகையின் சிக்கனமாக விளங்குவது குடிசை. மக்களின் உரிமைகளுக்கு வழிமுறைகளை வகுத்துக் கொடுக்கும் சிக்கனமாக விளங்குவது சட்டதிட்டங்கள். உணவுகளை மற்றவர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் பங்கீடே அதற்கு சிக்கனமாகும். அரசியலின் சிக்கனத்தைக் காட்சிப்படுத்துவது இரு கட்சிகள் மட்டுமே இருப்பது. வாழ்க்கை அனுபவத்தின் சிக்கனத்தை நீதிநூல்கள் வழி அறியலாம். பகட்டான வாழ்க்கை நீராவி போன்று மறைந்துவிடும். பெரியவர்கள் தங்கள் வாழ்க்கையில் செம்மையாக, சிக்கனமாக ஒவ்வோர் நாளும் வாழ்ந்து வருவது போல நாமும் வாழ்ந்தால், பாறாங்கல் மீது விழும் மழைநீர்ப் போலப் பளிச்சென்று துன்பமெல்லாம் சிதறிப்போகும்.

## 5.5 தொகுப்புரை

கவிஞர் சுரதா இயற்றிய 'சிக்கனம்' என்னும் மரபுக்கவிதை 'சிக்கனத்தின்' தேவையை, உயர்வை எடுத்துரைப்பது. சிக்கனமான வாழ்க்கையே நம்மை மேம்படுத்தும். அவ்வகையில் எவையெல்லாம் எதன் சிக்கனமாக விளங்குகின்றது என்பதை சுரதாவின் சிக்கனம் கவிதை விவரித்துள்ளது. உரைநடை – கவிதை, உணர்ச்சி – அடக்கம், காதல்வரவேற்பு – பெண்ணின் நாணம், மாளிகை – குடிசை, உரிமை – சட்டத்திட்டங்கள், உணவு – பங்கீடு, அரசியல் - இருகட்சி, வாழ்க்கைஅனுபவம் - நீதிநூல்கள் என சிக்கனத்தை இரு சொற்களின் முரணில் கவிதை நயமாக்கியுள்ளார் கவிஞர் சுரதா.

## 5.6 மாதிரி வினாக்கள்

1. சுரதாவின் இயற்பெயர் என்ன?

சுரதாவின் இயற்பெயர் இராசகோபாலன்

2. 'பாரதிதாசன்' மீது கொண்ட பற்றால் யார் தன் பெயரை மாற்றிக் கொண்டார்?

   சுரதா

3. உரைநடையின் சிக்கனம் எது?

   குவிதை

4. 'உவமைக்கவிஞர்' என்று சிறப்பிக்கப்படுவர் யார்?

   சுரதா

5. அனுபவத்தின் சிக்கனம் எது?

   நீதிநூல்கள்

## 5.7 பயிற்சி வினாக்கள் (5 மதிப்பெண்கள்)

1. கவிஞர் சுரதாவின் சிறப்புகளை விளக்குக. (5 மதிப்பெண்கள்)
2. 'சிக்கனம்'– கவிதையின் பொருிளை விளக்குக. (5 மதிப்பெண்கள்)
3. கவிஞர் சுரதாவின் பாடற்சிறப்பினையும், வாழ்க்கைச் சிறப்பினையும் விவரிக்க. (10 மதிப்பெண்கள்)

## 5.8 மேலும் படித்தறிக.

உவமைக்கவிஞர் சுரதா கவிதைகள்

வானதி பதிப்பகம்

23, தீனதாயாளு தெரு

சென்னை

# கூறு 6

# கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை – உமர்கய்யாம் பாடல்கள்

குறிப்பு



## 6.1 அறிமுகம்

மரபுக் கவிதை உலகில் குறிப்பிடத்தக்க ஒருவராக கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை விளங்குகிறார்.

“உள்ளத்துள் உள்ளது கவிதை
இன்ப உணர்வெடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழிலே
தெரிந்து உரைப்பது கவிதை”

எனப் பாடியவர். பக்திப்பாடல்கள், இலக்கியம் பற்றிய பாடல்கள், வரலாற்று நோக்குடைய கவிதைகள், குழந்தைப் பாடல்கள், இயற்கைப் பாட்டுகள், வாழ்வியல் போராட்ட வாழ்த்துப்பாக்கள், கையறுநிலைக் கவிதைகள், பல்சுவைப்பாக்கள், எனப் பல கோணத்தில் எழுதியுள்ளார். அவர் மொழிபெயர்த்த உமார்கய்யாம் பாடல்கள் ‘தமிழில் ஒரு முக்கிய நூலாக விளங்குவது. உமார்கய்யாம் ஒரு பாரசீக தேசத்தில் தோன்றிய கவிஞர். சோதிடத்திலும், கணிதத்திலும் சிறந்த மேதாவி. ‘முகம்மதியப் பஞ்சாங்கம்’ உமார்கய்யாமின் ஆழ்ந்த சோதிட அறிவினை உலகிற்கு எடுத்துரைக்கும் புத்தகம். இவர் இயற்பெயர் ‘கியாது டீன் அபுல்பாத்’ என்பது. கி.பி. 11ம்நூற்றாண்டில் ‘நிஷபூர்’ என்னும் நகரத்தில் பிறந்தவர். இவர் தம் பெயரோட‘கய்யாம்’

என்னும் பெயரினை இணைத்துக்கொண்டார். அதன் பொருள் 'கூடாரம் செய்பவன்' என்பது. இவர் பள்ளியில் படிக்கும் பொழுது இரு தோழர்களைக் கொண்டிருந்தார். மூவரில் எவரேனும் ஒருவர் உயர்பதவி பெற்று செல்வம் மிக்கவர்களானால் மற்ற இருவருக்கும் உதவியும், பதவியும் பெற்றுத்தர வேண்டும் என்று ஒப்பந்தம் செய்துகொண்டனர். அந்த ஒப்பந்தத்தின்படி ஒருவர் மாகாணத்தை ஆளும் பதவியைப் பெற்றார். அரண்மனை ஸர்வாதிகாரப் பதவியைத் தம் தோழர்களில் ஒருவருக்கும், உமார்கய்யாமிற்கு அவர் கணித அறிவின் முக்கியத்துவம் தெரிந்து, அதில் ஆய்வு மேற்கொள்ள ஆண்டுதோறும் ஒரு பெருந்தொகையைக் கொடுத்து கவலையின்றி வாழச் செய்தார். இதனால் உமார்கய்யாமிற்கு எவ்விதப் பணக்கவலையின்றி கணித ஆய்வில் ஆய்வு மேற்கொண்டார். எனினும் மக்களிடையே அவர் செல்வாக்கு பெற்றதற்கு அவர் இயற்றிய 'உமார்கய்யாம் பாடல்கள்' என்னும் நூலே காரணமாக இருந்தது. இப்பாடல்களில் வாழ்வு முடிந்தபின் மறுமையைக் குறித்து உறுதியாகக் கூறமுடியாது என்பது உள்ளீடாக, தத்துவமாக உள்ளது. ஒரு சோக உணர்ச்சியும் அடிநாதமாக ஊடுருவிப் பாய்கின்றது. தத்துவம் சார்ந்த பாடல்களைக் கவிஞர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை மொழிபெயர்ப்பு செய்துள்ளார். ஆங்கில உலகில் ப்விட்ஜிரால்ட் என்ன மதிப்பை பெற்றுள்ளாரோ அத்தகைய மதிப்பினை கவிமணி அவர்கள் பெற்றுள்ளதாக எஸ். வையாபுரிப்பிள்ளை 'உமார்கய்யாம் பாடல்கள்' முன்னுரையில் குறிப்பிட்டு உள்ளார்.

## 6.2 நோக்கம்:

1. கவிஞர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் அறிமுகம், சிறப்புகள், கவிநயம் அறிதல்.

2. உமார்கய்யாம் பற்றி தெரிதல்.

3. 'உமார்கய்யாம் பாடல்கள்' நூலின் சிறப்பினை, கவிதைநயத்தினை உணர்தல்.

4. கவிதையின் நுட்பங்கள் தெளிதல்.

5. வாழ்க்கையின் உண்மைப்பொருளை, தத்துவச் சிந்தனைகளை அறிதல்.

குறிப்பு

## 6.3 கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை:

குமரி மாவட்டம் தேரூரில் பிறந்து வாழ்ந்த கவிஞர். குழந்தைக் கவிஞர் எனச் சிறப்பிக்கும் அளவிற்கு குழந்தைப் பாடல்களைக் கொஞ்சு தமிழில் விஞ்சும் அழகில் எழுதியவர். நாகர்கோவில் கோட்டார் ஆரம்பப்பள்ளி, நாகர்கோவில் ஆசிரியர் பயிற்சிப்பள்ளி மற்றும் திருவனந்தபுரம் பெண்கள் கல்லூரி போன்றவற்றில் ஆசிரியராக 36 ஆண்டுகள் பணியாற்றினார். கவிமணி எழுதிய “மலரும் மாலையும்” முக்கிய குழந்தை இலக்கியங்களுக்கான நூலாக விளங்குவது.

“மனோன்மணியம் மறுபிறப்பு” என்னும் திறனாய்வுக் கட்டுரையை எழுதியுள்ளார். சென்னை பல்கலைக்கழகத்தின் தமிழ்ப் பேரகராதி உருவாக்கத்தில் மதிப்பியல் உதவியாளராக இருந்துள்ளார். கம்பராமாயணம், திவாகரம், நவநீதப்பாட்டியல் முதலிய பல நூல்களின் ஏட்டுப் பிரதிகளைத் தொகுக்கும் பணியில் செயல்பட்டிருந்தார். காந்தளூர்ச்சாலை, மருமக்கள் வழி மான்மியம், ஆசியசோதி, உமார்கய்யாம் பாடல்கள், கதர் பிறந்த கதை, கவிமணியின் உரைமணிகள், அழகம்மை ஆசிரிய விருத்தம், தேவியின் கீர்த்தனைகள், குழந்தைச்செல்வம் போன்ற நூல்கள் கவிமணியின் நவமணிகளாக திகழும் நூல்கள் ‘தேசிக விநாயகம் பிள்ளை’ அவர்களுக்கு 24 டிசம்பர் 1940 இல் சென்னை பச்சையப்பன் கல்லூயில் தமிழவேள் உமாமகேசுவரம் பிள்ளை ‘கவிமணி’ என்னும் பட்டத்தினை வழங்கினார். அக்டோபர் 2005இல் இந்திய அரசு அஞ்சல் தலை வெளியிட்டுச் சிறப்பித்துள்ளது.

## 6.4 எழுவாய், எழுவாய், எழுவாயே (பாடல் 1-10வரை)

உமார்கய்யாம் தம் பாடல்களில் கவிதைநயம் மிக்க சொற்றொடர்களைப் பயன்படுத்தி உள்ளார். அதனைக் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அழகாக மொழிபெயர்ப்பு செய்துள்ளார். கதிரவனைக் கல்லாக, காலைப்பொழுதினைச் சிறுவனாக, இரவினைப்

குறிப்பு

பானையாக உருவகித்துப் பாடியுள்ள அழகு கவிஞனின் கவியுள்ளத்தினைக் காட்டுவது. இரவுப் பொழுது என்னும் பானையிலே, காலைப்பொழுது என்னும் சிறுவன் கதிரவன் என்னும் கல்லினை இட்டவுடன் நீலநிறமான வானிலே உள்ள நட்சத்திரங்கள் எல்லாம் நில்லாது ஓடி ஒளிந்து கொண்டன. வானத்தின் கீழே திசையாகிய வேடன் தாங்கும் கதிரவனின் சுடர்க்கண்ணிகளால் சிறப்பு மிக்க கோமான்(கதிரவன்) திருக்கோயிலில் சிகரத்தை அடைந்தான். காணீரோ!

அருணனாகிய சூரியன் உதிக்கும் பொழுதிலே யாரோ அந்தச்சாலையிலே செல்பவரே! மயக்கம் மிக்க வாழ்வின் கிண்ணம் வற்றி வறண்டு போவதற்கு முன் பருகுவதற்கு மதுவைத் தாரீரோ! பாய் விட்டெழுந்து வாரீரோ? அருமை மங்கைமாரோ! என்று அழைத்தல் காதில் விழவில்லையோ, அறிவீரே. காகம் கரைவது கேளீரோ? கதவைச் சற்றே திறவுங்கள், இரண்டு கணப்பொழுதுக்கு மேல் நாங்கள் இங்கே தங்கமாட்டோம். தேகம் அறுத்துச் செல்வோமே! சென்றால் மீண்டு வாராமோ! வாகாய் அமைந்த சாலையிலே அதன் வாயிலினைக் காக்கும் காவலரே!

கதிரவன் புலர்ந்து விடியும் பொழுதினிலே பொய்கைக்கரை சோலையிலே மலர்கள் மலர்ந்து நல்மணம் வீசி மகிழும். அத்தகைய மலர்கள்ஆயிரமாம். மலர்வதைப் போலவே உலர்ந்து வாடிச் சேற்றினிலே உதிரும் மலர்களும் ஆயிரமாம். மலர்தலும், உலர்தலும் வாழ்வின் நியதி. இவை இரண்டும் கலந்ததே உலக வாழ்க்கை என்பதை கண்ணால் கண்டு தெளிவடையாயோ!

மலர்ந்து நல்ல மணம் வீசி வையகம் புகழ வாழாது அரும்பிலே உலர்ந்து வீழும் அரும்புகளை உலகிலே யாரோ எண்ணிடுவார்! அழகும் இளமையும் கண்ணுக்கினிய உடலழகும் குலைந்து அழிந்து போகும் என்று அறிஞர் கூறும் கூற்றில் ஐயம் எதுவுமுண்டோ?

பல நூல்களைக் கற்ற பண்டிதர்கள் பலரும் சபையில் ஒன்று கூடிக் கலகம், தருக்கவாதம் பல செய்திடுக. கழுத்திலே உள்ள கண்டம் கிழிய முழக்கம் செய்க.

குறிப்பு

“மலரும்மலர்கள் வாடலும் இவ்

வாழ்வு நிலையா தோடலுமே

உலகம் கண்ட உண்மைகளாம்

உண்டோ மற்றொன்று உரைத்திடவே”

சிரித்த ரோஜா மலரைப் பார். அம்மலர் கூறும் இனிய அழகிய மொழியினைக் கேள். கதிர்ச்செல்வன் இந்த உலகில் அழகிய நந்தவனத்திலே பட்டுப்பையினைக் கீறி தன்னிடமிருக்கும் பசுமையான பொன்நிதியைப் படி மீது விரித்து வீசி எங்கெங்கும் விதைத்துச் செல்வேன் என்றிடுமே.

நினைவுகள் நீண்டு தழைத்து வருவதோடு அந்த நினைவுகள் வெந்து சாம்பலாகி விடும். அனைத்தும் பாலைவனத்தினிலே அமையும் பனி போல அரைநொடியிலே, அனைத்தும் மனத்திலே தோன்றி நிலைத்து நில்லாது மாண்டு மறைந்த விடுதலே உண்மையானதாக எந்த நூலின் வலிமையாலும் இதனை மறக்க இயலாதே.

வாராய் நண்பா! வருத்தம் என்னும் வாடைக்காலப் போர்வையினை, நேராக வரும் வசந்தம் என்னும் நெருப்பில் வீசி எறிவாயோ! தேர்ந்து அறிய முடியாத வாழ்க்கை என்னும் பறவை. செல்லும் தூரம் சிறிதே ஆகும். பாராய்! பாராய்! பறவை அதோ பறப்பதற்குத் தன்னுடைய சிறகினையும் விரித்ததடா!

“ஒழிந்த பாழில் ஒரு கணமாம்:

உயிர்வாழ் உலகில் ஒரு கணமாம்:

வழிந்து விண்ணில் மீன்களெல்லாம்

மங்கி மங்கி மறைந்தனவே

அழிந்த பாழின் உதயம் கண்டு

அறியச் செல்வோர் அனைவருமே

எழுந்து நின்றார் கண்டிலையோ?

எழுவாய்! எழுவாய்! எழுவாயே”

அழிந்த உலகிலே ஒரு கணமும், உயிர்கள் வாழ்கின்ற உலகிலே, ஒரு கணமும் வானிலிருக்கும் நட்சத்திரங்கள் எல்லாம் ஒளி மங்கி மங்கி மறைந்தனவே. அழிந்த பாழின் (கதிரவன்) உதயத்தினைக் கண்டு அறியச் செல்வோர் அனைவருமே எழுந்து நின்றார் கண்டிலையோ? எழுவாய்! எழுவாய்! எழுவாய் என்று கதிரவனின் எழுச்சியினைக் கவிமணி உமார்கய்யாம் வழி நின்று வருணித்து உள்ளார்.

## 6.5 உள்ளத்து உண்மை (பாடல் 11-20 வரை)

வாரிவாரிக் கொடுத்தவரும், எவருக்கும் எதுவும் கொடுக்காது வைத்திருந்தவரும் இந்த உலகிலே மண்ணோடு மண்ணாய்ப் போனதாலே பசும்பொன்னாய் ஆனது நாம் அறியோமே! ஊரிலே அவருடைய உடலினை எடுத்து, உரையும் நிரையும் காணாரே! ஆய்ந்து அறியும் உள்ளத்து உண்மை இதனை ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்ளாயோ!

உலகம் (வையகம்) பழைய அரண்மனையாகும். இரவும் பகலும் அதன் வாயில்கள் இந்த அரண்மனையில் குறிப்பிட்ட காலம் கொலு வீற்றிருந்து அரசாட்சி புரிந்து வேறு எவராலும் செய்யமுடியாத அழகிய மணிகள் பதிக்கப் பெற்ற பெரிய மகுடத்தைச் சூடி பிறகு வீழ்ந்த மன்னர்கள் இந்த உலகத்திலே எண்ணிக்கை அற்றவராம். இதனை உள்ளத்திலே ஆழ்ந்து கண்டு அறிவாமே! (இவ்வுலகில் வாழ்ந்து மறைந்தோர் பலர் என்னும் உண்மையை இப்பாடல் எடுத்துரைக்கின்றது.)

“யானும் நீயும் இறந்தபினும்
இராஜராஜன் பட்டபினும்
ஊமை இன்றி இவ்வுலகம்
ஊழி ஊழி நின்றிடுமால்”

கூனல் மிக்க கிழவி ஒரு சிறு கல்லினை எடுத்து குனிந்து வீசி எறிந்திடில் அதை பெரிய கடலும் மந்தரமாமலை என்று எண்ணியே மறைந்திடுமோ?

வெற்றியையும் பெறும் மன்னர் முடிசூடி அரசவையில் வீற்றிருந்த அரண்மனையில் கூகைகளும், ஆந்தைகளும், முதுமையான பேய்களும்

வாழும் காடாக விளங்குமே. வெற்றியைத் தரும் வில்லினை ஏந்தி முன்பு வேட்டை செய்த வேடன் கையினை நரிகள் பற்றி இழுப்பதையும் இந்த உலகில் கண்ணால் பார்ப்போமே!

குறிப்பு

மன்னர் வீழ்ந்துபட்ட போர்க்களத்தில் மலர்ந்த ரோஜா மலரினைப் போல் அழகிய ரோஜா மலர்கள் வேறு காட்டிலெங்கும் வளர்வது உண்டோ? புன்னைமரத்தின் கிளைகள் எழுந்து ஓங்கிப் பூத்துச் சொரிகின்ற புனித நிலத்திலே கன்னியொருத்தியின் முத்துகளால் ஆகிய மாலையும் கழன்று வீழ்ந்த இடமாக விளங்கும் இடமன்றோ?

நம் முன்னோர் வாழ்ந்த சென்ற முன்னோர்களின் இடத்திலெல்லாம் நாம் இன்று விருந்தினைச் செய்து வாழ்கின்றோம். நகைச்சுவை சொல்லி மகிழுகின்றோம். நாம் வாழ்ந்திருந்த இடம் விட்டு நாமும், இனி இவ்விடம் விட்டுச் சென்றால் இந்த இடத்திலே விருந்து செய்பவர் யார் யாரோ? விகடம் சொல்வார் யார் யாரோ? எவரோ அறிவார்?

யாவரும் போற்றுகின்ற இலங்கையிலிருந்த அசோகவனம் எவ்விடம் சென்று மறைந்ததோ? சீற்றமுடைய அரக்கர் தலைவனாகிய இராவணனும் அவன் கையில் வைத்திருந்த சிவந்த கையினுள் இருந்த வாளும் எங்கேயோ? கொடியாய் வளரும் திராட்சைக் கொடி இனிய மதுவைத் தந்திடுமே.

ஆற்றங்கரைப் பூஞ்சோலையிலிருந்து எழும் நறுமணம் இரவும், பகலும் நறுமணத்தை வீசிடுமே!
நீர் பாய்ந்தோடும் வாய்க்கால் அருகில் எழும் பழமையான கோரைப்புற்களின் அழகினைப் பார். சாயும் வேளை மெதுவாக சாய் நீ! அப்பா! சொல்கின்றேன். ஆயின் இதுவும் நம் முன்னோர் அழகின் செல்வியானவள் ஒவ்வொரு தினமும் அன்பாக நெய்யினைப் பூசி, அதனால் நீட்டி வளர்த்த பூங்குழலே.

“மண்ணில் மறையும் முடிமன்னர்”

வாழ்வும் அரிய வாழ்வாமோ?

கண்ணிற் காணாச் சொர்க்கமுமோர்

கனவே யன்றி நனவாமோ?

குறிப்பு

உன்னை அடையும் உன்கைப் பொருளை, அதனை நம்பி நீ இருப்பாயாக! உன்னை அடையாதது எதனையும் எண்ணி எண்ணி எந்நாளும் ஏங்கி அலைவது ஏன்? ஐயோ!

இன்றோ, நாளையோ என்று எண்ணாது இரவும், பகலும் கடுமையாக உழைத்திடுவீர். அன்றி நாளைக்கு உதவுமா என்று அலுப்பில்லாது முயன்றிடுவீர். ஒன்று சொல்வேன் உண்மைமொழியினை உறுதியாகக் கொள்வீரே! என்றும் மூடர் நன்மை உமக்கு இங்கும் இல்லை: அங்கும் இல்லை:

## 6.6 அறிவின் விதைகள் (பாடல் 21-30வரை)

அன்றைக்கு இளமைப் பருவத்தில் அறிவில் சிறந்த புலவரையும் நன்கு சிறப்புப் பொருந்திய பெரு ஞானிகளையும் திருவடி பணிந்து நின்று கேட்ட கருத்துகள் (வாதங்கள்) எண்ணுவதற்கு அரியன ஆயினும் சென்ற வாயில் வழியே தான் நான் அந்தோ திரும்பி வந்தேனே!

“ அரிய பெரிய ஞானிகளோடு
அறிவின் விதைகள் விதைத்து வந்தேன்.
பெருகி ஞானம் வளர்ந்தோங்கப்
பேணிப் பணிகள் பல செய்தேன்

உரிய பொழுதிலே கண்ட பலன் எதுவென்றால் உண்மையைக் கூறினால் இதுவேயாம். வருகின்ற தண்ணீரைப் போல் வந்தேன். மாயக் காற்றைப் போல் மறைந்தேன்.

இந்த உலகில் ஏனோ வந்தேன். முன் இருந்த இடமும் எவ்விடமோ? காட்டாறு ஓடும் கதியினைப் போல் கண்ட கண்டபடி போனேன். வானோக்கிய பாழ்பட்ட நிலத்தின் மீது வழங்கும் வாடைக்காற்று என நானும் ஒரு பொழுது வெளியேறி எங்குச் செல்வேனோ? அறியேனே!

மலையில் ஏறி நிற்கின்றோம், அலைகள் மறித்து விழும் கடலில் வீழ்கின்றோம். சுழன்று வீசும் புயலில் அகப்பட்டுச் சுழன்று சுழன்று செல்கின்றோம். நுங்கும் நுரையுமாய் விளங்கும் அலையினால் அடைந்த பயன் வேறொன்றுமில்லை. உலகின் உண்மை இதுவன்றி உரைக்க வேறொன்று உண்டோ? சொல்.

குறிப்பு

மண்ணை வலப்புறமாகச் சுற்றிவந்தேன். வானும் அளந்து கணக்கிட்டேன். நான் அடையும் வழியில் பல சிக்கல் நாடி நன்கு விளக்கி வந்தேன். எண்ணும் மனிதர் தம்மை அடையும் இறப்பும் விதியும் இவையென்று உறுதியாகச் சொல்லாதும் தெரியாதிங்கே திகைத்தேனே.

திட்டிக் கதவு தெரிந்ததடா, அதனைத் திறப்பதற்கு திறவுகோலாகிய சாவியும் இல்லையடா! கண்ணிலே திரையும் கண்டதடா! கண்ணும் மயங்கி நின்றதடா! அருகில் நின்று நீ நானென்று உரைத்த உரையும் கேட்டதடா! நட்ட காலம் பின்னையடா! நான் நீ என்பதும் அற்றுப்போச்சுதடா!

இந்த உலகின் மீது கவிழ்ந்த ஒரு பானை அது இந்த வானகமே. இதனைச் சார்ந்து இதன் கீழ் வாழும் எந்த உயிரும் தங்கியிருந்து வாழ்ந்து மறைந்திடுமாம். எவரும் இதனை நோக்கி வரம் இரந்து வேண்டி யாசித்து நிற்பாரோ? ஆராய்ந்து பார்த்தால் இந்த உலகும் நம்மைப் போலவே திகைத்து எந்த நாளும் சுற்றிச் சுழன்றிடுமே.

இருளில் வாழும் மக்கள் அனைவரும் தாம் செல்லும் வழியில் இடறி வீழ்ந்து விடாது, அருள் தந்து அழைத்துச் செல்லும் விதிக்கு அளித்த 'தீபம்' எது என்று வினவினேன். சுழலுகின்ற வானம் என்னைப் பார்த்து 'உணர்ந்தும் உணரா உணர்வு என்னும் மயக்கத்திலே (மருள்) ஞானம் உள்ளது' எனக் கூறி மாற்றம் தந்து சென்றதம்மா!

குயவன் மண்ணை கொண்டு ஒரு நாள் மயங்கிப் பிசையும் வேளையிலே, திண்ணை அருகே சென்றேன். அவர் செய்யும் தொழிலும் கண்டிருந்தேன். 'அண்ணா மெல்ல மெல்ல' என அமைந்த அழுகைக் குரலைக் கேட்டேன். கண்ணின் காணமுடியாத நாவினாலே களிமண் கரைவது என்பதை உணர்ந்தேன்.

ஊன் மிக்க இந்த உடம்பானது வீழ்ந்து விட்டது என்றால் வாழ்க்கையின் நிலை எவ்விதம் என்று அறிய ஆசை மிகவே, என் ஆன்மாவினை நான் வேண்டி நின்றேன். பலவிதமான உலகினையும் நெடுநாளாய் நாடி தேடி அலைந்து 'யானே சொர்க்கம் நரகமெல்லாம்' என்றே கூறி நின்றதுவே.

## 6.7 திகைத்து மறுகிநின்றேனே (பாடல் 31,32)

குறிப்பு

இந்த உலகினை எதுவென்று தெரியாது திகைத்து மறுகி நின்றேனே! வழியிலே குண்டுகுழி வெட்டி. அதிலே விழுவதற்கு விதியும் ஒரு நாளினை விதைத்து வைத்து இருந்தது. என் தீமையெல்லாம் அழியாப் பாவமாய் விளைந்த விளைவு என்று அறைவாயோ? அதனாலே இந்த உலகினை எதுவென்று தெரியாது திகைத்து மறுகி நின்றேனே!

இந்த மண்ணால் மனிதனையும் உருவாக்கி ஈசனாகிய (ஈடன்) இறைவன் மனிதனை ஆளும்படி செய்து சூதாய் சுற்றிவருகின்ற அரவினையும் (பாம்பினையும்) பதுங்க வைத்தவனே! 'முற்றும் பாவி' என அவனுடைய முகத்தில் கரியைப் பூசி, பூசிய அக்கரியாகிய குற்றம் நீங்க மன்னிப்பு தந்த நீயும் அம்மன்னிப்பினைப் பெறுவாயாக!

## 6.8 குயவனும் மண்ணும் (பாடல் 33-39)

மண்ணிலே உடைந்து மண்ணாக மாறி மண்ணில் மறைந்திடுமே. மண்ணிலிருந்து மண்ணெடுத்து இந்த உடலை வனைந்து வைத்தான். இதனைப் பற்றி அறியாதார், எதனையும் இவ்வுலகில் அறியாதார். தம்மை நாடி வரும் வினை கண்டு அஞ்சி நிதம் நடுங்கி நடுங்கி நலிவாரே!

மண்ணால் செய்த கலமானது (பானை) உடைந்து போனால் மண்ணோடு மண்ணாய்ப் போகும் என்பதை எண்ணியே முன்பு அக்குயவனாகிய இறைவன் என்னையும் மண்ணிலே உருவாக்கினான். இந்த உண்மையை உள்ளத்தில் ஊன்றி உணராத மாந்தர்களெல்லாம் (மக்களெல்லாம்) வெட்டித்தனமாய்ப் பேசித் திரிவாரே! வீணாக வாதம் செய்வாரே!

"படைத்த மண்ணும் நல் மண்ணோ?<br>
        பழுது நிறைந்த பொய் மண்ணோ?<br>
படைத்த மண்நல் மண்ணானால்<br>
        பானை உடைந்து போவதுமேன்?<br>
படைத்த மண்ணில் பழுதுளதேல்<br>
        பழி தான் எவரைச் சார்ந்ததுவாம்?

படைத்த படைப்பின் உண்மையெலாம்
பாரில் யாரோ பகர்ந்திடுவார்?"



இந்த உலகில் தோன்றிய மனிதர்கள் அனைவரும் வளைவும் நெளிவும் கண்டு என்னை சந்தம் (தாளம்) என்பது இல்லாத பானையெனத் தள்ளி வைத்துச் சென்றனர். அந்த நாள் அக்குயவன் (இறைவன்) கை ஆட்டத்தாலே நேர்ந்த பிழைக்கு, இந்த நாளில் ஏழையாகிய என்னை ஏனோ குறைகள் கூறுவாரோ?

நிலையான 'ரம்ஜான்'பண்டிகையின் முடிவினிலே மாலைப் பொழுதிலே வானத்தின் மீது சிறிய மதி வந்து தோன்றுவதற்கு முன்பே சேரிக் குயவனாகிய இறைவன் தன் கடையிலே அழகான பானை சட்டியெல்லாம் வைத்த அறையின் நடுவே நான் தன்னந் தனியே போய் நின்ற வரலாறு இதனைக் கேளாயோ?

கண்ணிற் கண்ட அற்புதமாம், காதிற் கேட்ட மொழியேயாம், மண்ணினால் செய்த பாத்திரமொன்று (கலம்) மாயமாக வாய் திறந்து வண்ணகலம் இங்கு எவரே எனக் கேட்டது. பானையை உருவாக்கிய குயவன் எவரே என்றது? இதனை ஆராய்ந்து பார்த்து விடை தருகின்றவர் எவரே உள்ளார்? என்றது அம்மா!

மதுவினை உண்ட வெறியிலே முன்பொருநாள், நான் உண்ட கலத்தினை (பாத்திரத்தை) உடைத்தெறிந்தேன். துண்டு துண்டாக உடைந்து போன கலம் (பாத்திரம்) துணிந்து மெல்ல என்னை நோக்கியது. நானும் உன்னைப் போல் முன்பு இந்த உலகில் வாழ்ந்திருந்தேன். நீயும் எனக்கு உண்டாகிய வாழ்வினை இனி அடைவாய். இது உண்மை எனக் கூறியது.

## 6.9 தேறுமொழி யாரே கூறவல்லார் (பாடல் - 40-46 வரை)

நன்மை செய்யும் பன்னீர்ப்பூக்கள் நிறைந்த ஒரு நந்தவனத்தை நான் அடைந்தேன். உலர்ந்து வெந்து கருகிய ரோஜா நின்ற நிலையைக் கண்டு உனக்கேற்பட்ட நோயும் யாது? என்றேன். காதில்

மெல்ல, நான் முன்பு மலர்ந்த முகமாய் விளையாடி வாழ்ந்த இடம் இது என்றதம்மா!

குறிப்பு

"வசந்த ருதுவும் வந்திடுமோ?
வாசமலர்கள் பூத்திடுமோ?
கசிந்து பாடும் குயில் இன்னும்
காது குளிரச் செய்திடுமோ?
இசைந்த இளமைப் பருவத்தின்
இனிமை இனியும் எய்துவனோ?
அசைந்த உள்ளம் தேறுமொழி
ஆரே கூற வல்லாரே?"

இருளின் வாயிற்படியினைத் தாண்டி எமக்கு முன்னே சென்றவர்கள் கோடியினும் கோடி எனக் கணக்கிட முடியாதவர் ஆயிடினும், ஒருவரேனும் வழி இதுவென்று உண்மை கூற வந்தனரோ?

அரிய வழியை நாமும் இனி அளந்து காண வேண்டுமடா?

மனமே! நீயும் எத்தனை நாள் நெருப்பினில் மூழ்கி நின்றிடுவாய்? வஞ்சகமான உலகில் மற்ற அனைத்தையும் மறந்து நீக்கி, அதிலிருந்து விடுபட்டு தஞ்மாக நட்பொன்றும் தழைக்கும் ரோஜா வன மொன்றும், மிகுதியாக மதுவினை உண்ணும் கலமொன்றும் விரும்பி வேண்டிப் பெறுவாயே! அன்பே! நானும் நீயும் இணைந்த அருகே எவரும் அறியாத வகையில் வன்மையின் உருவாகிய விதியினை வளைத்து வெல்வோமாக. துன்பமே தொடரும் இந்த உலகினைத் துண்டு துண்டாய் உடைத்த பிறகு இன்பமே பெருகி வளர்ந்திடுமோர் இடமாய்ச் செய்ய இயலாதோ?

மண்ணிற்கு ஈடான பொன் கேட்டால் மனிதர்கள் அத்துன்பத்தில் என் செய்வார்? கண்ணில் செய்த ஒப்பந்தம் கண்ணில் கண்டது ஒன்றுமில்லை. உறுதியாக இந்த வழக்குத் தீரா வழக்கே ஆகும் அப்பா! எண்ணி உறுதியாக முடிவு செய்திடுவார் இந்த உலகில் எவர் உள்ளார்? எங்கு உள்ளார்?

எல்லாம் வலியாக அதுவே உன் வலிதான். எங்கும் வெளியாகும் வேளையிலே நல்வழியினை அறியாத கடவுள்பக்தி

குறிப்பு

அற்றவரும் (நாத்திகரும்) உன்னையே நம்பி நாடி வந்திடுவர். வில்லினைப் போல ஒளி வீசும் கதிரவன் விண்ணிலிருந்து ஒளியினைப் பெற்றுப் பொழிகையிலே, பொல்லாத வெளவாலும் இருள் நோக்கிப் போக வழி தான் கண்டிடுமோ?

## 6.10 பயனில் மொழிகள்: (பாடல்: 47 – 56)

யாவரும் சிறியவர்கள், நான் பெரியவன், எதிலுமே சிறந்தது என்னுடைய நலமே, இந்த உலகத்தில் எவரும் எனக்கும் ஈடு இல்லை எனப் பயனற்ற மொழிகளைக் கூறுவது ஏன்? இந்த உலகத்தில் சேரும் பொருளையெல்லாம் தெளிவாக நோக்கித் தன் நலமே நோக்காத சிறப்புடன் அமைந்த கண்ணின் மணியின் செயலினை நோக்கித் தெளிவு அடைவீரே

இரவும் பகலும் பற்பல நூல்களை ஆராய்ந்து கற்றேன். அவை யாவும் பிறரை வெல்லும் வெற்றி ஈகையினாலே விளைந்த புகழினை இந்த உலகத்தில் கொண்டு சென்றதே தவிர தொல்லைக்கு உட்படுத்தப்படும் ஆன்மாவின் நிலை இதுவென கூறுவதற்கான சொற்கள் எதுவுமில்லை. கல்லும், முள்ளும் கடந்து உழன்று பலத் துன்பங்களைப் பெற்றும் கனியினைக் கண்ணால் கண்டிலனே.

“ஐயோ அறியா மானிடரே!
    ஆசைப் பேயின் அடிமைகளே!
எய்யா தென்றும் வான்நோக்கி
    இரங்கி அழுது நிற்பதும் ஏன்?
மெய்யாய் அன்று படைத்த அவன்
    மெலியாது உம்மைக் காவானே?
கையால் மரத்தை நட்டவர்கள்
    கருத்தாய் நீரும் வார்க்காரோ”

இறைவனே! உள்ளம் இரங்கிடுவாய். நான் ஏழை, ஏழை என்று தினமும் கூசாது ஏனோ கூப்பிடுவாய்! குறைகள் கூறி நின்றிடுவாய்? பேசாது அவரைப் பேணானோ? பெற்ற மகவைக் காப்பாற்றானோ? ஆசான் நீயோ? இறைவன் எதுவும் அறியாத சிறிய பாலகனோ?

குறிப்பு

நாடும் வெற்றி தோல்விகள் எந்நாளும் 'பற்று' என்ற ஒன்று விரும்பிடுமா? ஆடுகின்றவரின் அடிக்கேற்ப அங்குமிங்கும் அலைந்து திரிந்திடுமாம். நிலவுகின்ற இந்த உலகின் மீது உன்னைத் தூக்கி இட்ட இறைவன் ஈடு செய்வான். இரக்கம் கொள்வான். அனைத்தையும் அறிந்தவன், நன்கு அறிந்தவன்.

எல்லாமே இந்த உலகிலே ஓர் சூதாட்டம். இரவும் பகலும் மாறிமாறி வருவதே மாறாட்டம். வல்லவனாகிய இறைவன் விதியையே ஆட்டுவிக்கின்றவன். அவன் வலிமைக்குக் கீழே மனிதர் அனைவரும் கருவிகளாம். சொல்லாது எங்கும் இழுத்திடுவான். இருவரை ஜோடி சேர்ப்பான்: வெட்டிடுவான்: அதனைப் பயனற்றதாக மாற்றி ஒவ்வொன்றாய்த் திரும்ப அறையினிலே இட்டிடுவான்.

" எழுதி செல்லும் விதியின் கை
எழுதி எழுதி மேற்செல்லும்
தொழுது கெஞ்சி நின்றாலும்
சூழ்ச்சி பலவும் செய்தாலும்
வழுவிப் பின்னால் நீங்கியொரு
வார்த்தையேனும் மாற்றிடுமோ?
அழுத கண்ணீராறெல்லாம்
அதிலோர் எழுத்தை அழித்திடுமோ?
உயிரின் ஒளியின் மணமுமெலாம்"

இறைவனுடைய பேரருளில் உதிப்பனவாம். இந்த உலகத்தின் மீதான மயக்க மாசு நீங்கிடவே வறுமை ஆளும்படியாக வைத்தனை நீ. மதில்களையும் அரணையும் காப்பதில் உன் ஈடு சொல்ல முடியாத அடிக்கு இணையாகுமோ? அருகிலிருப்போரும் காப்பாற்றாத மனிதர் உலகு. ஆனால் அனைத்தையும் காக்கும் ஆண்டவனே.

அறிவுடையோனாகிய இறைவனின் திருவடியில் சென்று சேரா உலகம் பொய்யான உலகம். துயரங்கள் முந்தி வந்து மூடும் உலகம். மூடும் உலகில் எந்த நாளும் வெந்து தீயும் நரகத்திற்கு விறகு தேடி அதில் இடும் உலகம். இந்த உலகில் நீ ஏன் மனிதரே (ஐயா) இன்னும் ஆசை கொண்டு இருக்கின்றாய்?

குறிப்பு

இந்த வீடும் (உடம்பும்) பழமையான வீடு ஆகுதடா! மேற் கூரையும் விட்டமும் சுவரும் ஆடி அலைந்து விழுகின்ற நாளும் நெருங்கி நெருங்கி வருகுதடா! இதனை நாடி இன்னும் நீ நம்பி மோசமடையாது பாடிப்பாடி எம்பெருமான் பாதத்தினைப் போற்றி வாழ்வாயே!

## 6.11 உலகின் பாவமிலார் உளரோ (பாடல் 57 -65)

இந்த உலகத்தில் பாவம் செய்தவர் எவரும் இல்லாது இருக்கின்றாரோ! சொல். இந்த உலகில் பாவம் என்பது இல்லாது போக வழியும் உண்டோ? சிந்தையானது கலங்கித் தவறிவிட்டது என்றால் தெய்வத்தின் அருளும் தவறிக் கிடைக்காது போய்விடுமோ? சிந்தைமங்கி மழுங்கிடுமேல் தெய்வஒளியும் மழுங்கிடுமோ?

மண்ணிலே பாவம் செய்யாத மனிதர் எவரும் உண்டோ சொல்வாயாக! மண்ணிலே பாவம் செய்யாது வாழும் வாழ்க்கை எளிதானதோ சொல்வாயாக! மண்ணில் பாவம் செய்தவரை மாற்றமுடியாத நரகத்தில் இடுவாயேல் மண்ணிலே இறைவனே உன்னைப் பெருங்கருணை உடைய, பெருவள்ளல் என்பதை ஏற்றுக்கொள்ள முடியுமோ?

பாவம் செய்தோம் என்று இந்தப் பாரில் வருந்திப் பயன் உண்டோ? பாவம் செய்யாது இறைவன் அருள் கிடைப்பது அறிவோமோ?பாவத்திற்கான மன்னிப்பும் இல்லையென்றால் பாவத்திற்கான செயல் என்பதும் உளதாமோ? பாவம் செய்தோம் என்று ஏனோ பதறிப்பதறி நடுங்கிடுவீர்?

"மானை வளர்த்த கையாலே
வஞ்சப் புலியம் வளர்ந்திந்தக்
கானில் வேட்டை காணுமவர்
கருணை உடையவர் ஆவாரோ?
ஞானக் கண்ணின் பார்வையிலே
நன்மை தீமை வேறாமோ?
தேனைப் பொழியும் சொல்லாய்! நீ
தெரிந்து கூற வேண்டுவனே"

இறைவன் அருளைப் பெறுவதற்கு இடையிலே தரகருக்கு இடமும் உண்டோ? கூறவேண்டுமென்றால், மனிதர்கள் செய்யும் சூது மிக்க உலகில் பெரிய சூது ஒன்றினை அறியாயோ? பூசுகின்ற திருநீறும், கண்டிகையும், முப்புரிநூலும் (பூணுலூம்) பூண்டதினால் காசு பணத்தின் மீது ஆசையை அவர் கடந்தது உண்டோ?

தேடுகின்ற இறைவன் திருவடியில் சேருவதற்கு வழியொன்று உண்டு. அதனை நெடுவழியாகவோ, சிறுவழியாகவோ நிகழும்படியாக செய்ய வல்லவன் நீயே தான். நாடுவதற்குரிய கோவில் மடங்களெல்லாம் நம்புதற்குரிய இறைவன் அடியார்,அந்த வழியிலே கூடித் தங்கும் நிழல்கள் ஆகும். அக்கோயிலே நிழல்கள் மட்டுமன்றி குடிப்பதற்குரிய தண்ணீர்ப் பந்தல்கள் ஆகும்.

மண்ணைமண்ணில் உதறிவிட்டு குற்றம் குறையொன்றும் இல்லாமல் விண்ணிலே செல்வதற்குரியதாக விளங்கும் ஆன்மாவே, இந்தப் புவியில் பிறந்த நாள் முதல் இந்த நாள் வரையும் நலிவுற்று சிறையில் இருந்ததை எண்ணி வெட்கம் அடையாயோ? இதற்கும் மேலே வெட்கம் வேறு உண்டோ?

காசுபணத்தைக் கண்டவர் யார்? அதனைக் கண்டு மயக்கம் கொண்டு சுழல்பவர் யார்? பூசைகள் பலவும் புரிந்தவர் யார்? அதனைப் புரிந்து பிழைகள் செய்பவர் யார்? நாசமிக்க நரகத்தை உருவாக்கியவர்கள் யார்? அந்த நரகத்தினை எண்ணி வருந்துபவர் யார்? ஈசன் அருளை அறியாத ஏழை மனிதா நீயே அன்றோ!

எண்ணிப் பார்த்தால் சமயவாதிகள் இருட்டிலே அலைந்து திரிகின்றார். கண்ணிலே காண்பதற்கு ஒன்றுமே இல்லை. கையிலே தீபம் எதுவும் இல்லை. விண்ணும் அதிர முழக்கம் இடுவார். வீணாக சண்டைகள் மூட்டிடுவார். மண்ணிலே மனிதர் ஒற்றுமையினை வாளினால் கீறி இரண்டாக உடைத்திடுவார்.

## 6.12 – அமரவாழ்வு தருவதெது? (பாடல் 66 – 78)

நெருங்கி அடையும் சமயவாதிகளின் வாயினை மூடச் செய்வது எது? முடியும் மனித வாழ்க்கையினிலே அமரவாழ்வினைத் தருவது எது?

குறிப்பு

கண்ணால் கண்டு மறக்க இயலாதக் காட்சிகளைஓர் கணத்தில் காட்ட வல்லது எது? உண்டு மகிழும் மதுவினைத் தவிர உலகில் வேறோர் பொருளுண்டோ?

"இருக்கும் காலம் சிறிதேயாம்
இதனுள் இன்ப வாழ்வினையாம்
பெருக்குமளவு பெருக்கிடுவோம்
பிழையொன்றதனால் உண்டோ? சொல்
உருக்கும் பாடல் கேளாமல்
உண்ணும் மதுவும் உண்ணாமல்
பொருக்கு மண்ணில் மண்ணாகப்
புதைந்து போனால் என்செய்வோம்?"

இந்த உலகில் இறந்து போன மன்னர்கள் அனைவரும் மண்ணிலே மண்ணாய் மறைந்திடுக. நெடிய கதை என்னும் கருவியால் ஒரு வீமன் (பீமன்) தன் முன்னுள்ள படையை மோதி அழித்திடுக. எவர் வேண்டும் பொருளையும் கர்ணன் வேண்டிய அளவு வழங்கிடுக. எனினும் நீ என்னுடன் வந்து இனிய மதுவை உண்பாயே!

காட்டிலிருக்கும் ரோஜா முகம் வெளிறி (தன் நிறம் மாறி வாடி) கவிழ்ந்து நிற்பது கண்டு ஒரு வானம்பாடி என்னும் பறவை மனம் உருகி மதுவினை உண்பாயாக! மதுவினை உண்பாயாக! மதுவினை உண்டால் நோய் நீங்கி உடல் தேறுதல் அடைந்து செம்மையாக வளர்ந்திடுவாய். ஏனம்மா! நீ வாடுகின்றாய் என்று கூறிச் சென்றதுவே.

உலகிலே வாழும் இந்த வாழ்வின் உண்மையை அறியாத குயவன் செய்த கலசத்தின் வாயினை என்னுடைய வாயானது சென்று சேர்ந்து கொண்ட கதையானது இதுவாம். உலக வாழ்க்கையானது நிலையானது இல்லை. இந்த மதுவினை உண்பாயாக! என்று கலசத்தின் வாய் என் வாயோடு கனிவான சொல்லினைச் சொன்னது அம்மா!

என்னைக் கேளாது எங்கிருந்தோ இங்கே (இந்த உலகத்தில்) தூக்கி எறிந்திட்டான். என்னைக் கேளாது இறைவனானவன் இன்னும் எங்கே தூக்கி எறிவானோ? என்ன செய்வேன்? இக்கொடுமை

ஏழையாகிய என் உள்ளம் மறந்து ஒழிய வண்ணமிகு கிளியே! ஒரு கிண்ணம் மதுவினை ஊற்றித் தருவாயே!

குறிப்பு

இரவும் பகலும் விவேகத்தால் அடைந்த கவலைக்கு அளவில்லை. என் தொல்லைகள் யாவும் நீங்க இறைவனைத் துரத்திவிட்டுத் துணிவாகச் செல்வியாகிய திராட்சைக் கொடியினைத் தரும் தெய்வமகளை மணந்து கொண்டேன். இனி துயரம் என்பது இல்லை: என்றும் இன்பம் இன்பமே.

உண்ணுகின்ற மதுவும், நீயும் உள்ளம் உருகி முத்தம் இடு முகமும், எண்ணம் பொருள்கள் முடிவது போல் இல்லையாகு முடியுமெனில் மண்ணிலே இந்த நாள் நிலைபெற்று மறைவது போல் வருநாட்களும் நிலைபெற்று மறையுமாம். இவ்வுறுதியினை இந்த அளவில் ஓர் சிறிதும் குறையில்லாது அறிவாயே!

இதற்கும், அதற்கும் எத்தனை நாள்? இரவும், பகலும் சண்டை? அப்பா! புதருக்குள்ளே இல்லாத கனியினைத் தேடிப் புற்றிலே நாகமணியினைத் தேடிப் பதைத்து வீழ்ந்து அதனை அடைவதிலே ஏதும் பயன் உண்டோ? இந்த உலகில் அமுதசுரபியினுள் முதலிற்கு முதலாம் திராட்சையினை முற்றும் நம்பி வாழ்வாயே!

மங்குகின்ற மாலைப் பொழுதினிலே மதுவின் சாலையிலே அதன் வாயில் வழி எங்கும் நான் இதுவரை கண்டறியாத எழில் மிக்க தெய்வ வடிவினை உடையோன், தங்கத்தில் செய்த கலசத்தினைத் தாங்கி வந்தான். “சற்றே பருகிப் பார்” என்றான்.

எங்கும் கிடைக்காத அந்த அமுதம் இனிய திராட்சை ரசம் அப்பா! நிலைபெற்ற துயரம் மாறிடவே, வருகின்ற துயரம் நீங்கிடவே இன்று இக்கிண்ணம் நிறைய எனக்கு இனிமையான மதுவினை நீ வார்த்திடம்மா! அவ்வாறின்றி நாளைக்கு என்று கூறுவாயேல், அந்த நாளை வரும் முன்னம் சென்ற கோடி ஆண்டுகளில் சேர்ந்தது ஒன்றாகிப் போவேனே.!

அரிய இனிய குணமுடையவர், அறிவும் புகழும் மிகவும் உடையார், மயக்கம் மிக்க உலகம் மதிக்கும் அருமணியே போன்றவர்கள் பல நண்பர்கள். பருகுகின்ற மதுவைச் சிறிது முன்பு

பருகிப்பருகி மெல்ல எழுந்து ஒருவர் ஒருவர் ஒருவராய் உறங்க வீடு சென்றனரே!

குறிப்பு

## 6.13 – ஏழை என்னைக் காப்பாயோ? (பாடல் 79 -83)

அங்கு அயனாகிய இறைவனும் தங்கவிடமாட்டான். அஞ்சல் வழியிலே இங்கு அனுப்பிடுவான். இங்கு யமனும் இருக்க விடமாட்டான். யார் சொன்னாலும் விடமாட்டான். அங்குமிங்குமாக அலைந்து அயர்ந்து வாடி அலுப்புற்றேன். இங்குமங்கும் எங்குமுளோய் ஏழையாகிய என்னைக் காப்பாயே!

ஒரு கை அன்னமும் இடமாட்டான். ஊர் ஊராகத் துரத்திடுவான். பருகுவதற்கு நீரும் தரமாட்டான். பழியில் மூழ்கச் செய்திடுவான். இரவும், பகலும் ஓயாமல் என்னை மானம் கெடுத்து அலைத்திடுவான். கருணை இல்லாக் காலனவன். அவன் செய்து காட்டும் கொடுமை சிறிதளவோ!

“உண்ணும் உணவை அழித்திடுவான்
உடலை மெலியச் செய்திடுவான்
கண்ணுக்கினிய ஆடையினைக்
கந்தலாகச் கீறிடுவான்
பண்ணற் கரிய மாளிகையும்
பாழ் மண்ணாகக் கண்டிடுவான்
எண்ணிற் காலன் கொடுமையெலாம்
யாரே கூற வல்லவராம்”

வாடி தினமும் வருந்திடினும், வயிற்றுக்கு உணவு தரமாட்டாய். தேடி வைத்த பொருளையெல்லாம் திருடிக் கொண்டு போய்விடுவாய். ஆடிச் சூழலும் ராட்டினமும் ஆடைக்கு உதவும் நூலினைத் தருமே. நிலவும் காலச் சக்கரமே! உன்னால் எதுவும் பயனுண்டோ?

ஏழை ஒன்றை எண்ணுகின்றேன். இறைவன் ஒன்றை எண்ணுகின்றான். ஏழையின் எண்ணம் இந்நிலையில் என்றும் நிறைவு கண்டிடுமோ? ஏழை வாழ்வினை அன்றி எதுவும் இறைவன் எண்ணான்.

ஆதலினால் ஏழை எண்ணம் நிறைவேறாது இருத்தல் அன்றோ நன்மை மிக்கது ஐயா!



## 6.14 தேறும் உண்மை ஞானியர்கள் (பாடல் 84 -113வரை)

ஆராய்ந்து அறிய இயலாத உலகின் மாற்றத்தை எல்லாம் ஆராய்ந்து உண்மையினை அறிவர் ஞானிகள். மாறாத இன்ப துன்பத்தினால் மயக்கம் கொள்வதற்கு ஒன்றுமில்லை கூறாயோ! இன்பம் மறைவது போலே குறைந்து மறையும் துன்பமே! ஆறாதப் புண்ணும் இந்த உலகில் இல்லை. ஆற்ற மருந்தும் அதற்கு இல்லை.

அன்பு செய்தால் அயலாரும் நெருங்கி நெருங்கும் உறவினர்கள் ஆவர். அன்பு நீங்கின் உறவினரும் அகன்று நிற்கும் அயலார் ஆவராம். துன்ப நோயினை நீக்கிடுமேல் வெறுப்பிற்குரிய நஞ்சும் (விடமும்) அமுதமாகும். துன்ப நோயினை உருவாக்கிடுமென்றால் தூய்மையான அமுதமும் நஞ்சாகும் (விடமாகும்).

யாது நீ கூறினாய்! இனிய அமுதம் ஏந்தி உண்ட (கலமதனை) பாத்திரத்தினை மோதி உடைக்கும் அறிவில்லாத மூடன் எங்கும் உண்டு கொலோ? ஓதற்கு அரிய பேரருளால் உவந்து கண்ட உருவமதைத் தீயது என்று எண்ணிச் சினம் பெருக்கிச் சிதைப்பதற்குத் தெய்வம் துணிந்திடுமோ?

மறந்த உள்ளம் பிறந்ததென வசந்தகாலமும் வந்தது இதோ! சிறந்த மலர்கள் மலர்ந்து மரம் தெய்வ மணமே கமழ்ந்திடுமால், இறந்த புல்லும் இந்த உலகத்தின் மீது எழுந்து கொழுந்து விட்டிடுமால், துறந்து ஞானி தனிமையிடம் துருவிச் செல்வது ஏன்? ஐயா.

குண்டும் குழியுமாக அடர்ந்து விளங்கும் இந்த உலகத்தில் நான் செல்லும் வழியும் செம்மையான வழியாகும். மற்று அந்த வழியினை நீக்கி என்னைப் பழியிலிருந்தும் வெம்மையான பாவம் அணுகாமல் பாதுகாப்பாய்ப் போதகனே!

பொன்னனாகிய பொன் (தங்கம்) மோசக்காரன் முத்தம்மாளாகிய முத்து (நவரத்தினங்களில் ஒன்று) ஓர் வேசி என்றால் ஆசையினைக் காட்டி உன்னை இழுத்துக் கொண்டு போய் ஆழமான குழியிலே

குறிப்பு

வீழ்த்திடுவார். பாசம், நேசம் என்பதெல்லாம் பாசாங்கே தவிர வேறொன்றுமில்லை. ஈசனாகிய இறைவன் திருவடியை மறக்காது என்றும் போற்றி வாழ்வாயாக!

"ஆவித் துணையே! அருட்கடலே!
அருளால் அருள்செய் ஆண்டவனே!
பாவி எனக்குள் அருள்நோக்கம்
பாலித் திடுதல் ஆகாதோ?
மேவும் அரிய புண்ணியமாம்
விலைகொண்டதனை விற்பாயேல்
யாவர் உய்வர்? இவ்வுலகில்
ஏழைமக்கள் என்செய்வார்?

ஈசனை நாடுகின்ற பாவிகளை நரகத்தில் வீழ்த்தி விடுவானென்று பல ஏடுகளிலே பண்டிதர்கள் எழுதி வைத்துப் போய் விட்டார். ஈடு இணையில்லாத அவனருளை என்றும் அன்பால் உள்ளத்திலே உருகி ஆடிப்பாடும் அடியவர்களைத் தவிர வேறு எவரால் அறிய இயலும்.

இந்த உலகத்திலே உன் திருவடியைப் பற்றி, வாழுகின்ற அடியவர்களையே இறைவனே நீ மேம்பட (உய்ய) வைக்கின்றாய். அவ்வாறு மேம்பட செய்தல் அவர் செய்த வேலைக்கு உதவும் கூலியாகும். எவரும் செய்ய நினைக்காத பழிபாவம் செய்த பொல்லாத தீயவர்களையும் ஐயம் எதுவுமின்றி ஆட்கொள்ளுதலே அருளாகும் எங்கள் பெருமானே!

குளிர்ச்சி பொருந்திய மதியும், சடையும் தாங்கும் தையலாகிய (பெண்) பார்வதியைத் தன் ஒரு பாகத்திலே கொண்ட சிவபெருமானை நினையாது எவனோ ஒருவன் கூறியது கேட்டு எவனோ சொன்னான். அவனைக் கேட்டு அண்ணா கூறினான். அது போன்று அவன் தம்பி இன்று கூறுகிறான். ஈசனின் திருமேனியைக் கண்ணால் கண்டவர் எவருமுண்டோ? சொல்!

நாடுகின்ற தெய்வம் இதுவென்று இந்த உலகத்திலே அறிவதற்கு முயல்கின்றார். தேடித்தேடிப் பார்த்தது எல்லாம் திரை மேல் வந்த திரையாகும். (திரை மேல் வந்த படமாகும்). வாடி வருந்தி நோன்புற்று

பெற்றதெலாம் வாழ்நாட்களை வீழான நாட்களாக ஆக்கியதே. பாடிப்பாடிப் பெற்றது அனைத்தும் பகலில் கண்ட கனவு போன்றதுவே.

குறிப்பு

எங்கும் மனிதர் உன்னைத் தேடி இரவும் பகலும் அலைகின்றார். எங்கும் உள்ளது உன்னுடைய வடிவமே ஆகும். எனினும் கண்பார்வையற்ற குருடர் காண்பாரோ? எங்கும் எழுவது உன் குரலாம். எனினும் செவிடர் கேட்பாரோ. எங்கும் என்றும் எவ்வுயிரும் யாவுமான இறைவனே! எவராயினும் கண்ணிருப்போரும் செவி உள்ளோரும் மட்டுமே உன்னை உணர்வர்.

ஆலயங்கள் ஏனய்யா?
அபிஷேகங்கள் ஏனய்யா?
கோலங் கொடிகள் ஏனய்யா?
கொட்டு முழக்கம் ஏனய்யா?
பாலும் பழமும் வைத்துநிதம்
பணிந்த நிற்பதேனய்யா?
சீலம் பேணும் உள்ளத்தைத்
தெய்வம் தேடி வாராதோ?

என்னை நோக்கி எதிர் வந்த இறைவனை நானும் நிலம் நோக்கி நின்றேன். என்னை முத்தமிட வந்தான். நானும் நழுவ வழி பார்த்தேன். இன்னும் நிற்பான் என்றிருந்தேன். இமைப்பதற்குள்ளே ஓடி மறைந்திட்டான். இன்னும் தேடி அலைகின்றேன். எங்கும் காணேன். என் செய்வேன் என நாயக நாயகி பாவத்தில் உமார்கய்யாம் தன் பாடலில் இறை உணர்ச்சியைப் பற்றிப் பாடியுள்ளார்.

காரணம் எதுவுமின்றி என்னைத் தனியாக வைத்தாய் இறைவனே! இறைவனே நீ அனுப்பிய தூதின் வரவினைக் காணாது தூண்டிலில் அகப்பட்ட புழுவாய்த் துடிக்கின்றேன். நீதி இதுவோ? நெறி தான் இதுவோ? நீ செய்கின்ற குறையை நிறைவு செய்ய ஓதுகின்ற வாழ்நாள் நீண்டிடுமோ? உள்ளமே இதனை உணராயோ?

என்றும் என்றும் என் குறைகளை இரவும், பகலும் ஆராய்ந்திடுவேன். அவ்வாறில்லை என்றால் அயலவர்கள் குறை கண்டு கூறினால் கதவினை அடைத்துக் கண்ணை மூடிடுவேன். இன்று இந்த

உலகத்தின் கொடுமையெல்லாம் இதயம் விளக்க செய்திடுமால், ஒன்றியிங்கு வாழ்வதிலும் ஓடி ஒழிவதே நலமாகும்.

குறிப்பு

எண்ணி எண்ணி என் குறைகள், ஏனோ தினமும் கூறிடுவர், செய்கின்ற செயல்களைப் பழித்திடுவர். பாவி என்று தூற்றிடுவர். மண்ணில் யானோர் ஒளிவட்டம். மற்று அந்த வட்டம் நோக்கிடுவோர். கண்ணில் காண்பது அவரவர்தம் காட்சியே தவிர வேறொன்று ஆகுமோ?

சின்னஞ் சிறியவன், மதுவினை உண்டு திரியும் லோலன், என்று உள்ளம் திரும்பத்திரும்பப் பேசி என்னைக் கலங்கச் செய்திடுவர் கருணை அற்றவர். அன்னையே! அப்பாவே! உன் கோயில் அடிமையாக உன்னை அணுகியபின் என்னை நானும் அறிவதற்கு இயலுமோ? நான் செய்த கருமங்களே எனதேயாகுமோ?

இறைவனே, உன்னை நினைத்தால் என் உள்ளத்தின் உள்ளே ஊக்கம் பெருகும் ஐயமில்லை. உன்னைத் தவிர ஒருவரையும் இந்த உலகில் நோக்கும் ஆசையிலேன். உன்னை நோக்கி என் முகமெங்கும் ஒளிரக் கண்டு மகிழ்ந்திடுவேன். என்னை நோக்கி என்னுள்ளே நீ இருப்பது கண்டு வாழ்த்திடுவேன்.

நாடுகின்ற உயிருக்கு உயிர் நீயாகும். கண்ணுக்குள்ளே விளங்கும் கருமணியும் நீயே, கருத்திற்குள்ளே விளங்கும் ஒளியும் நீயே, பண்ணிற்குள்ளே உள்ள சுவையும் நீயே, பாக்களில் பொருந்தியுள்ள நயமும் நீயே, ஆராய்ந்து பார்த்திடின் நீ இல்லாத பொருள் எதுவும் உண்டோ இவ்வுலகில்?

ஓதுகின்ற வேதமும் ஒன்றுமில்லை. உருட்டுகின்ற மணியுடைய தாழ்வடமும் (தேர்) இல்லை. ஆதியாகிய கோயிலினைத் தினமும் தேடி அங்கும் இங்கும் அலைவதும் இல்லை. சாதி இல்லை. மதமும் இல்லை. இந்த உலகத்தின் மீது ஓர் ஆசையில்லை. எந்தவொரு கவலையும் இல்லை. எனக்கு யாரே இந்த உலகத்தில் நிகராவார். வெம்மையான வீழ்கின்ற பாலைநிலம் ஒரு புறமும், பயிர்கள் வாழ்கின்ற நன்செய் நிலங்கள் ஒரு புறமும், இடையிலே ஒடுங்கி ஓடுகின்ற நந்தவனமும், அந்த நந்தவனத்தில் அடிமையாக்கும் அரசர் (இறைவன்)

இவரில்லாது அமையும் அரிய நல்ல வாழ்வும் உடைமையாகப் பெற்றால் தேவலோகமும் வேண்டேனே.

குறிப்பு

“வெய்யிற் கேற்ற நிழலுண்டு
வீசும் தென்றல் காற்றுண்டு
கையில் கம்பன் கவியுண்டு
கலசம் நிறைய மதுவுண்டு
தெய்வ கீதம் பலவுண்டு
தெரிந்து பாட நீயுமுண்டு
வையந் தருமிவ் வனமன்றி
வாழும் சொர்க்கம் வேறுண்டோ?

பொல்லாதவன் என்று கூறிடுவோர் அதனாலென்ன? புனிதன் என்று கூறிடுவார் அதனாலென்ன? கலைஞன் என்று கூறிடுவார் அதனாலென்ன? சொல்ல முடியாத சொற்களை, வசைகளைக் கூறினாலென்ன? சூழ்ந்து நின்று புகழ்ந்தாலென்ன? எல்லா நாளும் ஒரு நாள் போல் இருக்கவேண்டும் என் மனமே!

மேகம் போன்ற கொடையாளர், உலகம் முழுதும் போற்றும் புகழிடை உடையவர், கல்விக்கு இணையற்றவர். தத்தம் முன்னோர்களின் செயலும் குணமும் சிறப்பும் ஒவ்வொரு தினமும் மிகுதியாக போற்றிடுவார்கள். வயலிலே பயிரினை விளைவிக்காது, பழைய வைக்கோலினைக் கிண்டிக் கொண்டிருப்பதில் பயன் என்னவோ?

துயரமானது சூழ்ந்து அடர்ந்து வளர்ந்து உன்னைச் சுற்றி வளைத்திடும் வேளையிலே முயலுகின்ற முயற்சியின்றி, ஒரு மூலையிலே முடங்கித் தேடி இருப்பதும் ஏனோ? அயலிலே உள்ளார் படும்பாடும், அழுதகண்ணீருமாக இருப்போர் பலரும் உண்டு. அவரைக் கண்டு உன்னுடைய மயக்கத்தை முற்றிலுமாக மாற்றிடுவாயாக. மனத்தை நன்றாகத் தேற்றிக் கொள்வாயாக.

அடைகின்ற உடைமை யாவற்றையும் நீ நாசம் செய்த கொண்டு நாடினாய் என்றால், உண்மையாக உன்னையுமே உணர்ந்து கொள்வாய்,ஐயமில்லை.

மண்ணில் ஆசை நீங்கிவிடின் அருள் வள்ளலாகிய இறைவன் மீது கொண்ட ஆசை ஓங்கி வளர்ந்திடும். எண்ணுகின்ற உள்ளத்திலே ஆசையிரண்டு இருக்க இடமும் உண்டோடா?

குறிப்பு

உருண்டு ஓடுகின்ற உலகில் ஒரு நாளும் ஒன்றுமே நிலைத்து நிற்பதில்லை. மயக்கம் மிக்க மனிதர் வாழ்க்கை ஒரே வழியில் செல்வதும் உண்டோ? சொல்வாயாக! பொருளை நோக்கிப் புகழினை விட்டுவிடுவார். புகழினை நோக்கிப் பொருளினை விட்டுவிடுவார். அருளினை நோக்கி பொருளையும், புகழினையும் விட்டு விடுவார் அரியவர்கள்! என்றும் அரியவர்கள் அம்மா!

கடல் சூழ்ந்த இந்த உலகினை ஆளும் அரசனாக வேண்டுமெனில் வாழுகின்ற வாழ்வில் உன்னையும் நீ மறந்து வாழவேண்டுமடா! ஏழையாகி எளியவரின் எளியவனாக வேண்டுமடா! தோழனாகி யாவருக்கும் தொண்டனாக வேண்டுமடா!

இல்லாத பொருளிற்கு ஏங்காமல், இருக்கும் பொருளினையும் எண்ணாமல், எல்லாம் வல்லவனாகிய எம்பெருமான் இரங்கி அருளும் அளக்கும் படி (தேவையானவை) வாங்கி நல்லவர்களின் அறிஞர்களின் நட்பையும் நீ நாளும் நாளும் நாடுவாய் என்றால் நில்லாத உலகிலே நிலைத்த சுகம் நீண்டு வளரும் நிச்சயமே.

“எழுதிச் செல்லும் விதியின் கை
எழுதி எழுதி மேற்செல்லும்
தொழுது போற்றி நின்றாலும்
சூழ்ச்சி பலவும் செய்தாலும்
அழுது கண்ணீர் விட்டாலும்
அபயம் அபயம் என்றாலும்
வழுவிப் பின்னால் ஏகியொரு
வார்த்தை மாற்றம் செய்திடுமோ?

பாரியினைப் போலக் கொடுத்தவரும், பணத்தினைப் புதைத்து, புதைத்து வைத்தவரும், தேரின் கீழிருக்கும் மண்ணாகிப் போனது அன்றி செம்பொன்னாக மாறியது உண்டோ அறியோமே! ஊரில் அவருடைய உடலை எடுத்து உரைத்துப் பார்த்தும், எடையிட்டுப் பார்த்தும் காண

இயலுமோ? ஆராய்ந்துக் கூறிடும் உள்ளத்து உண்மையிதனை ஊன்றி நோக்கி உணர்வாயே!

குறிப்பு

## 6.15 தொகுப்புரை:

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பாரசீகக் கவிஞர் உமார்கய்யாம் இயற்றிய 'உமார்கய்யாம்' பாடல்களை மொழிபெயர்ப்பு செய்து வாழ்க்கையின் நிலையற்ற தன்மையை, அந்நிலையற்றதில், நிலைபெற்று விளங்குவது எது என்னும் சிந்தனையை அழகாக கவிதையாக்கித் தந்துள்ளார். எழுவாய் எழுவாய் எழுவாயே, உள்ளத்து உண்மை, அறிவின் விதைகள், திகைத்து மறுகுகின்றேனே, குயவனும் மண்ணும், தேறுமொழி யாரே கூற வல்லார்?, பயனில் மொழிகள், உலகில் பாவமிலார் உளரோ?, அமரவாழ்வு தருவதெது?, ஏழை என்னைக் காப்பாயே, தேறும் உண்மை ஞானியர்கள் போன்ற தலைப்புகளில் எழுதிச் செல்லும் விதியின் நிலையை உண்மையின் உண்மையை இக்கூறு தத்துவார்த்தப் பாடல்களின் வழி எடுத்துரைத்துள்ளது.

## 6.16 மாதிரி வினாக்கள் (2 மதிப்பெண்கள்)

1. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை எவர் பாடல்களை மொழிபெயர்ப்பு செய்துள்ளார்?

   உமார்கய்யாம் பாடல்களை மொழிபெயர்ப்பு செய்துள்ளார்.

2. உமார்கய்யாம் எந்நாட்டினைச் சேர்ந்த புலவர்?

   பாரசீக நாட்டினைச் சேர்ந்தவர்.

3. 'கய்யாம்' என்னும் சொல்லிற்குப் பொருள் யாது?

   'கூடாரம் செய்பவன்' என்பது பொருள்.

4. 'சீலம் பேணும் உள்ளத்தை' எது தேடி வராதோ?

   தெய்வம்

5. 'வெயிற்கேற்ற நிழலுண்டு, வீசும் தென்றல் காற்றுண்டு' எனப் பாடியவர் யார்?

   கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

குறிப்பு

## 6.17 பயிற்சி வினாக்கள் (5 மதிப்பெண்கள், 10 மதிப்பெண்கள்).

1. ‘குயவனும் மண்ணும்’ என்னும் தலைப்பில் கவிமணி விளக்கும் கருத்துகள் யாவை? (5மதிப்பெண்கள்)
2. ‘பயனில் மொழிகள்’ குறித்து உமார்கய்யாம் பாடல்கள் தரும் சிந்தனைகளை விளக்குக. (5மதிப்பெண்கள்)
3. ‘உமார்கய்யாம் பாடல்களில்’ பொதிந்திருக்கும் தத்துவச் சிந்தனைகளை விவரிக்க: (10மதிப்பெண்கள்)
4. உமார்கய்யாம் பாடல்களில் கவிமணியின் கவிநயத்தினை அப்பாடல்கள் வழிநின்று விளக்குக: (10மதிப்பெண்கள்)

## 6.18. மேலும் படித்தறிக:

## கூறு 7

## கவியரசு கண்ணதாசன் - தைப்பாவை.

7.1 அறிமுகம்

7.2 நோக்கம்

7.3 கவியரசு கண்ணதாசன்

7.4 வாழ்த்துரைப்பாய் தைப்பாவாய் (3பாடல்)

7.5 எழுவாய் தைப்பாவாய் (12வது பாடல்)

7.6 பேராளனும் தைப்பாவையும் (13-14,15,16,17,18)

7.7 யார் வென்றார் அறிவாய் தைப்பாவாய் (19)

7.8 காலம்வரல் கூறாய் (20)

7.9 கையிற் சிறை வைத்தான் (21,22,31வது பக்கம்-32,33,34,35,36)

குறிப்பு

## 7.1 அறிமுகம்:

இருபதாம் நூற்றாண்டில் திரையுலக் கவிஞர்களில் எளிமை, இனிமை, புதுமை, செம்மை, திறமை எனச் சிறந்து விளங்கிய தமிழ் மைந்தன் கவிஞர் கண்ணதாசன். கவிதையின் சொல்லோவியம் தமிழ்கவிஞர்களுக்கு மயக்கும் ஓவியம். திரையிசைப்பாடல்கள் இவருக்கு வெகுஜனம் என்றால் ‘அர்த்தமுள்ள இந்து மதம்’, போன்ற உரைநூல்கள் வெகுஜன மக்களுக்கு சிம்மாசனம். தைப்பாவை, இயேசுகாவியம் போன்ற கவிதை நூல்கள் காவியங்களாகும். கவியரசு கண்ணதாசன் இயற்றிய ‘தைப்பாவை’ என்பது ‘பொங்கல்’ தினத்தினைப் பெண்ணாக உருவகித்து, கன்னியாகிய தமிழன்னை வடிவம் எனக் கூறப்பெறும் சிறப்பினை உடைய நூல். தைப்பாவையில் சிற்றிலக்கியங்களான ஆற்றுப்படை, கோவை, உலா, அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், பரணி, சதகம், தூது, பள்ளு, குறவஞ்சி, பாவை, ஊசல் எனப் பல துறைகளைக் கொண்டு உருவாக்கப் பெற்ற நூலாகவும் விளங்குகிறது.

குறிப்பு

"தைப்பாவை என்ற பெயர் தமிழில் ஆண்டாளின் பாசுரமாகிய திருப்பாவையையும் மாணிக்கவாசகரின் பாசுரமாகிய திருவெம்பாவையையும் நினைவூட்டுகிறது. பாடல்தோறும் அடிதோறும் சீர்தளைதோறும் அவற்றின் மாமணமாகப் பாட்டு முழுவதும் பரவியுள்ளது. 'பாடேலோர் எம்பாவாய்'

என்ற விளியுடன் பாடல் தோறும் முடிவுறும். அத்தெய்வப் பாசுரங்களைப் போலவே இந்தத் தைப்பாவையும் பாடல்தோறும் 'தைப்பாவாய்' என்ற விளியுடன், முடிவுறுகிறது" என கா.அப்பாதுரை 'தைப்பாவை' நூலின் அணிந்துரையில் குறிப்பிட்டுள்ளார். அச்சிறப்பிற்கேற்ப வாழ்த்துரைப்பாய் தைப்பாவாய், எழுவாய் தைப்பாவாய், பேராளனும் தைப்பாவையும், யார் வென்றனர் அறிவாய் தைப்பாவாய். காலம் வரல் கூறாய், கையிற் சிறை வைத்தான், தென்மதுரை மண்ணில், பாடிவரும் காவேரி, தழைக்கும் கோன்வஞ்சி, வாயில் திறந்திட்டேன், விரைந்தெழுவாய் தைப்பாவாய், அருள் வடிவே தைப்பாவாய், பொங்கற்பால் பொங்கிப் பூவுதிர்ப்பாய் தைப்பாவாய் என வகுக்கப்பெற்று அதன் கருத்துகள் இக்கூறில் எடுத்துரைக்கப்பட உள்ளன

## 7.2 நோக்கம்

1. கவியரசு கண்ணதாசன் அறிமுகம், சிறப்புகள், கவிதை நயம் அறிதல்.

2. தைப்பாவை – நூற்சிறப்பு தெரிதல்.

3. தைப்பாவை மூலம் கவிதையுணர்ச்சி உணர்தல்.

4. கவிதை எழுதும் பயிற்சித் தூண்டல்.

5. மாணவர்கள் கவிதை எழுதும் ஆர்வம் அதிகரித்தல்.

## 7.3 கவியரசு கண்ணதாசன்

குறிப்பு

கவியரசு கண்ணதாசன் ‘முத்தையா’ என்னும் இயற்பெயர் கொண்டவர். சிறு கூடல்பட்டியில் சூன் 24ந்தேதி 1927ல் பிறந்தவர். காரைமுத்துப்புலவர், வணங்காமுடி, கனகப்பிரியன், பார்வதிநாதன், ஆரோக்கிய சாமி எனப் பல புனைப்பெயர்களைக் கொண்டவர். இவர் பெற்றோர் சாத்தப்பன், விசாலாட்சி ஆவர். இவரை ‘சிகப்பு ஆச்சி’ என்பவர் தத்து எடுத்து வளர்த்ததாகவும் ‘நாராயணன் என்னும் பெயரினைக் கொண்டதாகவும் அறிகின்றோம். அமராவதிபுதூர் உயர்நிலைப்பள்ளியில் எட்டாம் வகுப்பு வரை படித்தவர். 1943ஆம் ஆண்டில் திருவொற்றியூர் ஏஜாக்ஸ் நிறுவனத்தில் பணியில் சேர்ந்தார். பத்திரிக்கை ஆசிரியர் பணிக்குச் சென்ற பொழுது ‘கண்ணதாசன்’ எனப் பெயர் வைத்துக் கொண்டார்.

“கவிஞன் யானோர் காலக்கணிதம்
கருப்படு பொருளை உருப்பட வைப்பேன்”

என்னும்

அவர் எழுதிய வரிகள் அவர் காலம் கடந்தும் வாழும் காலத்தை வென்றவர் என்று அறிவதற்கு உரியதாகின்றன. கண்ணதாசன் துயர் பல காணினும் துயரினையே வெற்றிக் கனிகளாக மாற்றியவர்.

“என்னை அழவிடு என்னை அழவிடு
அன்னை என்னை அழவே படைத்தாள்
வானம் அழுவது மழையெனும் போது
வையம் அழுவது பனியெனும் போது
கானம் அழுவது கலையெனும் போது
கலைஞன் அழுவது கவிதையாகாதோ”

என்று தன் அழுகையையே கவிதையாக்கி உள்ளார்.

சண்டமாருதம், தென்றல், திரைஒலி போன்ற பத்திரிகைகளில் பணியாற்றியதோடு, கண்ணதாசன் போன்ற பத்திரிகைகளையும் நடத்தினர். கவிதைகள், கதைகள், கட்டுரைகள், நாடகங்களையும் எழுதி வந்தார்.

குறிப்பு

மாடர்ன் தியேட்டர்ஸ் கதை இலாகாவில் கண்ணதாசன் சேர்க்கப்பட்ட பிறகு கலைஞர் கருணாநிதியின் சந்திப்பும், நட்பும் கிடைத்தது. திராவிட இயக்கத்தில் சேர்ந்தார். பத்திரிகை பணிகளை விடுத்து திரைப்படப்பாடலாசிரியராக 'கள்வனின் காதலி' என்னும் படத்திற்கு பாடல் எழுதினார். அம்முதல் பாடலிற்குப் பிறகு கண்ணதாசன் 30 ஆண்டுகள் தமிழ்த் திரையுலகில் திரைப்படப் பாடலாசிரியராக கோலோச்சினார். கதை, வசனம், திரைப்படத் தயாரிப்பு எனப் பல துறைகளிலும் ஈடுபட்டார். 'சேரமான் காதலி' என்னும் வரலாற்று நாவலிற்கு சாகித்திய அகாடெமி விருது பெற்றவர். வனவாசம், மனவாசம், கண்ணதாசன் கவிதைத் தொகுதிகள், சுயசரிதம், கடல் கொண்ட தென்னாடு, மனம் போல் வாழ்வு, அர்த்தமுள்ள இந்துமதம், மாங்கனி, இயேசுகாவியம், சிவப்புக்கல் மூக்குத்தி, எனது வசந்த காலங்கள், குட்டிக் கதைகள் , ஊமையன் கோட்டை, கடைசிப்பக்கம், அவளுக்காக ஒரு பாடல் எனப் பல நூல்களை எழுதியுள்ளார். 'கண்ணே கலைமானே' என்னும் திரைப்படப்பாடல் கண்ணதாசன் 'மூன்றாம் பிறை' என்னும் படத்திற்காக எழுதிய கடைசி திரையிசைப்பாடல். பராசக்தி, ரத்தத்திலகம், கறுப்புப்பணம், சூரியகாந்தி ஆகிய திரைப்படங்களிலும் நடித்துள்ளார்.

தன்னைப்பற்றிய விமர்சனமாக அவர் குறிப்பிடுவது "பிர்லாவை போல சம்பாதித்து ஊதாரியைப் போலச் செலவழித்து பல நேரங்களில் பிச்சைக்காரன் போல ஏங்கி நிற்கும் வாழ்க்கை தான் என்னுடையது" என்று கூறியுள்ளார். தனக்குத் தானே 'இரங்கற்பா' பாடி வைத்துக் கொண்ட கவிஞன்.

"ஏற்றிய செந்தீயே நீ எரிவதிலும்
அவன் பாட்டை எழுந்து பாடு"

1981 அக்டோபர் 17ந் தேதி சிகாகோ நகரிலுள்ள மருத்துவமனையில் இறந்துப் போனார். காரைக்குடியில் கவியரசு கண்ணதாசன் மணிமண்டபம் அவர் நினைவு மண்டபமாக விளங்குகின்றது. "நான் நிரந்தரமானவன் அழிவதில்லை. எந்த நிலையிலும் எனக்கு மரணமில்லை", என்னும் கண்ணதாசனின் வரிகள்

மட்டும் நிரந்தரமானவை அல்ல, அவர் வரிகளின் வழி அவருமே என்றும் நிரந்தரமானவர்.



## 7.4 வாழ்த்துரைப்பாய் தைப்பாவாய்

தைப்பாவையே வருக, வருகவே! வாழ்த்தினைத் தந்திடுகவே. எங்கள் தமிழர்கள் கோட்டத்தில் (நாட்டில்) வீற்றிருப்பார். அவர்களின் உயிர் வளர வருவாய், வாழ்த்தினைத் தருவாய். எங்கள் தமிழரின் உள்ளத்திலிருக்கும் இனிமையின் பொருளானது மலருவதற்கு வருகவே! வாழ்த்து தருகவே! எங்கள் தமிழர்களின் கைகளில் கொண்டுள்ள வேலானது Nghh;fகளத்தில் வெங்களமாகிச் சிவக்க வருகவே! எங்களுடைய தமிழர் நாவினில் இளமைத் தமிழ் என்றும் செழித்து ஓங்கிடவே வருகவே! எங்கள் தமிழர் இல்லங்களில் விளங்கும் ஒளி சிறந்து ஒளி வீசிட முந்தும் தமிழ்ப்பாவாய் நீ என்றும் முன்னேற்றம் தான் தந்திடுவாய். தை வடிவத் திருப்பாவாய் வந்தருள்வாய், தந்தருள்வாய், பாவையே உன் கண்ணால் வாழ்த்தினையும் உரைப்பாயே!

“மெய்வாய் கண் மூக்கு
செவியாய் விளைந்திருக்கும்
ஐவாயின் உள்ளும்
அமரும் திருமகளே!
பொய்வாய் படைத்த
புலவோர்க்கும் நல்லவளே!

நெய் போன்று மணக்க மணக்க நிறைந்து ஆடும் பொன்மலரே, செம்மையாகப் பிறந்த சிறுநெல்லில் உறைந்திருக்கும் மணியே, மையினை வார்த்திருக்கும் கண்போல மயக்கம் தந்திடும் கரும்பழகே, நூலினை நெய்கின்ற நெசவாளர் தம் கையிலிருக்கும் நூலினை நிலத்தே விரித்தது போலக் கதிரொளியென கைகாட்டி வாராயோ தைப்பாவையே!

கண்ணிற்கு அழகு தரும் கரும்புகளும், வாழைப் பழங்களும், பூச்சரங்களும், குளிர்ச்சியும் அழகும் மிக்க மஞ்சள் சரங்களைச் கோர்த்து மங்கலமும் கண்கள் குளிரக் கண்டு, கைகளினால் சேர்த்து அணைத்து, விண்ணிற்கும் ஈடு சொல்லமுடியாத நீலநிறமிக்க விழியுடைய

குறிப்பு

பெண்கள் (சேயிழையாரும்) பண்கள் பாடிப் பாடி தங்கள் பசியினைத் தணிவிக்க வந்தவருக்கு உண்ணுங்கள், உண்ணுங்கள் என்று உணவினை ஊட்டி, ஊட்டி உறவினை உரைக்கும் முற்றத்துப் பெண்ணாய்ப் பிறந்து பெரும்பாவாய்! உன் சிறப்பினை என் உள் நாவில் ஊற்றி, ஊற்றி உள்ளத்திலே செரித்தே தைப்பாவாய்! எனத் தைப்பாவையின் சிறப்பினை உரைத்து அத்தகைய தைப்பாவையே நீ வருவாய்! தருவாய் அருளே! வாழ்த்தினை வழங்குவாய் என கவிஞர் கண்ணதாசன் வாழ்த்துரைப்பாய் தைப்பாவையே என்கிறார்.

## 7.5 எழுவாய் தைப்பாவாய்:

தைப்பாவாய் எழுவாயாக! காளையின் மணியோசையும், களத்துமேட்டிலே நெல்லினை அடிக்கும் நெல்லின் மணியோசையும், வாழை இலையின் ஓசையும், வஞ்சியராகிய பெண்களின் கைகளில் அணிந்திருக்கும் வளையோசையும், தாழம்பூவின் மடல்களின் ஓசையும், தயிரினைக் கடையும் தாய்மார்களின் மத்தின் ஓசையும், கோழிகளின் குரலோசையும், குழந்தைகளின் வாயிலிருந்து பெருகிவரும் தேனோசையும், கடல் அலைகளின் ஓசையும், சிறந்து ஓங்கிட மங்கலமாக வாழிய என்று பண்பாடிடும் மாயமொழியினைத் தைப்பாவையே கேட்கவில்லையோ! தோழியர்கள் யாவும் கைகளைத் தாங்கத் தூக்கிய பொன்னடி நோக பெண்களின் இல்லத்திலே தைப்பாவையே நீ எழுந்திராய்.

## 7.6 பேராளனும் தைப்பாவையும்:

'தைப்பாவை' என்னும் பெண் சென்று தலைவனோடு இணையும், பெண்ணினை எழுப்புதல் என்ற வகையில் அகத்துறை சார்ந்த பாடலாக கண்ணதாசன் கற்பனை செய்து பாடியுள்ளார். 'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்னும் பழமொழியின்படி, தைமகள் இணைந்தால் நீங்கிடும் துன்பம் என்ற வழி தைப்பாவையினைக் கவிஞர் தம் கற்பனையால் அழகுணர்ச்சி ஊட்டிப் பாடியுள்ளார்.

'தை' என்னும் பெண் அதற்கு முந்தைய மாதமாகிய மார்கழிக்குப் பெண்ணாகவும், மாசி மாதத்திற்குத் தாயாகவும் குறிப்பிட்டு

குறிப்பு

தைப்பெண்ணே நீ, உன் பேர் கொழிக்க வந்த பெட்டகமே என்று குறிப்பிட்டு, கற்பனைநயம் தோன்ற கவிதையாக்கியுள்ளார். ஊரெல்லாம் களித்திடும் நேரம், உத்தமனோடு இரவெல்லாம் சிறப்புடன் சேர்ந்தாள். சிறிய அன்னப் பறவையென கண் துயில்வாள். தனக்கென ஒரு குழவி(குழந்தை) இல்லாத தைப்பெண் உள்ளத்திலே குழந்தையென இருந்தாள். தன்னுடைய கருமையான குழலினைத் (கூந்தலினை) தடவி கை சேர்த்துக் கொண்டிருக்கும் பேராளனாகிய தலைவனை விட்டுப் பிரிந்தாலே அவள் எழுவாள். அவளின் மயக்கம் தீர, தைப்பாவையே அவளை எழுப்பிடுவாய்.

“ஆயன் கிளியானான்
ஆய்ச்சி கனியானாள்
மாயத்து இரவு இனிக்கும்
மல்லிகைக்கும் தென்றலுக்கும்
வாயில் திறந்தார் காண்
வாயோடு வாய் வைத்துத்
தோயும் கலவியதே
தொலையாக் கலவி எனச்
சாயும் பொற் கோபுரமாய்ச்
சாய்ந்தார்”

என்னும் தலைவன் தலைவியிடையே தைப்பாவையே நீ சென்று, உன்னுடன் நீ பெற்ற கதிரவனும் சென்று சேர்ந்து, அழகும் வளமும் நிறைய அவர் வீட்டில் கோயில் கொண்டு இருப்பீரோ என்று குடும்ப இல்லத்திலே தைப்பெண் சென்றால் மங்களம் கொழிக்கும், செழிக்கும் எனப் பாடியுள்ளார்.

முத்தினை விளைவித்தாள் அதனைத் தன் முகத்துள் மறைத்தாள் என்பதில் முத்தாக அவள் முகம் ஒளி வீச, வித்தினை விளைவித்து அதனைத் தன் விழியினில் வளர்த்தாள். நத்தையென ஊர்ந்திடுவாள். நாணத்திற்குத் தன் நாணக்கலையினை உரைப்பாள். கிளியாகிய (தத்தை) அவளிடம் தாவி நாட்டம் கொண்டான். நாள் முழுதும் பித்தம் பிடித்துத் திரிந்தாள். அவனுடைய அத்தைக்கு (பெண்ணின் தாய்) சொல்லி அவனோடு அவள் சேருவதற்கு இத்தை

குறிப்பு

மாதத்தில் ஒரு நாளினை தைப்பாவையே நீ எடுத்துக் கொடுப்பாயோ! சித்தத்திலே இருந்து சிரிப்பாயோ தைப்பாவையே! என மணநாள் பார்த்து தர தைப்பாவையிடம் வேண்டுகிறார் கவிஞர் கண்ணதாசன்.

தலைவன் இருந்தபொழுது மகிழ்ந்திருந்த இரவின் நினைவினை தலைவன் இல்லாதபொழுது துயில் மறந்து, தாளாத நெஞ்சமும், தாமும் துணையாக, தம் கையே தமக்குப் போர்வையாக மெய் போர்த்தி, தலையணையில் கண் மூடித் தோளிரண்டைத் தென்றல் தொட்டு விளையாட நாள் வருமோ, இரவுப் பொழுதும் சென்றிடாதோ, என்று ஏங்கி வாழ்வது போல் மாய்கின்றார். அப்பெண்களின் துயர் தீர வழி பிறக்கும் என்றவரைச் சூழ்ந்து அணைத்துப் பாடி தைப்பாவையே துயில் கொள்ளச் செய்யாயோ! என்று தலைவனைப் பிரிந்த தலைவியரின் துயரினை நீக்க தைப்பாவையே நீ வருக என்கின்றார் கவிஞர் கண்ணதாசன்.

தைப்பெண்ணே நீ தூது செல்வாயோ, தூது சென்று அவளிடம் கூறாயோ என்று, தலைவன் இல்லா நள்ளிரவின் துயரில் மயங்கிக்கிடக்கும் தலைவியிடம் தூது செல்லாயோ, எனத் தன் கற்பனையைச் சிறகினைப் பறக்க விட்டுள்ளார் கவிஞர்.

" காதலர் இல்வழி மாலை கொலைகளத்து
ஏதிலர் போல வரும்"

என்னும் குறள் வழி மாலைப்பொழுதின் வரவு கண்டு, மலர்கள் தம் அரும்பிலிருந்து மலராகின. குற்றமற்ற குணமுடைய தலைவனாகிய இளங்காளையின் காதல் வெறிப்போதில் வரைந்த பூப்போன்ற சித்திரங்கள், நாத வடிவாகி நலம்பாடி நள்ளிரவுப் பொழுதின் வேதமாய் பரவி பெண் அவளின் விழியினிலே களியினைக் கொண்டு வந்து சேர்க்க, மயங்கி இருந்தாள். வைகறைப் பொழுதில் தைப்பொழுதினை மறந்தாள். அவளிடம் தைப்பாவையே தூது சென்று கூறாயோ!

மையிட்ட கண்ணாள், மயக்கவரும் ஆயமகள் தன் கையிலே கலசம் தாங்கி,கறந்த பால் கறந்தபடி தைப்பொங்கல் பொங்குவதற்குத் தந்து உதவச் செல்கின்றாள். அவளின் கைக்கலசத்தைக் கண்டான், கனியாகிய அவளையும் கண்டான். முக்கலசத்தோடு முகக்கலசமும் பார்க்கின்றான். இக்கலசமாகிய பெண் எனக்குரியவள் என உரைத்திடும்

காலம் எக்காலம் என்கின்றான். இளையமகள் நாணம் கொண்டாள். தைப்பாவையே அவர்களுக்கு எக்காலம் என்றவருக்கு, இக்காலம் என எடுத்து இயம்பாயோ என தைத்திருநாள் மணமக்களுக்குரிய மாதமன்றோ என்னும் குறிப்பினைக் கவிஞர் கவிதையாக்கி உள்ளார்.

## 7.7 யார் வென்றார் அறிவாய் தைப்பாவாய்:

தலைவன் தலைவி ஆகிய இருவரின் காதலுணர்வை இப்பாடலில் கவிஞர் கவிதை ஓவியமாக்கி உள்ளார்.

“யான் நோக்குங்கால் நிலனோக்கும் நோக்காக்கால்
தான் நோக்கி மெல்ல நகும்”

என்னும் குறள் வழி

“வா என்றன இமைகள்
மண்ணோக்கின விழிகள்”

என வருணித்துள்ளார் கண்ணதாசன். ‘தா’ என்றன இதழ்கள், தழுவு என்றது மேனி,‘பார்’ என்றது பருவம், படை போலப் பற்றிக்கொண்டது நாணம். என்ன நேர்கின்றது என்று அறியாவண்ணம் ‘காதல்’ அவர்களிடையே நிலை கொண்டது. தேரிலே ஒரு தெய்வம், தெருவிலே உலா வருவது போல, வருகின்ற அவளைக் கண்டு தலைவன் மனதில் காமம் உழல்கின்றது. சிறப்பு மிக்க தலைவன் முன்னே சிலையென தலைவி வர அவரில் எவர் வென்றனர், தைப்பாவையே நீயே அறிவாய்.

## 7.8 காலம் வரல் கூறாய்:

தலைவன் வேலைக்கென ஓலை வர தலைவியைப் பிரிந்தனன். தலைவி பிரிவுத்துயரால் வருந்துகிறாள். தலைவியின் துயர் நீங்க, தலைவன் வரும் காலத்தினைக் கூறாயோ தைப்பாவாய் என கவிதை பிரிவுத்துயரினை வருணிக்கின்றது.

“வாளைத்தொடு காளை
வடிவைத்தொடு வேளை

வேலைக்கென ஓலை

விரைவுற்றது சென்றான்”

குறிப்பு

காலைப்பொழுதில் துயில் கொள்வாள், கங்குல்(இரவிலே) துயிலாது இருப்பாள், சோலையினைப் பகையெனக் கொள்வாள். தூண்டிலிலே அகப்பட்ட புழுவினைப் போல ஆவாள். நூலிடைக் கொண்டவள் நோயுற்றனள். வேலினைப் பழித்திடும் விழியினை உடையவள். அயர்வினைக் கொண்டாள், காணாயோ! ஆலமரத்தின் தளிரிடை வீற்றிருக்கும் (தத்தை) கிளி போன்றவள் அமைதி கண்டிட, இத்தை மாதக்காலம் வந்துவிட்டது என்று தைப்பாவையே நீ கனிவாய் உரைத்திடாயோ!

## 7.9 கையிற் சிறை வைத்தான்:

துள்ளித் திரிகின்ற சிட்டுக்குருவியைப் போன்ற பெண்ணவள் சோர்வுற்றது கண்டு வெள்ளியிலாகிய சிறிய தட்டிலே, விழியினைப் போன்ற வட்டிலிலே முல்லை பூப்போன்ற சிறு சோறும் அதனை நுகருகின்ற சுவைதரும் அள்ளி அள்ளித் தரும் நெய்யின் நறுமணமும், அதனோடு இணைந்திடும் அன்னமும் என உள்ளத்தோடு உடலும் ஒன்றப்பெறும் வேளையிலே, பிள்ளையின் அழுகுரலில் பேதுற்றனள். இரவில் கள்ளனாகிய அவள் கணவன் அவளைத் தன் கையிலே சிறை வைத்தான். தைப்பாவையே நீ அத்தலைவனைத் தள்ளிச் செல்வதற்குத் தளிரெனக் கூறாயோ!

“பெம்மான் குலமேனும்

பெருமான் குலமேனும்

அம்மான் மகனேனும்

அசையாதிவள் நெஞ்சம்

இம்மான் மகள் உள்ளம்

இள காதொரு நாளும்”

என தலைவியின் உறுதியான நிலைக் கண்டு பிணைமானாகிய தலைவன், அவளை வெல்வான். கண்மானாகிய தலைவி தலைவனின் அம்பிலே கைமான் என வீழ்ந்திடுவான். பொன்மானாகிய அவள் வீரம் பொய்மான் என ஓடும். விண்வரை உயர்ந்த மாடங்களில் நிலாவின்

ஒளியில் சுவையூறும் அம்மாடமும், அதனை அழகாயதை தைப்பாவையே நீ பாராய்.

காதற் கிளிகளாய் விளங்கும் அத்தானையும், அத்தை மகளையும் ஊரும், உலகமும் காண சேராயோ எனக் கவிஞர் தைப்பாவையிடம், அவர்களின் காதலை உணர்த்திக் கேட்கின்றார். கூர்மையான மூக்கில் முத்திட்டு குகுவென்னும் புறாவினைப் போல நேர்கொண்ட நோக்கினை நோக்கி நிறைக்கின்ற வாய்த்தேனின் சாறினைப் பருகி ஊறுகின்ற காமத்தில் உயிரோடு உயிர் குவித்து அத்தான் சேர, அத்தைமகள் சிலையானாள். பேருலகத்தைக் காணும் பெருங்காதற் கிளிகளை நீரினை ஊற்றி அவர்களை நன்நிலைக்கு மனதினைத் திருப்பி ஊரும் உலகமும் காணும்படியாக திருமணம் செய்து வைத்திட தைப்பாவையே நீ உதவாயோ!

## குறிப்பு

மாடத்திலே நிலவினுடைய ஒளி பரவ கண்ணிலே மைவார்த்த விழியானது ஒளிர கூடத்திலே நடனமிடும் குத்து விளக்கின் ஒளி மயங்க, பாடத்திலே ஆழ்ந்திருக்கும் பருவத்துப் பூங்கொடியாள், ஆடைக்குள் ஆடிவரும் அழகு வலை மேனியினை வாடைக்காற்றிற்கு விற்றுவிட்டாளே! வளருகின்ற காமத் தீக்குழம்பு, ஓடைக்குள் உயிர்நீந்தி உறக்கத்தைக் கெடுத்தாளே, கோடையின் வெம்மையைத் தவிர்ப்பாயோ, குளிர்மேனியினைக் காப்பாயோ, தைப்பாவையே வாடல் நோயினைத் தவிர்க்க வருவாயோ, எனக் கவிஞர் கண்ணதாசன் தலைவன், தலைவி மீது கொண்ட மோக உணர்ச்சியைச் சித்தரித்து உள்ளார்.

நேற்று சிறுமியாய் இருந்தாள், இரவுப் பொழுதிலே பெரியவளானாள். இன்றைக்கே காதல் ஏற்பட எப்படித் தான் என்னை ஈர்த்தாளோ! கொத்தான கூந்தலை உடையவள். தனக்கொரு துணையை எதிர்பார்த்தாளோ! காதல் முற்றி முனை வெடிக்க நின்றாளோ! சிற்றாடையானது கை நழுவத் தேனாடை போர்த்தாளோ? தன்னையும் காதலிடம் விற்றாளோ! வேல் போன்ற கண்களை உடையவள் என் முன் தோன்ற தைப்பாவையே பொன்னால் செய்த தாலியினைக் கட்டி, பொறுமையினைத் தருவாயே.

குறிப்பு

தலைவி தலைவனுடன் கலந்த நிலையை எண்ணி வருந்தும் தலைவியின் துயர் நீக்க தைப்பாவையே நீயும் அவளைத் தழுவாயோ, நிறைந்த சுகத்தினைத் தருவாயோ எனக் கவிஞர் தலைவியின் பிரிவுத்துயரினை வருணித்துள்ளார்.

"நீளத் தழுவும்
நெய்வாசப் பூங்குழலை
நீயும் தழுவாயோ
நிறைந்த சுகத் தைப்பாவாய்"

எல்லாம் அவன் வடிவமாகத் தோன்ற அவள் கையில் எதுவுமில்லை. சிற்றிடை முழுவதும் பூத்த சிறு வியர்வையிலும் நெல்போல் அவன் முகமே நிறைந்திருக்கக் காணுகின்றாள். வில்லினால் பயன் உளதோ, அதிலிருந்து விடுக்கப்பெறும் அம்புகள் இல்லையென்றால், சுவையறிவார் இன்றிச் சொல்லினால் பயன் உளதோ? அகத்துணைவன் இல்லாது இல்லவள் கல்லாகினாள். இரவும், பகலும் மெத்தையிட்டாள். எனினும் தைப்பாவையே நீ அவளிடம் சென்று அவளின் துயரினைத் தீர்ப்பாயோ! தேற்றாயோ!

"அறிதோறும் அறிதோறும் அறியாமை - கண்டற்றால்
செறிதோறும் காமம் சேயிழையார் மாட்டு"

என்னும் குறள் வழி, காமத்தின் நிலையினைக் கண்ணதாசன் தலைவன் தலைவியின் நிலையில் வருணித்துள்ளார்.

"துலக்கத் துலக்க வரும்
தூயநிறம் தோன்றி வரும்
சலிக்க சலிக்க வரும்
தரமுளவே தனித்துயரும்
சிலிர்க்கச் சிலிர்க்க வரும்
செம்மாந்த மார்வனொடும்
கலக்கக் கலக்க வரும்
கடலைப் போல் வெள்ளம் வரும்"

என்பதோடு அலுத்துப் படுக்க வரும் பொழுதும், அந்த ஆசை ஓடிவரும் விளக்க, விளக்க நிதம் விளக்கத்தினையே கேட்டு வரும். சிலைக்குள் சிலையென தைப்பாவையே நீ சேராயோ! விளக்கம் நீ தாராயோ!

**குறிப்பு**

## 7.10 தென்மதுரை மண்ணில்:

தைப்பாவையே தென்மதுரை மண்ணில் திரண்டு எழுவாய்! அழகிய பொன்னும் மணியுமாகிய மாடத்திலே எங்கள் கோமான் (பாண்டிய மன்னன்) அரசு வீற்றிருந்தான். தன் பொன்னாலாகிய பதம் பாடி அழகிய கண்ணையுடையாள் துணையாக இருந்தாள். தேவர்கள் தொழுது வணங்கும் மகிழ்ச்சியில் பாண்டியமன்னனின் மதுரையிலே செம்பொன் போன்ற முகத்தழகி, சிறப்பு திகழும் இளந்தேவி, கொம்பிலே பூத்த கொடிமலர் போலக் குடி புகுந்தாள். அம்பு போன்ற கண்ணினை உடையவள். அருள் தரும் மீனாட்சி ஆளுகின்ற தென் மதுரை மண்ணில் தைப்பாவையே திரண்டு எழுவாய்! ஊன் அருளினைத் தருவாய் எனப் பாண்டிய மன்னனின் மதுரை மாநகரச் சிறப்பிற்கு மேலும் சிறப்பு சேர்க்க தை மகளே நீ வருவாய், தருவாய் என்கின்றார் கவிஞர் கண்ணதாசன்.

## 7.11 பாடி வரும் காவேரி:

பட்டினைப் போல நெல் விளைந்திடும், பாடி வரும் காவேரி ஆறும் சிட்டுப் போன்ற மாதர்களையும், சேர்த்து அணைத்து கைகலக்கும்.

“கொட்டும் முரசங்கள்
கோபுரங்கள், ஆலயங்கள்
எட்டெட்டுத் திக்கும்
இசை பாடும் சோழகுலம்”

என்னும் சிறப்போடு கட்டிக் கிடந்த நிலமானது கால்பாவி நடந்த நிலமானது, கட்டான இளம் கன்னிப் பெண்களும் நெற்களத்திற்குச் சென்று உயர்வித்து உயர்ந்த நிலம்.

பட்டாளத் தஞ்சையிலும் தைப்பாவையே நீ பாடாயோ எனக் கவிஞர் கண்ணதாசன் சோழநாட்டின் வளத்தை வருணித்து உள்ளார்.

குறிப்பு

## 7.12 தழைக்கும் கோன் வஞ்சி:

சேர மன்னன் பிறர் காலில் விழுந்து தொழுது அறியான். தன்னை வணங்குகின்றவர்களைப் பிறருக்கு உரையான். செருக்களத்து வாளில் கை பதிப்பான். கை வாளினைப் போர்க்களத்தில் நழுவவிடான். சொல்லின் பொருள் தோன்ற, பொருளின் பொருள் தோன்ற கவிதைகள் பல இயற்றுவான். தன்னைக் கவி பாட பொருளினைப் பறியான். சொல்லின் பொருளின், பொருளின் பொருளினைப் பறியான். மருளுகின்ற மான் போன்றவளை மனத்திலே அணைத்திடுவான். மனமாகிய மானினை மருளவிடான். இருளாகிய வானில் நிலவினைப் போன்றவன். நிலவின் ஒளியினை இருளாக்கிடான்.

"நிறைமாதர் நெறி நிறையும்
நிலம் காத்தான் முறை வகுத்தான்
தரும் சேரன், பெற்றறியான்
தழைக்கும் கோன் வஞ்சியிலும்
நிறையாயோ, உலவாயோ
நிலவாயோ தைப்பாவாய்"

எனக் கவிஞர் கண்ணதாசன் சேரமன்னனின் சிறப்புகளைக் கூறி அத்தகைய சேரமன்னனின் நாட்டிற்குச் சென்று நிறையாயோ, உலவாயோ, நிலவாயோ, தைப்பாவையே என்கின்றார்.

## 7.13 வாயில் திறந்திட்டேன்:

தைப்பாவையே! நான் வாயில் திறந்து வைத்திருக்கின்றேன். வந்து அருளினை வழியச் செய்வாய் எனக் கவிஞர் கண்ணதாசன் தைப்பாவையிடம் முறையிடுகின்றார். தாயும் கடன்பட்டாள், தந்தையும் உடன்பட்டான். நானும் அவர்களுக்குள் உயிர் பெற்றேன். உடம்பென்னும் வடிவினைப் பெற்றேன், குழந்தையாகும் நிலை பெற்றேன், தினந்தினம் வளர்ந்தும் வந்தேன். கலைகள் பலவற்றைக் கற்றேன். ஆசை என்னும் வலைக்குள் அகப்பட்டேன். இல்லறத்தைப் பெற்றேன்,

சுழலும் மயக்கத்தினைப் பெற்றேன். நேயர்கள் பலரைப் பெற்றேன். நினைவுகளையெல்லாம் அவர்களுக்கு அளித்தேன்.

குறிப்பு

“யாவும் செழிப்புற்றே
அருள் வழியச் செய்வாயால்
வாயில் திறந்திட்டேன்
வந்தருள் செய் தைப்பாவாய்”

எனக் கவிஞர் முறையிட்டுள்ளார்.

## 7.14 விரைந்தெழுவாய் தைப்பாவாய்:

தைப்பாவாய்! விரைந்து எழுந்து வருவாய்! அன்னமே நீ கேட்பாயாக! ஞானம் என்னும் அருளாகிய வானத்தினை முன்னதாக நிறுத்தி, முன்னங்கால் சேர்த்து முழங்காலிட்டு என் கைகளைக் கூப்பித் தலை சாய்த்து வணங்கினேன். என் தலைவனாகியஈசன் (சிவபெருமான்) மெய்ஞ்ஞானத்தை எனக்கு அளித்தான். இன்னமும் கேட்பாயாக என்றான். இனிய அமுதே, நான் எதனைக் கேட்பேன். பொன்னிறமான செழுமையான கதிரவன் பூக்கின்ற வானத்திலிருந்து அன்னம் போன்ற கைகளைக் காட்டி தரும் அருள் போதும் என்று உரைத்தேன். ஒளி வீசும் கீழ்வானிலே தைப்பாவையே, விரைந்து நீ எழுவாய்!

## 7.15 அருள் வடிவே தைப்பாவாய்:

பூப்போன்ற கால்களை உடைய மணிப்புறாவும் நீரிலே விளையாடும் கிளியினமும், நற்காலம் (ஆங்காலம்) கூறி அகம் பாடும் குயிலினமும் எனப் பறவை இனங்களை, துக்கம் தாங்காத நெஞ்சினிலே தனை மறந்து வாங்காமல் வாங்கி வளர்த்த சுகம் நானறியேன். இவ்வுலகில் இசையினை அறியாத மானிடரிடம் அறம், பொருள், இன்பம், வீடென நான்காய் வந்தேன். நல்லவருக்கும் இவ்வுலகம் நல்லதாய் இல்லை.

“பாங்காய பூந்தமிழின்
பைம் பொழிலில் வாழுகின்றேன்

தூங்காது காக்க எனைத்

தொடர்ந்தெழுவாய் தைப்பாவாய்"

குறிப்பு

குற்றம் என்பது தன் சொத்தாக, குணம் என்பது கடையில் கிடைத்திடும் பொருளாக (சரக்காக), சுற்றமும் தன் பகையாக துவண்டு விழுகின்ற மானிடரை, கற்றாலும் கல்வி அறிவு பெற்றாரைப் போலக் கருதாத நெஞ்சினரைப் பற்றும் தன் பற்றாலே பம்பரம் போல் ஆடுகிறேன். முற்றாத நெஞ்சத்தினைக் காண்பாய், பெற்றார்க்குப் பிள்ளை, பிறந்தவர்களுக்குத் தந்தையென, வற்றாமல் நீளும் உயிர் வாழ்க்கைக்கு ஓர் வழி தருவாய், இல்லாதவரும் போற்றும் அருள் வடிவாய் விளங்கும் தைப்பாவையே.

சென்றவையெல்லாம் சென்றொழியப் புதைந்தன எல்லாம் புதையத் தீயவை எல்லாம் சேர்ந்து ஒழியச் சிறுமையெல்லாம் அழிய, மாயமாகிய மனத்தின் உள்ளே உலவும் மயக்கமனைத்தும் தீர

"ஆய பயன் கை மலர

அளித்த பலன் மீளத்

தூயவர்தம் இல்லமிசைச்

சுற்றமெலாம் கூட

வாயிதழில் தேன் வடியும்

மங்கையர் பண்பாட

மேய விலங் கூர்ந்து செலும்

வெள்ளெ னும்பாற் பொழுதில்

நீழமுலாக் கொண்டெழுவாய்

நிறைந்தெழுவாய் தைப்பாவாய்"

எனக் கவிஞர் கண்ணதாசன் தைப்பாவையே நீ நிறைவாய் எழுவாயாக எனப் பாடியுள்ளார்.

## 7.16 பொங்கற்பால் பொங்கிப் பூவுதிர்ப்பாய் தைப்பாவாய்:

கவிஞர் கண்ணதாசன் தைப்பாவையே நீ பொங்கல் பால் பொங்கி வருவது போல் பூவினை உதிர்ப்பாய் எனத் தமிழர் சமுதாயம் வாழ்ந்திட வாழ்த்து நல்க வேண்டுகிறார்.

"எங்கள் சமுதாயம்

ஏழாயிர மாண்டு

குறிப்பு

திங்கள் போல் வாழ்ந்து

செங்கதிர் போல் ஒளிவீசும்"

குறையாத போர்க்களத்தும் போர்களத்தில் அளவிடமுடியாத வீரர்படை, இரவினை அகமென்றும் புகழ் என்னும் ஏட்டில் குடியேறித் தங்கி நிலைத்துத் தழைத்திருக்கும் காட்சியினைக் கண்காண வந்த கலைவடிவே, முத்தே(நித்திலமே) பொங்கற்பால் போல் பொங்கிப் பூவினை உதிர்ப்பாய் தைப்பாவையே!

பொங்கும்பால் பொங்கும், புகழ் பொங்கும்! மங்களமே எங்கும் தங்கிட காண்பாய். தகுதியுடைய தலைவரெல்லாம் சிங்கங்காண் சிங்கம். தேவியர் அனைவரும் தங்கம். எங்கும் காண்கிறோம் எங்கள் தமிழரின் மாட்சியினை, இங்கும் எங்கும் எம்முடைய அரசாட்சி, இறையாட்சி

வாழ்க எனப் பொங்கற் பூவினைத் தூவிப் புத்தாடைத் தொட்டிலுக்குள் தூய்மையாகிய தேரினை ஓட்டும் தூயமலர் போன்ற மேனியரிடம் தங்கித் தாலாட்டுவாய், தளிர்க் கொடியாக விளங்கும் தைப்பாவையே!

தானே தலைமை கொண்டு தனக்குள்ளே தான் நிறைந்த மானே! மணியே! மஞ்சளே! குங்குமமே! தேனே! திருவே! திருவுடையார் கைப்பொருளே! மீன்கள் ஊறும் காவிரியே! வெண்மையான அரிசியோடு பாலும் சேர்ந்து பாற்குழம்பே! வானிலே ஏறி மேகமானது விழ, மண்ணிலே உழு தொழில் செய்கின்ற உழவரின் பொன்னுதிர ஊனாகி வந்து எம் உயிர் காக்கும் மெய்வடிவே! பூப்போன்ற நேர்விழியினை உடைய பெண்களும், பூத்து வருகின்ற குலத்தளிரும், வான்வரை வாழ்வு வாழ வாழ்ந்தாயோ தைப்பாவாய்!

" பூநேர் விழியாரும்

பூத்துவரும் குலத்தளிரும்

வான் வாழ்வு வாழ

வாழ்த்தாயோ தைப்பாவாய்"

எனக் கவிஞர் கண்ணதாசன் தைப்பாவையின் சிறப்பினைக் கூறி வாழ்த்தினை வேண்டுகிறார்.

## 7.17 தொகுப்புரை:

குறிப்பு

கவியரசு கண்ணதாசன் இயற்றிய ‘தைப்பாவை’ மரபுக்கவிதை. கோவை, உலா, தூது, சதகம், பள்ளு, குறவஞ்சி, பாவை, ஊசல் எனச் சிற்றிலக்கியத் துறைகளைக் கொண்டு உருவாக்கப் பெற்ற கவிதைகள். தைமகளைப் போற்றிப் பாடியுள்ளார். எழுவாய் தைப்பாவாய், பேராளனும் தைப்பாவையும், யார் வென்றார் அறிவாய் தைப்பாவாய், காலம் வரல் கூறாய், கையிற் சிறை வைத்தான், தென்மதுரை மண்ணில், பாடி வரும் காவேரி, தழைக்கும் கோன் வஞ்சி, வாயில் திறந்திட்டேன். விரைந்தெழுவாய் தைப்பாவாய், அருள் வடிவே தைப்பாவாய், பொங்கற்பால் பொங்கிப் பூவுதிர்ப்பாய் தைப்பாவாய், போன்ற தலைப்புகளில் தைமகளை வரவேற்கவும், தூது சொல்லவும், துயில் எழுப்பவும் பாடியுள்ளார் போன்ற செய்திகளையும் கண்ணதாசனின் எதுகை மோனை நயங்களையும் கவிநயத்தின் நுட்பத்தினையும் சந்தநயம் சிறக்க விளங்குவதை இக்கூறு எடுத்துரைத்துள்ளது.

## 7.18 மாதிரி வினாக்கள் (2 மதிப்பெண்கள்)

1. தைப்பாவை, இயேசுகாவியம், அர்த்தமுள்ள இந்துமதம் போன்ற நூல்களை இயற்றியவர் யார்?

    கவியரசு கண்ணதாசன்

2. பொங்கல் தினத்தினைப் பெண்ணாக உருவகித்து கண்ணதாசன் இயற்றிய கவிதை நூல் எது?

    தைப்பாவை.

3. ‘கவிஞன் யானோர் காலக்கணிதம், கருப்பொருளை உருப்பட வைப்பேன்’ என்று கூறியது யார்?

    கண்ணதாசன்.

4. தைப்பாவையே எம்மூன்று நாடுகளையும் சிறப்பிக்க நீ வருவாய் எனக் கவிஞர் வேண்டுகிறார்?

    பாண்டி, சோழ, சேரநாடுகளைச் சிறப்பிக்க தைப்பாவையே நீ வருவாய், எனக் கவிஞர் வேண்டுகிறார்

5. பொய்வாய் படைத்த புலவோருக்கும் நல்லவளாக விளங்குவது யார்?

    பொய்வாய் படைத்த புலவோருக்கும் நல்லவளாக விளங்குபவள் தைப்பாவாய்.

## 7.19 பயிற்சி வினாக்கள் (5மதிப்பெண்கள், 10மதிப்பெண்கள்)

குறிப்பு

1. கவிஞர் கண்ணதாசனின் சிறப்புகள் யாவை? (5 மதிப்பெண்கள்)
2. 'தைப்பாவாய்'– பெயர்காரணம் விளக்குக. (5 மதிப்பெண்கள்)
3. 'தைப்பாவாய்' நூலில் 'பேராளனும் தைப்பாவையும்' என்னும் பகுதியை விளக்குக. (5 மதிப்பெண்கள்)
4. மும்மன்னர்களைக் கண்ணதாசன் தைப்பாவை வழி எங்ஙனம் புகழ்ந்து பாடியுள்ளார்? (5 மதிப்பெண்கள்)
5. சிற்றிலக்கியக் கூறுகளை உள்ளடக்கிய மரபுக்கவிதை தைப்பாவை – ஆய்ந்திடுக (10 மதிப்பெண்கள்)
6. தைப்பாவையின் பொருள் நயத்தினையும் கவி நயத்தினையும் விவரிக்க. (10 மதிப்பெண்கள்)
7. கவிஞர் கண்ணதாசன் ' தைப்பாவையை' வரவேற்க எங்ஙனம் வருணித்துள்ளார்? (10 மதிப்பெண்கள்)

## 7.20 மேலும் படித்தறிக:

கண்ணதாசன் கவிதைகள்

தமிழ் இணையப்பல்கலைக்கழக நூலகம்

# கூறு 8

# சிற்பி பாலசுப்பிரமணியன்

கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை

8.1 - அறிமுகம்

8.2 - நோக்கம்

8.3 - சிற்பி பாலசுப்பிரமணியன்

8.4 - கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை

8.5 - தொகுப்புரை

8.6 - மாதிரி வினாக்கள்

8.7 - பயிற்சி வினாக்கள்

## 8.1 அறிமுகம்

குறிப்பு

சிற்பி பாலசுப்பிரமணியன் கவிஞர், தமிழ்ப் பேராசிரியர், கல்வி நிறுவன ஆலோசகர், படைப்பாளி, மொழிபெயர்ப்பாளர் என்னும் பன்முகத் தன்மையைப் பெற்றவர். 'வானம்பாடி' என்னும் இதழின் மூலம் தமிழ்க் கவிதை உலகிற்கு அறிமுகமானவர். படைப்பு வெளியில் பயணித்து மைல்கல்லினை நாட்டிய பெருமைக்குரியவர். அவர் பல கவிதை கட்டுரை, வாழ்க்கை வரலாறு, மொழிபெயர்ப்பு நூல்களை எழுதியதோடு மாணவர்களுக்கும் வழிகாட்டியாக இருந்துள்ளார். தமிழ்க் கவிதை உலகில் 'வானம்பாடி' என்னும் இதழ் புதுக்கவிதைக்காக தோன்றிய இதழ். மரபினை உடைத்து புதுப்பாதையில் கவிதை பயணிக்க மு.மேத்தா, மீரா, சிற்பி, அப்துல்ரகுமான், புவியரசு, நா.காமராசன் போன்ற பல கவிஞர்களைக் குறிப்பிடலாம். அவ்வகையில் சிற்பி பாலசுப்பிரமணியம் இயற்றிய 'கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை' என்னும் நூலில் அமைந்த அத்தலைப்புக் கவிதை குறித்து இக்கூறு எடுத்துரைக்கின்றது.

## 8.3 சிற்பி பாலசுப்பிரமணியன்

புதுக்கவிதையில் 'வானம்பாடி' இயக்கத்தில் முக்கிய கவிஞர். பல சாதனைகளையும் தமிழ்ப் பேராசிரியராகவும், பணியாற்றி நிகழ்த்தியுள்ளது சிறப்பு – நிலவுப்பூ, சிரித்த முத்துக்கள், ஒளிப்பறவை, சர்ப்ப யாகம், புன்னகை பூக்கும் பூனைகள், சூரிய நிழல், இறகு, சிற்பியின் கவிதை வானம், ஒரு கிராமத்து நதி, பூஜ்யங்களின் சங்கிலி, பெருமூச்சுகளின் பள்ளத்தாக்கு, பாரதி – கைதி எண்-253, மூடுபனி, சிற்பி – கவிதைப் பயணங்கள் (2005), தேவயானி, மகாத்மா, நீலக்குருவி, கவிதை வானம், ஆதிரை (கவிதை நாடகம்) போன்றன தவிர பல உரைநடை நூல்களையும் (13), வாழ்க்கை வரலாற்று நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள், அக்கினிச் சாட்சி என்னும் நாவலையும் இயற்றியுள்ளார். சாகித்திய அகாதெமியின் ' தமிழ் இலக்கிய வரலாறு' வெளியீடு ஒரு மாறுபட்ட இலக்கிய வரலாறாக எழுதப்பெற்றுள்ளது. வானம்பாடி, அன்னம் விடு தூது, கவிக்கோ,

கணையாழி போன்ற பத்திரிகையில் ஆசிரியர் குழுவிலும், இதழினையும் நடத்தியுள்ளார். சிற்பி குறித்த ஆய்வுகளும் நூல்களும் வெளிவந்துள்ளன.



## 8.4 கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை

"வானத்து நீலத்தை
வைரக் கீறலெனக் கிழித்தபடி
அத்திமர அடர்த்திக்குள் பறந்த
கம்பிக்கால் மறைய அமர்ந்து கொண்டது
அந்தப் பறவை
இரத்தத் துளிக் கண்கள்
பனிப்பொட்டுக்கள்
படர்ந்த பழுப்புத்தலை
ரோஜாநிறத்
கத்திரிகை அலகு
தங்கச் சங்கிலியென
ரேகைகள் விட்டுவிட்டு
மின்னும் கழுத்து
மஞ்சள் பூசிக் குளித்த
அடிவயிறு
விசிறி வாழைக்கன்றின்
இலையென அசையும்
பச்சைப் பசேலான வால்
இத்தனைக்கும் மேலே
நம் கண்களில் அதிசயம் செருக
பளிங்குத் தகடுகளாய்
இரண்டு கண்ணாடிச் சிறகுகள்
தும்பிச் சிறகைப் பெரிதாக்கிக்
காஞ்சிப் பட்டாய்த் தகதகக்கும்
கண்ணாடிச் சிறகுகள்.
மறுநாள்
புன்னை மரத்தடியில்

கட்டெறும்புகளின் முற்றுகையில்
கண்ணாடிப் பறவை
உயிரற்ற....
ஒளியூடுருவும் சிறகில்
அம்பூடுருவிய தெனக்
குருதிக் தீற்றல்
ஆந்தையைத் தாக்கும்
காக்கைகளெனப்
பறவை இனப்பகை
பழி தீர்த்துக் கொண்டதோ?

இன்னுமொரு கிரவுஞ்ச வதம்
இழைத்ததோ மனித வெறி?

எல்லையற்ற பேரழகுக்கும்
இறுதி உண்டு உண்டென்னும்
இயற்கை விதி
வென்றதோ?
காடு தற்காலிகமாக
மௌனம் பாலித்தது.

வானத்தினுடைய நீலநிறத்தை வைரத்தின் கீறலாகக் கிழித்தபடி, அத்திமரத்தின் அடர்த்திக்குள் பறந்து, தன்னுடைய கம்பி போன்ற கால் மறைய அமர்ந்து கொண்டது அந்தப்பறவை. அந்தப் பறவையின் கண்கள் இரத்தத்துளியான கண்கள். பனி போன்ற பொட்டுக்கள், படர்ந்த பழுப்புத் தலை, ரோஜா நிறக் கத்திரிகை அலகு, தங்கச் சங்கிலியென ரேகைகள் விட்டுவிட்டு மின்னும் கழுத்து, மஞ்சள் பூசிக் குளித்த அடிவயிறு, விசிறி வாழைக் கன்றின் இலையென அசையும் பச்சைப் பசேலான வால் என்னும் தோற்றம் கொண்டது. அதற்கு அழகு சேர்ப்பது போல நம்முடைய கண்களுக்கு அதிசயம் செருக, பளிங்குத் தகடுகளாய் இரண்டு கண்ணாடிச் சிறகுகள். தும்பி போன்ற சிறகைப் பெரிதாக்கிக் காஞ்சிப்பட்டாய்த் தகதகக்கும் கண்ணாடிச் சிறகுகள் உள்ள பறவை. அந்தப் பறவையைப் பார்ப்பதற்கு பறவைப் பித்தர்கள் வனத்தில் குவிந்தனர். பறவை அழகு

குறிப்பு

காட்டிற்று. வேம்பிலிருந்து வேங்கைக்கும், ஆலமரத்திலிருந்து அரசுக்கும் கண்ணாடித் தோரணம் வரைந்து அழகு காட்டிற்று.

தியோடர் பாஸ்கரன் ‘அடடே’ என்றார். காடு ஆயிரம் கண்டது முகமது அலி ‘வியப்பு’,‘வியப்பு’ என்றார். ஓசை காளிதாஸ் ‘ஆகா’ என்றார். வண்ணம் புதிது, வனப்புப் புதிது, கண்ணைப் பறித்தன கண்ணாடிச் சிறகுகள்.

மறுநாள் புன்னை மரத்தினடியில் கட்டெறும்புகளின் முற்றுகையில் கண்ணாடிப்பறவை உயிரற்றுக் கிடந்தது. ஒளி ஊடுருவும் சிறகில் அம்பு ஊடுருவி சென்றதெனக் குருதியின் தீற்றல் அப்பறவையின் சிறகில் இருந்தது. ஆந்தையைத் தாக்கும் காக்கைகளெனப் பறவை தன் இனத்தின் பகையைப் பழி தீர்த்துக் கொண்டதோ? இன்னுமொரு கிரவுஞ்ச வதம் இழைத்ததோ மனிதவெறி? எல்லையற்ற பேரழகுக்கும் இறுதி உண்டு. உண்டென்னும் இயற்கை விதி வென்றதோ? காடு தற்காலிகமான மௌனம் காத்தது.

## 8.5 – தொகுப்புரை

கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியன் இயற்றிய ‘கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை’ என்னும் கவிதை கண்ணாடி சிறகுகளுள்ள ஒரு பறவை காட்டிற்கு அழகு சேர்த்த நிலையில், அப்பறவை எதன் தாக்குதலாலோ இறந்துவிட்டது என்றால் காட்டின் நிலை நிசப்தமாகி விடுவதை எடுத்துக் காட்டியுள்ளது. காட்டிற்கு பறவை அழகு. புறவைக்கு அதன் சிறகுகள் அழகு. புறவைகள் இல்லாத காடு மனிதனில்லாத வீடு போன்றது தான். சுற்றுச்சூழலை பாதுகாக்கும் காடுகளும், காடுகளில் வாழும் உயிரினங்களும் பூமிக்கு பாதுகாவலன் என்பதை உணரக்கூடிய நிலையிலேயே இக்கவிதையைச் சிற்பி கற்பனையும், உண்மையும் கலந்து இயற்றியுள்ளார் போன்ற கருத்துகளை இக்கூறு எடுத்துரைத்து உள்ளது.

குறிப்பு

## 8.6 மாதிரி வினாக்கள் (2 மதிப்பெண்கள்)

1. 'வானம்பாடி' இதழின் மூலம் கவிஞராகிய தமிழ்ப்பேராசிரியர் யார்?

   சிற்பி பாலசுப்பிரமணியன்.

2. 'கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை' என்னும் கவிதையை இயற்றியவர் யார்?

   'கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை'என்னும் கவிதையை இயற்றியவர் சிற்பி பாலசுப்பிரமணியன்.

3. 'சாகித்திய அகாடெமி விருது' பெற்ற கவிதை நூல் எது?

   ஒரு கிராமத்து நதி.

4. காடுகளின் காவலனாக விளங்குவது எது?

   பறவைகள்.

5. மனிதனின் காவலாக விளங்குவது எது?

   காடுகள்.

## 8.7 பயிற்சி வினாக்கள் (5 மதிப்பெண்கள், 10மதிப்பெண்கள்)

1. கவிஞர் சிற்பியின் 'கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை'என்னும் கவிதையினை எழுதுக. (5 மதிப்பெண்கள்)
2. கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியத்தின் சிறப்புகளைச் குறிப்பிடுக. (5மதிப்பெண்கள்)
3. புதுக்கவிதையில் வானம்பாடி இதழின் பங்களிப்பினையும், கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை என்னும் கவிதையின் கவிநயத்தினை அதன் பொருள் வழிப் புலப்படுத்தி விளக்குக. (10 மதிப்பெண்கள்)

## 8.8 மேலும் படித்தறிக:

1. 'கவிதையியல்'
   - க..பூரணசந்திரன்
   உலக தமிழராய்ச்சி நிறுவனம்இ சென்னை.
2. கண்ணாடிச் சிறகுள்ள ஒரு பறவை
   சிற்பி
   கவிதா பப்ளிகேஷன்
   தபால் பெட்டி எண்: 6123
   தி.நகர், சென்னை – 600017
   தொ.பே.எண் - 24322177

# கூறு – 9
# அப்துல்ரகுமான்
# பால்வீதி

குறிப்பு

**குறிப்பு**

## 9.1 அறிமுகம்

அப்துல் ரகுமான் புதுக்கவிதை உலகில் வானம்பாடி இயக்கத்தின் வழி வந்தவர். தனக்கென தனியிடத்தைக் கொண்ட கவிஞர் . பல கவிதை நூல்களை அழகியலோடும் தத்துவநிலையிலும் பாடியிருப்பவர். கவியரங்கக்கவிதைகள் குறிப்பிடத்தக்கவை. அப்துல் ரகுமான் இயற்றிய பால்வீதி கவிதைநூலில் உள்ள கவிதைகள் குறித்து இக்கூறு விவரிக்கின்றது .

## 9.2 நோக்கம்

1.கவிஞர் பற்றி அறிதல்

2. புதுக்கவிதைக் கூறுகள் குறித்து தெரிதல் .

3. கவிதையுணர்ச்சி பெறுதல் .

## 9.3 அப்துல்ரகுமான்

அப்துல் ரகுமான் ‘கவிக்கோ’ என்னும் சிறப்பினைப் பெற்றவர் புதுக்கவிதைத் துறையில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டு தனக்கென தனியிடத்தினைப் பெற்றவர் . தமிழ்ப்பேராசிரியராகவும் பணியாற்றி கவியரங்கக் கவிதையின் மூலமாக தனக்கொரு தனிப் பாணியினை உருவாக்கியவர் . படிமம் குறியீடு இருண்மை என்னும் புதுக்கவிதைக்கூறுகளை அழகாகவும் அதிகமாகவும் பயன்படுத்திய கவிஞர் . பால்வீதீ காக்கைச்சோறு நேயர் விருப்பம் கரைகளே நதிகளாவதில்லை முட்டைவாசிகள் போன்ற பல நூல்களை இயற்றியவர் .ஆலாபனை கவிதை நூலிற்கு சாகித்திய அகாதெமி விருது பெற்றவர் . ஹைக்கூ கஜல் போன்ற புதுமை வடிவத்ததைத் தந்தவர்.

### 9.3.1 என் தேவனே எனக்குக் கைகொடுத்தீர்:

என் ஆறாவது விரல் வழியே
சிலுவையிலிருந்து
வடிகிறது ரத்தம்
ஆம்
என் ‘மாம்சம்’
வார்த்தை ஆகிறது

என்னும் கவிதை வழி அப்துல் ரகுமான் தன் படைப்பின் மூலத்தினை வெளிப்படுத்திட உள்ளார். தன் ஆறாவது விரல் என்னும் படைப்பு விரல் வழியே சிலுவையிலிருந்து ரத்தம் என்பதை கொண்டு தன் மாமிசம் வார்த்தையாக எழுதுவதாக கூறியுள்ளது. தன் படைப்பு இரத்தமும், சதையுமானது என்றும் என் தேவனே! எனக்குக் கை கொடுத்து உதவுகின்றார் என்பதை படைப்பும் என்பது உயிரின் படைப்பு என்கின்றார்.

### 9.3.2 முன்னுரையாக ஒரு விண்ணப்பம்

“ வண்டுகளையே சூலாக்கும் மகரந்தம் என் பூக்களில் இவற்றை அர்ச்சனைக்காகப் பறித்து விடாதீர்கள்’ என்னும் வரிகளில் மகரந்தங்களே வண்டுகளைச் சூலாக்கும் காலத்தில் அர்ச்சனைக்காக அந்தப் பூக்களைப் பறித்து விடாதீர்கள். கோடிச் சூரியர்களையே பிழிந்து நட்சத்திரங்கள் செய்தநிலையில் அவற்றை தேதித்தாள் ஆக்கிவிடாதீர்கள். பொம்மைகளைத் தயாரித்து தருவதற்கு கருப்பைகளை நச்சரிக்காதீர்கள்.

“மெசியாவின் கரங்களில்
ஓட்டடைக் கோலைத்
திணிக்காதீர்கள்”

என்னும் வரிகளில் ‘மெசியா’ என்பது ‘இயேசுகிறிஸ்து’ வினைக் குறிப்பது. அவர் கைகளில் ஒட்டடைக் கோலைத் திணிக்காதீர்கள். விரகம் உடுத்திய இந்தக் காமுகரின் விரதைகளிடம் தாலிகளுடன் அலிகளை அனுப்பி விடாதீர்கள், போன்ற வரிகள் செயற்கை அதிகரித்து, இயற்கையை மழுங்கடிக்கும் காலத்தில் தன் எழுத்தின் படைப்பும் போலியானது அல்ல. இயற்கையானது உண்மையானது என்று உணர்த்துகின்றார். இவற்றில்

“வண்டுகளையே சூலாக்கும் மகரந்தம்”
“கோடிச் சூரியர்களைப் பிழிந்து நட்சத்திரங்கள்”
“பொம்மைகள் தயாரிக்கக் கருப்பையை”

"விரகம் உடுத்திய காமுகரின் விரதைகளிடம்
தாலிகளுடன் அலிகளை--"



போன்ற சொற்களின் இணைவில் பிறக்கும் புதிய படிமங்களையும் அவை தரும் ஆழ்ந்த பொருளும் அப்துல் ரகுமானின் புதுக்கவிதைக் கூறுகளின் அடையாளங்களாக உள்ளன.

**9.3.3 அந்தபுரங்களில்**

"நினைவுகளில் சூலாகி
நினைவுகளில் புதைந்த
கணந்தோறும் எனக்குப்
புதுப்புது அவதாரங்கள்"

என்னும் வரிகள் நினைவுகளே கருவாகி அதிலேயே புதைந்து ஒவ்வொரு கணமும் புதுப்புது அவதாரங்களாகும் சிப்பிக்குள் உருவாகும் முத்துவின் நிலையைப் போல தன் படைப்பு நிலையைக் குறிப்பிட்டுள்ளார். எண்ணங்களையே சுவாசித்து, எண்ணங்களிலே நின்று கொண்டு எப்பொழுதுமே அவற்றோடு வாழ்வோடும் தேடிக் கண்டடையும் கண்ணாமூச்சி நிலையிலேயே தன் படைப்புநிலை உள்ளது. குப்பைக் கிளராமல் துயிலை அடைகாக்கவே அமரும் இமைகள் என்பதும் நரம்புகளின் வழியே நிகழும் காம அழைப்பை அலட்சியும் செய்து நெருப்புக் காய்களால் சதுரங்கம் என்னும் வாழ்க்கை விளையாட்டை ஆடும் விரல்கள் என்பதும் ஒட்டடைக் கோலை கொண்டே வலையை உருவாக்குகின்ற சிலந்தியுமாகவும் அதிலே சென்று சிக்குகின்ற ஈயுமாகவே 'நான்' என்ற ஒன்றும் இருக்கின்றேன் என்பதும்,'கவிஞன்' என்பவன் தன்னை அடையாளப்படுத்தும் அடையாளமாக, படைப்பினை உருவாக்கும் கவிஞனின் அடையாளமாக, தனக்குள் நிகழும் அந்தப்புரத்தின் அடையாளமாக குறியீட்டுக் கவிதையாக அமைகின்றது.

"நெருப்புக் காய்களால் சதுரங்கமாடும் விரல்கள்"
"ஒட்டடைக் கோலிலேயே வலை பின்னும் சிலந்தி"

போன்ற சொற்சேர்க்கைகளில் அழகான படிமங்களை உருவாக்கியுள்ளார். அப்துல் ரகுமான். 'படிமம்' என்பது

புதுக்கவிதையின் கூறுகளில் ஒன்றாக விளங்குவது. கண்ணால் காண்பது போன்ற சித்திரத்தை, சொற்சேர்க்கையின் மூலம் உருவாக்கித் தருவது. அவ்வகையில் அப்துல்ரகுமானின் சொற்சேர்க்கைகள் புதிய படிமங்களை உருவாக்குவன. எனினும் இக்கவிதை 'அந்தப்புரங்களில்' என்னும் தலைப்பு மன்னர்களின் தனித்த படுக்கை அறையினைக் குறிக்கும் சொல்லாக விளங்குவது. அதன் பொருளானது அப்துல்ரகுமானின் இத்தலைப்பின் கீழ் அமையும் கவிதையில் கவிஞனின் அகமாகிய அந்தப்புரத்தை, கவிஞனின் படைப்புநிலையைக் குறிப்பதாக ஒரு குறியீட்டுக் கவிதையாக விளங்குகின்றது.

### 9.3.4. பலிபீடம்

என் வார்த்தையைத் தேடி
இரவின் வாய்க்குள் புகுந்தேன்
அந்தகார ஆழத்தில்
அது
காயமாகப் பூத்திருந்தது
நட்சத்திர வேஷமணிந்த
எழுத்துக்கள்
நிலா முரசைச் சுற்றிப்
பாட்டு ரத்தத்தை
வாந்தி எடுத்தபடி
குரவையாடிக் கொண்டிருந்தன
அர்த்தம்
சந்த பீடத்தில்
தன் சுவாசத்தை
அர்ப்பணம் செய்தது"

என்னும் கவிதையில் வார்த்தை, எழுத்துக்கள், அர்த்தம் போன்ற சொற்கள் கவிஞனின் கவிதைப் படைப்பு உருவாவதைச் சுட்டுகின்றன. 'இரவின் வாய்','அந்தகார ஆழம்','காயமாகப் பூத்திருந்தது','நட்சத்திர வேஷமணிந்த எழுத்துக்கள்','நிலாமுரசு','பாட்டுரத்தம்','சந்தபீடம்','தன் சுவாசத்தை அர்ப்பணம் செய்தது' போன்ற படிமங்கள் தன் கவிதை உருவாகும் படைப்புநிலையைச் சுட்டிக் காட்டுவதற்குப் பயன்படுத்தி உள்ளார். கவிஞனுக்கு சொற்களும், கற்பனையும், சந்தமும் இன்றி

கவிதை இல்லை. ‘பலிபீடம்’என்பது தன்னையே அர்ப்பணிப்பது என்ற வகையில் கவிதை என்னும் பலிபீடத்தில் தன் சுவாசத்தையே அர்ப்பணித்து விட்டதாக பொருள் கொள்ளலாம்.

குறிப்பு

### 9.3.5 சாவி இருக்கும் வரை

“ஞாபக முட்கள்
காயங்களைச் சுட்டி
வட்டமிடும்
என் ஏகாந்தத்தின்
இதயத் துடிப்பாக
பிரிந்து சென்ற உன்
காலடி ஓசை”

என்னும் கவிதை பிரிந்து சென்ற உன் காலடி ஓசை என்னும் சாவியானது, ஏகாந்த வெளியிலிருக்கும் இதயத்தின் துடிப்பினைத் திறக்க, ஞாபகத்தின் முட்கள் அதன் காயங்களைச் சுட்டிக் காட்டி வட்டமிடுகின்றன. இதில் ‘ஞாபகமுட்கள்’,‘காயங்கள்’,‘ஏகாந்தம்’,‘இதயத்துடிப்பு’ போன்ற சொற்கள் ஒரு சின்ன நிகழ்வு அதாவது ‘காலடி ஓசை’ என்னும் நிகழ்வு சாவியாக அது தொடர்பான நினைவாட்டலை எவ்வாறு சென்று சேருகின்றது என்பதை எடுத்துரைக்கும் குறியீட்டுச் சொற்களாகும்.

### 9.3.6 நிர்வாணத்தை உடுத்து :

“துச்சாதனக் கைகள்
நெய்தன என்னை
மஜ்னூ னின் அங்கியாகி—
உடுக்கை இழந்தவன் கைகள்
அந்தரங்க அங்கங்கள் வரையத்
திரைச் சீலையாகி
போதும் -------போதும்
சர்ப்பமே! உன் சட்டையின் மேல்
உடலை அணிந்து கொள்
ஆதாமின் காதலியே!

தோலுரித்து கொள் நீ
நான்
நிர்வாணத்தை
உடுத்திக் கொள்வேன்”

என்னும் கவிதை ‘நிர்வாணம்’ என்னும் உடலை மறைக்கும் ஆடையைத் திரௌபதியின் ஆடையைத் துகிலிரித்தன, துச்சாதனின் கைகள். ஆடை நெகிழும் பொழுது ஆடையைத் தந்து உதவுவது போன்றது நட்பு, உடுக்கை (ஆடை) இழந்தவனின் கைகள் நட்பின் அடையாளம். மஜ்னூனின் ஆடையாக ஆடையைத் தந்து உதவும் நட்பு. எனினும் அந்த ஆடையே அந்தரங்க அங்கங்களை வரையும் திரைச் சீலையாக மாறினால் ----- போதும் -----போதும்.

ஆதாம், ஏவாள் இருவரும் நிர்வாணமாக இருந்தனர். ‘சாத்தான்’ என்னும் சர்ப்பம் வந்த பிறகே ஆடையை உடுத்தினர். இங்கு கவிஞர் சர்ப்பமே (பாம்பே) உன் சட்டை (தோலின் மேல்) உன் உடலினையே அணிந்து கொள். ஆதாமின் காதலியாகிய ஏவாளே நீ ஆடை அணியவேண்டாம். உன் தோலினை உரித்துக் கொள். நான் நிர்வாணத்தை உடுத்திக் கொள்வேன் என்ற கவிதையில் நிர்வாணத்தை உருவாக்குவதற்குக் காரணமாகியவர்களே ஆடையை உடுத்திக் கொள்ளுங்கள் நான் நிர்வாணத்தையே உடுத்திக்கொள்கிறேன் என்பதில் கவிஞன் தான் ஒரு படைப்பாளன் என்ற பொருளிலும், படைப்பாளனுக்கு ‘ஆடை’ என்ற ஒளிவுமறைவு தேவையில்லை. ‘நிர்வாணம்’ என்னும் எழுத்துச் சுதந்திரமே தேவை என்னும் பொருளைத் தருவதாகவும் கொள்ளலாம்.

‘துச்சாதனன் கைகள்’,‘மஜ்னூனின் அங்கி’,‘சர்ப்பமே! உன் சட்டையின் மேல் உடலை அணிந்துகொள்’,‘ஆதாமின் காதலியே தோலுரித்து கொள்’, போன்ற சொற்சேர்க்கைகள் தொன்மைக் குறியீட்டுச் சொற்களாக விளங்குகின்றன. அதில் திரௌபதியின் துகிலுரிதல், மஜ்னூனின் நட்பு, ஆதாமின் ஏவாள் கதை, போன்ற தொன்மகதைகள் உட்பொருளாகி உள்ளன.

குறிப்பு

### 9.3.7 நெற்றிக் கண்

'நெற்றிக்கண்' என்னும் இத்தலைப்பின் கீழ் 8 குறுங்கவிதைகளை அப்துல்ரகுமான் எழுதியுள்ளார்.

“திலகமாக நடிக்கும்
நெற்றிக் கண்ணே
நானும்
நக்கீர வேடமிட்ட
மன்மதன் நான்”

என்னும் கவிதை, நக்கீரர் சிவபெருமான் எழுதிய பாட்டு குற்றமே என்று கூறியபொழுது தன் நெற்றிக்கண்ணை திறந்து காட்டினார். 'நெற்றிக்கண் திறப்பினும் குற்றமே' என்று நக்கீரர் உரைத்த பொழுது அவரை சிவபெருமான் சுட்டெரித்தார். மன்மதன் சிவபெருமானைத் தன் மலர்க்கணைகளால் தவத்திலிருந்து கலைக்க முற்பட்டபொழுது சிவபெருமான் தன் நெற்றிக் கண்ணைத் திறந்து சுட்டெரித்தார். கவிஞர் தன்னை நக்கீரனைப் போல வேடமிட்ட மன்மதனாக விளங்குகிறேன். நெற்றிக்கண்ணே நீ என் திலகமாக நடிக்கின்றாய் என்கிறார்.

“நெற்றிக் கண்
கண்டதும் காதல் எரிந்தது
சாம்பல் விழுந்து
நெற்றிக்கண் எரிந்தது”

என்னும் கவிதையில் நெற்றிக்கண் திறந்ததும் காதல் எரிந்தது. அதன் சாம்பல் விழுந்து நெற்றிக்கண்ணே எரிந்தது என்பதில் நெற்றிக்கண்ணும், காதலுக்குப் பலியாகிடும் என்னும் குறிப்புப் பொருளைத் தருகின்றார்.

“நெற்றிக் கண்ணே?
உன்னை மறைக்கும்
திருநீற்றுக்கோ
மன்மத தகனம்”

என்னும் கவிதையில் நெற்றிக்கண்ணிடம் ஒரு கேள்வியாக, உன்னை மறைக்கும் திருநீற்றுக்கோ மன்மதனை எரிக்கும் தகனம் நிகழுகின்றது?

**குறிப்பு**

'திலகமாக நடிக்கும் நெற்றிக்கண்ணே'
'சாம்பல் விழுந்து நெற்றிக்கண் எரிந்தது'
'திருநீற்றுக்கோ மன்மத தகனம்'

போன்ற படிமங்கள் நெற்றிக்கண்ணை வேறொரு கோணத்தில் அர்த்தப்படுத்துவதற்கு உரியதாக்கும் வரிகள்.

"மயக்கத்தில்
நெற்றிக் கண்ணடித்தேன்
ரதியைப் பார்த்து"

என்னும் கவிதை சாம்பலாகிய மன்மதன் தன் துணைவியாகிய ரதியை நெற்றிக்கண் கொண்டு கண்ணடித்தலில் கவிஞர் தம் கவிதையுணர்ச்சியின் வழி குறும்பினை வெளிப்படுத்தி உள்ளார்.

"பகலுறக்கக் கனவில்
நெற்றிக்கண் கண்டது
கண்ணீரை"

என்பது நெற்றிக்கண்ணிற்கும் கண்ணீர் உண்டு என்பதை நெற்றிக்கண் தன் கனவில் கண்டதாக அப்துல்ரகுமான் கவிதையாக்கியுள்ளார்.

"வெப்ப விழியிருக்க
வெளிச்சப் பார்வை
மழுங்கிவிட்டது உனக்கு
நெற்றிக்கண்ணே!
இந்தா இந்தப்
பூக்கண்ணாடியை அணிந்து கொள்"

என்னும் கவிதை நெற்றிக்கண்ணே! நீ எப்பொழுதும் வெப்பமாக இருப்பதால் உன் ஒளியானது மங்கிவிட்டது. அதனால் பூக்களால் ஆகிய (குளிர்ச்சி) கண்ணாடியை அணிந்து கொள் என்கிறது. இக்கவிதையிலும் கவிஞர் நெற்றிக்கண்ணிற்குக் கண்ணாடி அணிவிக்கும் கற்பனையில் தன் குறும்பினைக் (நகைச்சுவை உணர்வு) காட்டியுள்ளார்.

"ஒரு நாள்
நெற்றிக்கண் அலறியது
கோபவெறியில்
என் இமைகளையே
எரித்துக்கொண்டேன்
யாரேனும்
இமைகளைச் கொடுங்கள்
என்னால்
உறங்க முடியவில்லை.

என்னும் கவிதை நெற்றிக்கண்ணின் இமைகள் எரிந்துவிட யாராவது இமைகளைக் கொடுங்களேன். என்னால் உறங்க முடியவில்லை, என்பதில் கவிஞரின் கற்பனையை அறியமுடிகின்றது. தொன்மமாகிய நெற்றிக்கண்ணால் தகனம். மன்மதன் எவ்வகையில் புதிய அர்த்தத்தளதிற்குச் செல்கிறது என்பதே இக்கவிதை தொன்மக் குறியீட்டுக் கவிதை எனக் குறிப்பிடுவதற்கும் உரியதாகிறது.

### 9.3.8 தாகம்

"வேலிக்கு வெளியே
தலையை நீட்டிய என்
கிளைகளை வெட்டிய
தோட்டக்காரனே!
வேலிக்கு அடியில்
நழுவும் என் வேர்களை
என்ன செய்வாய்"

என்னும் கவிதை வேலிக்கு வெளியே தலையை நீட்டிய என் கிளைகளை வெட்டிய தோட்டக்காரனே எனத் தோட்டகாரனை அழைத்து,

குறிப்பு

வேலிக்கு அடியில் பரந்து செல்லும் என் வேர்களை நீ எவ்வாறு வெட்டுவாய்? என்று கேட்பதில் மரத்தின் தாகம் தெரிகின்றது. அ.்.றிணையான ஒன்று பேசுவது போல் அமைவதை ஆங்கிலத்தில் ‘Personfication’ என்று குறிப்பிடுவர். அவ்வகையான கவிதைக் கூறாக இக்கவிதை அமைகின்றது.

### 9.3.9 மௌனாவதாரங்கள்:

“ஈசான மூலையில்
யாரோ ஒற்றடை அடிக்க
அன்றொரு நாள்
மௌனச் சிலந்தி
என் உதட்டுப் பட்டறைக் கல்லில்
வலைபின்னித் தவித்தது”

என்னும் கவிதையில் ‘மௌனம்’ என்பது குறித்தான பல்வேறு அவதாரங்களைக் கவிதையாக்கி உள்ளார். அப்துல்ரகுமான் அன்றொரு நாள் ஈசான மூலையிலே யாரோ ஒற்றடை அடிக்க மௌனச் சிலந்தி என் உதட்டுப் பட்டறைக் கல்லில் வலை பின்னித் தவித்தது என்பதில் மௌனம் தன் உதட்டிலே அமர்ந்து கொண்டது என்கிறார் கவிஞர். பின்பு ஒரு நாள் நான் நாரோடு காத்திருக்க நறுமணத்தை முணுமுணுத்தே தன் உதடுகளை உதிர்த்துக் கொண்டது மௌனமாகிய பூ, என்பதில் மௌனமாகிய பூ நறுமணம் என்னும் முணுமுணுப்பைத் தன் உதடுகளிலிருந்து உதிர்த்துக் கொண்டது என்கிறார். நாக்கு என்னும் திரியானது மௌனமாகிய சுடரினை ஏற்றி வைத்தால் தத்துவங்களின் முகத்தினைக் காண சுடரிலிருந்து புகை கிளம்பி, எண்ணெயில் மூழ்கிவிடுகிறது.

முத்துக்குளிப்பவர்கள் கூறுகிறார்கள், கண்ணீர்க் கடலின் இருண்ட ஆழங்களில் தியானச் சிப்பிகளின் வாய்க்குள்ளே மௌனம் ஒற்றைப் பல்லாக உருண்டு திரண்டு உருவாகிக் கொண்டுள்ளதாம்.

சுரங்கம் குடைந்தவர்கள் சொல்லுகிறார்கள் பிரச்சினைகளின் கனத்தால் அழுத்தப்படும் ஒலிக்கரி தான் இறுகி இறுகி, மௌன வைரமாக மாறுகிறதாம்.

குறிப்பு

இன்று சப்தமாகிய உடலைக் களைந்து நிர்வாண அர்த்தம் என்னோடு சங்கமிக்கும் சாந்திமுகூர்த்தத்திற்கு மௌனமாகிய மஞ்சத்திலே காத்திருக்கும் மணமகனாக நான் இருக்கிறேன் என்னும் கவிதையில்

'மௌனச் சிலந்தி'
'உதட்டுப் பட்டறைக் கல்'
'நறுமண முணுமுணுப்பு'
'மௌனப் பூ'
'மௌனச் சுடர்'
'விட்டில் வந்தது'
'கனியே
விட்டிலை உண்டது"

என்னும் கவிதையில் 'தீபம்' என்னும் மரத்திலிருக்கும் தீயாகிய கனியினை உண்ண விட்டில் பூச்சி

வந்து அமர தீயாகிய கனி, விட்டில் பூச்சியினை உண்டு விட்டது என்பதில் இக்கவிதை குறியீட்டுக் கவிதையாக விளங்குகிறது. 'அறிவு'—'ஞானம்' என்பது 'தேடல்' என்றால் அறிவினைத் தேடிய விட்டில் பூச்சியாகிய நான் தீக்கனியினை உண்பதற்கு சென்றால் அத்தீக்கனி' தன்னையே தின்றுவிடும் என்ற நிலையில் 'சுட்ட பழம்' என்னும் தலைப்பு, அவ்வையிடம் முருகன் 'சுட்ட பழம்' வேண்டுமா? 'சுடாத பழம்' வேண்டுமா? எனக் கேட்டதன் பொருளாக அமைகின்றது. ஞானத்திலே பேதம் என்பது கிடையாது என்பதே அதன் பொருள்.

### 9.3.11 பாவைச்சமாதி

தூக்கம் என்னும் தொட்டிலில் பசித்து அழுத என் கனவைப் பாசத்துடன் அள்ளி, ரகசியம் விலக்கி ஊட்டி வளர்த்த நீயும், வழியனுப்ப யாருமற்றுப் புறப்படும் பொழுது தயங்கி அச்ச

குறிப்பு

நடுக்கத்தோடு கிடப்பவர், மூக்கிலெல்லாம் விரல் வைத்துப் பார்க்கும் இரவான, என் கனவு தொட்டுப் பார்க்கையில் உன் உணர்வுகளை மௌனத்தில் கிடத்தியிருந்த நீயும் ஒருத்தி தானா? துயில் சுவாசம் அடங்க, என் அனாதைக்கனவு, அகால மரணம் அடைந்து விட்டது. பாவைச்சமாதியில் அதன் சவ அடக்கம் நிகழ்ந்துவிட்டது. பெருமூச்சு என்னும் உளியினால் கல்லறை வாசகத் தேர்விலே இன்னும் தடுமாறிக் கொண்டிருக்க, இமையாகிய பீலி என்னும் வத்திகளில் திரவமாகிய சுடர்களை தினமும் நான் ஏற்றி வைக்கிறேன், என்னும் கவிதையில் தூங்கவிடாது செய்யும் கனவினை அக்கனவிற்குக் காரணமான அதனை வளர்த்த, அதனை மரணிக்கச் செய்த பாவையின் சமாதியில் அக்கல்லறையில் எழுதுவதற்கு வாசகமற்று கண்ணுள் உள்ள திரவச் சுடர்களையும் இமைப்பீலி வத்திகளையும் தினமும் ஏற்றி வைப்பதாக கவிஞர் அப்துல் ரகுமான் குறிப்பிட்டுள்ளார்.

‘தூக்கத் தொட்டில்’
‘பசித்தழுத என் கனவு’
‘துயில் சுவாசம்’
‘அனாதைக் கனவு’
‘பாவைச் சமாதி’
‘பெருமூச்சு உளி’
‘இமைப்பீலி வத்திகள்’
‘திரவச் சுடர்கள்’

போன்ற சொற்களின் சேர்க்கை ‘கனவு’ பிறந்து வளர்ந்து மரணிக்க, அதற்கு அஞ்சலி செலுத்தும் நிலையை வருணித்துள்ளது. அச்சொற்கள் உருவக அணி நிலையில் புதுப்புதுப் பொருளைத் தருகின்றன.

### 9.3.12 முரண்தொடை

“ஆதியிலே ஓர் அந்தம்
புதைந்தது
சமாதி
மெதுவாய் அசைந்தது

குறிப்பு

நீலாம்பரி இமைக்குள்
பூபாளக் கனவு
வைகறை
அந்திப்பூவின் மகரந்தமானது

இருட்டின் வயிற்றில்
ஒளியின் கா்ப்பம்
புன்னகை பிறந்தது
கண்ணீா்ப் பாடையில்”

தொடக்கத்திலே ஒரு முடிவு, முடிவிலே ஒரு தொடக்கம் என்ற நிலையில் ஆதியிலே ஓா் அந்தம் (முடிவு) புதைந்தது. ‘சமாதி’ என்னும் நிலை மெதுவாய் அசைந்தது. ‘நீலாம்பரி’ என்னும் உறக்கத்தை வரவழைக்கும் இராகத்தின் இமைக்குள்ளே பூபாளத்தின் கனவு மறைந்துள்ளது. வைகறை என்னும் பொழுது அத்துயிலே பூத்த பூவின் மகரந்தமானது இருட்டின் வயிற்றிலே ஒளியின் கா்ப்பம். புன்னகையானது பிறந்தது கண்ணீா்ப் பாடையில் என்னும் கவிதையில்

ஆதி x அந்தம்
புதைந்த சமாதி x மெதுவாய் அசைதல்
நீலாம்பரி இமை x பூபாளக்கனவு
வைகறை x அந்திப்பூவின் மகரந்தம்
இருட்டின் வயிறு x ஒளியின் கா்ப்பம்
புன்னகை பிறந்தது x கண்ணீா்ப் படையில்

என்னும் இருளின் மறைவில் கதிரவனின் உதயம் என்னும் அழகான காட்சியும் சித்தரிக்கப்பட்டுள்ளது.

### 9.3.13 முரண்தொடை

நானும் நீயும் என்ற நிலையில் நாரில் பூத்த மலா்களாக உள்ளோம். நூலினைத் தொங்கப் போட்டு வாலாட்டிய என் பருவத்தின் முன் வந்து விழுந்தது என் விலா எலும்போ? கதகதப்பான கனவுகளைப் போா்த்து உறங்கிய என் ஏக்கங்கள் உன்

குறிப்பு

யதார்த்த கிரணங்களால் கண் விழித்தன. நாமிருவரும் பாதிகள். நாம் என உணரும் பசிப் பொழுதிலே செருக்குகளையே ஏற்றி ஒருவரது வாசலில் ஒருவர் இரக்கின்றோம். இருவருக்குமிடையே இந்த மோக ஈர்ப்பு பரிணாமத் தூண்டிலின் புழு என்ற வகையில் நம் சங்கமம் முரண்தொடை என்பதில் பருவ வரவில் ஆண், பெண் ஈர்ப்பும் அதன் இணைவாக அமைவதே முரண்தொடை என்கிறது. ‘முரண்தொடை’ என்பது செய்யுளில் பாநயத்தின் கூறாக அமைவது, காதலின் நயமாக ‘ இம்முரண்தொடை’ கவிதையும் அமைகின்றது.

### 9.3.14 தீக்கடை கோல்கள்

காலம் என்னும் அடுக்களையில் தீயினை உருவாக்கும் தீக்கடை கோல்களாக நாம் உள்ளோம். ஒருவரை ஒருவர் தம் பெயர் உச்சரித்து அர்த்தங்களால் நாம் நிரம்புகிறோம். மாறுகின்ற பருவமாகிய கோப்பைகளில் நம் பானமும் மதுவாகிப் பாலாகி, மருந்தாகப் பரிணமிக்கின்றது. ‘சபலம்’ என்னும் வடங்களால் (கயிற்றினால்) இருபுறமும் இழுபடும் என் மனமாகிய ரதத்தின் நிலைநிற்பது உன்னிடம் தான். உணர்வுகள் எழுதும் கணிதமாகிய குறிகளால் வெவ்வேறு விடை கிடைக்கும். எண்களாக நாம் உள்ளோம் என்னும் கவிதை ஆண், பெண் ஈர்ப்பில் நிகழும் காதலுணர்வைச் சித்தரித்துள்ளார். ‘பருவக் கோப்பை’ ,‘சபல வடம்’,‘தீக்கடைக் கோல்கள்’ போன்ற சொல்லிணைவுகள்ஆண், பெண் ஈர்ப்பில் விளையும் உணர்வுகளைச் சுட்டுகின்றன.

### 9.315 பார்வை நிழல்

வெளிச்சம் போதனை செய்த பிறகும் பகலுக்கு ஏற்படும் சந்தேகங்களாய் இந்த நிழல்கள்.இவற்றிலே உன் பார்வைகளையே ஞாபகமாக கொண்டு உறைந்து போகிறேன். உன் நிழல்களைத் தாக வெறியோடு அனுபவிக்க தகிக்கும் வெயிலில் சில யுகங்கள் நான் புழுங்கித் துடிப்பேன். பிறகு உன் கருமியாகிய கண்களுள் என்னைக் கண்ணீராகவாவது சேமித்துக் கொள், என்றவகையில் பார்வையாகிய நிழல் தரும் காதல்சுகத்தைப் பெறும் ஒரு காதலனின் ஏக்கத் தவிப்பாக இக்கவிதை அமைகின்றது.

குறிப்பு

### 9.3.16 வினையாட்டு

"யதார்த்தப் பகலில்
குறளாய்க் கொடையிரந்து
ஏகாந்த இரவில்
விசுவரூபம் கொண்டு
என்னையே புதைக்கும்
நிழல் நீ
கொடியவளே
உன் நினைவுகளில்
நீந்த இறங்கியவனை
மீனாக்கி விட்டியே"

என்னும் கவிதையில் யதார்த்தம் என்னும் பகலிலே குறள் வடிவாய் கொடையினை இரந்து, ஏகாந்தமான இரவிலே விசுவரூபம் கொண்டு என்னையே புதைக்கம் நிழலாக நீ உள்ளாய். கொடியவளே! உன் நினைவுகளில் நீந்த இறங்கியவனை மீனாக்கி விட்டாயே என்று காதலியின் நினைவிலே மீனாக நீந்தும் காதலனை பற்றிய கவிதையாக விளங்குகிறது.

### 9.3.17 என் செவியின் சுவாசம்

பிருந்தாவனம் எங்கும் செவிகள் பூக்க, சுவாசத்தையே ராகமாக்கி, ராதை உன்னில் புல்லாங்குழலாக ஆகியிருக்கின்றாள்.

"பாடகி
என் ஏகாந்த சோபன அறையுள்
உன் முகத்திரை அணிந்த கீதம்
ஸ்வர பாதசரம் ஒலிக்க
நாண அலங்காரத்துடன்
நடந்து வருகிறது"

பாடகி, என்னுடைய ஏகாந்த சோபன அறையுள் உன் முகத்திரை அணிந்த கீதம் ஸ்வரமாகிய பாதசரம் ஒலிக்க, நாண அலங்காரத்துடன் நடந்து வருகிறது. மௌனமாகிய பாலை வெளியில் யுகம் யுகமாக அலைந்து திரிந்த பெருமூச்சுக்கள், உன் ஆலிங்கன அடைக்கலத்தில்

விம்முகின்றன. தூக்கத்திற்குள் அடங்காத கனவுமது, பொங்கி நுரைத்துத் ததும்பி தாபங்களின் இமையே என உன்னை மீறி வழிகிறது. உன்னை மொய்க்கும் காற்றின் சிறகுகளில் சொர்க்கத்தின் மகரந்த கர்வம் உன் தாலாட்டில் காயங்கள் இமை மூடும். உன் வசியம் என்கிற சுனையில் நீர் பருகின்ற காகங்கள் விசுவரூபம் எடுக்கும். என் கண்ணீர் மேகங்களில் உன் கிரணங்கள் வர்ணகோலம் வரையும். அர்த்தம் என்னும் பாதையை விட்டுவிட்டு உன் காந்தமாகிய காட்டில் காணாமல் போகும் பொழுது என்னை அடையாளம் காண்கிறேன் என்று என் செவியானது சுவாசிப்பது இசையை என, இசையின் வசீகரத்தை அதன் வழியாக தன்னை அடையாளம் காண்பதை குறிப்பிட்டுள்ளார். இக்கவிதை ஹிந்திப் பாடகி லதாமங்கேஷ்கருக்கு அர்ப்பணம் ஆக்கியுள்ளார்.

### 9.3.18 கலை

" இமைப் பீலிகளின்
கையெழுத்துப் பிரதியை
அச்சுக் கோக்க
நட்சத்திரங்களை அடுக்கி
அடைப்புக் குறிகளுக்காக
மேக அறையெல்லாம்
இன்னொரு பிறைக்குத்
துளாவும்
மன விரல்கள்"

என்னும் கவிதை மனவிரல்கள் படைக்கும் புத்தகமாக உருவகித்துள்ளார். 'இமைப் பீலிகள்','நட்சத்திரங்கள் அடைப்புக்குறிகளாக','மேக அறை','இன்னொரு பிறை','மனவிரல்கள்' என நட்சத்திரங்களை, மேகத்தை, பிறையைக் கொண்டு மனவிரல்கள் புத்தகமாக்குகின்றன.

### 9.3.19 'பத்மை'

'பத்மை' என்னும் தலைப்பில் அமையும் கவிதை பிறக்காத பிறப்பாக அமைந்த, படைப்பினை வருணிக்கின்றது.

குறிப்பு

"எனக்குப் பொறாமை உண்டாக்கும்
ஒரே கவிதை நீ
ஓ ------- உன்னை
நான் எழுதியிருக்க வேண்டும்

இமைகளில்லாத
வார்த்தை விழிகளில்
படியாமல் போன என்
வர்ண சொப்பனங்கள்
உன்னை வரைய
எப்படிச் சங்கமித்தன?

தூரிகை
உளி
வீணை
எழுதுகோல்
யாரேனும் வாருங்கள்

நான் பிரசவிக்க வேண்டும்
என்று துடித்தபோது
யோனியாக வாராத அவை
உன்னை ஏந்திய கருப்பையின்
ரத்த நாளங்களாய்ப்
பாசத்துடன் கிடந்தனவோ?"

என்னும் கவிதையில், எனக்கு பொறாமை உண்டாக்கும் ஒரே கவிதை நீ ------ அக்கவிதையை நான் எழுதவில்லையே என்று ஏங்குகிறார். இமைகள் என்பது இல்லாத வார்த்தையாகிய விழிகளில் படியாமல் போன என் வர்ணமாகிய சொப்பனங்கள் (கனவுகள்) உன்னை வரைவதற்கு எப்படிச் சங்கமித்தன?

தூரிகை, உளி, வீணை, எழுதுகோல் யாராவது வாருங்கள். நீங்கள் வந்தால் தான் பிரசவிக்க முடியும் என்று துடித்தபொழுது

பிறப்பிற்குக்காரணமாகிய யோனியாக வாராத அவை உன்னை ஏந்திய கருப்பையின் ரத்தநாளங்களாய்ப் பாசத்துடன் கிடந்தனவோ? என்று படைப்பனுபவத்தைக் குறித்து எழுதியுள்ளார்.

குறிப்பு

### 9.3.20 சிந்தர்

'சிந்தர்' என்பது 'காசி ஆனந்தன்','நறுக்குகள்' என்னும் கவிதைத் தொகுப்பில்குறிப்பிட்டது போல 'உரைக்கிறுக்கல்','நறுக்குகள்','சிந்தர்' என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. மூன்றடியில் அமைந்த கவிதை பிற்காலத்தில் 'ஹைக்கூ' எனப் பெயர் பெற்றது.

1. "இரவெல்லாம்
உன் நினைவுகள்
கொசுக்கள்"

என்பது இரவு தூங்காததற்குக் காரணம் கொசுக்கள். ஆனாலும் அத்தூங்காத பொழுதிலே உன் நினைவுகள் என்று குறிப்பிட்டுள்ளார்.

2. "பனித்துளி இல்லாப்
பூவின் இமைகளில்
வீழ்ந்ததென் கண்ணீர்"

என்னும் கவிதையில் பனித்துளிகள் இல்லாத பூக்களின் இமைகளில் என் கண்ணீர் வீழ்ந்தது என்கிறார்.

3. "இளவேனில் இரவு
நட்சத்திர முள்ளில்
விரக நிலவு"

என்னும் கவிதையில் இளவேனில் பொழுதிலே தோன்றிய இரவு, நட்சத்திரடமாகிய மோக முள்ளில் விரகநிலவு தோன்றியது என்கிறார்.

4. “மயான வாசலில்
பழுதாகி நின்றது
ஈனில் ஊர்தி”

என்னும் மயான வாசலிலே,ஈனுகின்ற ஊர்தி பழுதாகி நின்றது என்கிறார் கவிஞர்.

5. “முட்டை கொண்டு
திட்டை ஏறும் எறும்புகள்
அவள் எழுத்துக்கள்”

என்னும் கவிதையில் முட்டையை வாயில் வைத்து கொண்டு திட்டையில் ஏறும் எறும்புகளைப் போல அவள் எழுத்துக்கள் இருந்தன என்கிறார் கவிஞர். அந்த ஐந்து கவிதைகளும் மூன்று வரியில் அமைந்து அப்துல் ரகுமானின் கற்பனையை வெளிப்படுத்தி உள்ளன.

## 9.4 புதுக்கவிதையின் அழகியல் கூறுகள்:

புதுக்கவிதை என்பது 20ம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய கவிதை வடிவம். ‘யாப்பு’ என்னும் பாவகை வடிவிலிருந்து விடுபட்டு சுதந்திரமாக எழுதும் கட்டற்ற கவிதையாக பாரதியார், ந. பிச்சமூர்த்தி போன்றவர்களால் அறிமுகம் செய்யப்பெற்று வானம்பாடி, கசடதபற, நடை, எழுத்து போன்ற இதழ்களின் மூலம் வளர்த்தெடுக்க பெற்று ‘புதுக்கவிதை’ என்னும் இயக்கமும், கவிதை வடிவமும் நிலைபெற்றது. புதுக்கவிதையின் அழகியல் கூறுகளாக அணிகளில் உவமை, உருவகம் போன்ற முதன்மை அணிகளோடு படிமம், குறியீடு, போன்ற கூறுகளும் கவிதைக்கு அழகு சேர்ப்பன.

அப்துல்ரகுமானின் சொற்களின் இணைவு, புதிய தொனியையும், அர்த்தத்தையும் தரும். சொற்றொடர்களின் சேர்க்கை புதிய படிமங்களையும் குறியீட்டுப் பொருளையும் தருவது மட்டுமல்ல, கவிதைக்கு புதிய பரிணாமத்தையும் தரும்.

"வண்டுகளையே சூளாக்கும் மகரந்தம்"
"கோடிச் சூரியர்களைப் பிழிந்து நட்சத்திரங்கள்"
"நெருப்புக் காய்களால்
சதுரங்கமாடும் விரல்கள்"

போன்ற வரிகள் ஊடாக தனித்த சொற்களின் தனித்த பொருள் உடைப்பட்டு
(எ.கா. நெருப்பு + காய்கள் = நெருப்புக்காய்கள்) புதுப்பொருளானது உண்டாகின்றது.

'தாகம்' என்னும் கவிதை

"வேலிக்கு வெளியே
தலையை நீட்டிய என்
கிளைகளை வெட்டிய
தோட்டக்காரனே!
வேலிக்கு அடியில்
நழுவும் என் வேர்களை
என்ன செய்வாய்"

என்னும் கவிதை அ.்.றிணையான ஒன்று பேசுவது போல் அமைகின்றது. அவ்வாறு அமைவதை (Personfication) மனிதப்படுத்தல் என்று கூறுவர். 'தாகம்' கவிதை அவ்வகையான கவிதைக் கூறாக அமைகின்றது.

'மௌனச் சிலந்தி', உதட்டுப்பட்டறைக்கல்','நறுமண முணுமுணுப்பு','மௌனப்பூ','மௌனச்சுடர்','நாக்குத்திரி','கண்ணீர்க் கடல்','தியானச் சிப்பிகள்','மௌனப் பல்','ஒலிக்கரி', 'மௌன வைரம்','மௌன மஞ்சம்','சப்த உடல்' போன்ற சொல்லிணைவுகள் 'உருவகம்' என்னும் அணிக்கூறாக அமைகின்றன.

குறிப்பு

புதுக்கவிதை அழகியல் கூறுகளில் 'குறியீடு' என்பது ஒன்றைக் கூறி அதன் மூலம் வேறொரு பொருளினை உணர்த்துவது. இதனை 'சுட்டபழம்' என்னும் கவிதையினால் அறியலாம். இவ்வகையில் புதுக்கவிதையில் அழகியல் கூறுகள் புதுக்கவிதையின் உத்திகளாக அமைந்து புதுக்கவிதை வடிவத்திற்குப் புதிய இலக்கணத்தை உருவாக்கியுள்ளன.

## 9.5 தொகுப்புரை

அப்துல் ரகுமானின் 'பால்வீதி' என்னும் தொகுப்பில் அமைந்துள்ள 20 கவிதைகள் புதுக்கவிதையின் படிமம், குறியீடு, உவமை, உருவகம் போன்ற நயங்களைக் கொண்டு புதிய சொற்களின் இணைவில் புதுப்புது அர்த்தங்களைத் தந்து கவிதைக்கு அழகு சேர்த்துள்ளன. அப்துல் ரகுமானின் கற்பனைநயம், சொல்நயமும் அவரின் தனித்த அடையாளங்களாக விளங்கி புதுக்கவிதையை பாரதி கூறிய சொல் புதிது, பொருள் புதிது, சோதிமிகு நவகவிதையாகப் பரிணமிக்க செய்துள்ளன.

## 9.6 மாதிரி வினாக்கள் (2மதிப்பெண்கள்)

1. 'பால்வீதி' என்னும் தொகுப்பினை எழுதியவர் யார்?
   அப்துல் ரகுமான்
2. "என் ஆறாவது விரல் வழியே சிலுவையிலிருந்து வடிகிறது ரத்தம்" என்று கூறியது யார்? ஏன்?
   அப்துல் ரகுமான்,'ரத்தத்தை' மையாகக் கொண்டு 'மாமிசம்' வார்த்தையாக படைப்பினை உருவாக்குவதாக, தன் படைப்பு உயிர்ப் படைப்பு என்கின்றார்.
3. 'மெசியாவின் கரங்களில் ஒட்டடைக் கோலைத் திணிக்காதீர்கள்' என்பதில் 'மெசியா என்பதன் பொருள் யாது?
   'மெசியா' என்பது இயேசு கிறிஸ்துவினைக் குறிப்பது.

4. 'தாகம்' என்னும் கவிதை எவ்வகையான கூறினைக் கொண்டுள்ளது?

   ' தாகம்' என்னும் கவிதை அ.்.றிணை பேசுவது போல் அமைந்த மனிதப்படுத்தல்

   (Personfication) என்னும் கூறினைக் கொண்டுள்ளது.

5. 'சிந்தர்' என்னும் கவிதை வடிவத்திற்குச் சான்று தருக.

   'இரவெல்லாம்
   உன் நினைவுகள்
   கொசுக்கள்'

## 9.7 பயிற்சி வினாக்கள் (5 மதிப்பெண்கள், 10மதிப்பெண்கள்)

1.அப்துல்ரகுமானின் கவிதைச்சிறப்பினை விளக்குக .(5 மதிப்பெண்கள்)

2. புதுக்கவிதைக் கூறுகள் அப்துல்ரகுமான் கவிதைகளில் இடம்பெறுமாற்றை விவரிக்க. (10 மதிப்பெண்கள்)

## 9.8 மேலும் படித்தறிக

'பால்வீதி'– அப்துல்ரகுமான்
கவிக்கோ பதிப்பகம்
சென்னை -41
ஜனவரி 2002 – 6வது பதிப்பு

# கூறு 10 – ந. பிச்சமூர்த்தி

# தெரியவில்லை

10.1 – அறிமுகம்

10.2 – நோக்கம்

10.3 – ந.பிச்சமூர்த்தி

10.4 – தெரியவில்லை –கவிதை

குறிப்பு



## 1.0.1அறிமுகம்

ந.பிச்சமூர்த்தி இயற்றிய 'தெரியவில்லை' என்னும் கவிதை புதுக்கவிதை. புதுக்கவிதையின் தந்தையாகிய ந.பிச்சமூர்த்தி தமிழின் கவிதை மரபினைக் கூண்டிலிருந்து விடுவித்து புது கவிதை மரபினை உருவாக்கியவர். புதுக்கவிதை, மரபுக்கவிதையின் யாப்பு வடிவத்திலிருந்து விடுதலை பெற்று, சொல் புதிது, பொருள் புதிது, சோதிமிகு நவகவிதையாக தோன்றியது. பாரதியும், பாரதியின் வசனகவிதையைப் பின்பற்றி ந.பிச்சமூர்த்தி தமிழில் புதுக்கவிதை வடிவத்தை, சோதனை முயற்சியை மேற்கொண்டார். அமெரிக்கக் கவிஞர் வால்ட் விட்மனின் 'புல்லின் இதழ்கள்' என்னும் கவிதையே, ந.பிச்சமூர்த்திக்குத் தூண்டுகோலாக அமைந்தது. 'Free Verse', 'Verse Libre'போன்ற சொற்கள் புதுக்கவிதையினை 'விட்டுவிடுதலையான கவிதை','இலகு கவிதை','சுதந்திர கவிதை' எனப் பல சொற்களில் குறிப்பிட வைத்து இறுதியில் 'புதுக்கவிதை' என்னும் சொல்லாட்சியைத் தமிழுலகம் பெற்றது. அவ்வகையில் தமிழின் புது வரவாகிய புதுக்கவிதையில் அமைந்த 'தெரியவில்லை' என்னும் கவிதை குறித்து இக்கூறு எடுத்துரைக்க உள்ளது.

## 10.2– நோக்கம்:

1.புதுக்கவிதை குறித்து அறிதல்.

2.ந.பிச்சமூர்த்தி – புதுக்கவிதை பிதாமகரைப் பற்றி தெரிதல்

3.புதுக்கவிதையின் அடையாளங்களைத் தெளிதல்

4. கவிதையுணர்ச்சியும், அறிவும் மாணவர்கள் பெறுதல்

குறிப்பு

## 10.3 – ந.பிச்சமூர்த்தி

தமிழ் இலக்கியத்திற்கு முக்கியமான பங்களிப்பினைச் செய்த, புதுக்கவிதையின் தந்தை ந.பிச்சமூர்த்தி ஆகஸ்டு 15 - 1900ஆண்டு கும்பகோணத்தில் நடேச தீட்சிதர், காமாட்சி அம்மாளுக்குப் பிறந்தவர். 'வசன கவிதை' என்னும் பெயருடன் 1934இல் 'காதல்' என்னும் தலைப்பில் அவர் எழுதிய கவிதையே தமிழின் முதல் புதுக்கவிதை எனலாம். ந.பிச்சமூர்த்தி 117 கவிதைகள்,'வழித்துணை' என்னும் குறுங்காவியத்தை எழுதியுள்ளார். 127 சிறுகதைகளை எழுதியுள்ளார். வழக்கறிஞர் பட்டம் பெற்றாலும் இந்து அறநிலையத்துறை அதிகாரியாக பணியாற்றியவர். 'நவ இந்தியா' பத்திரிகையில் பணிபுரிந்தவர். சுதேசமித்திரன், சுதந்திரச்சங்கு, தினமணி, மணிக்கொடி ஆகிய இதழ்களில் எழுதியுள்ளார். இவர் படைப்புகள் நாட்டுடைமை ஆக்கப்பட்டுள்ளன. இவர் 04..12.1976 இல் மறைந்தார். இவர் எழுதிய 'தெரியவில்லை' என்னும் கவிதையே இயல்பான மொழியில் யதார்த்தமாக அமைந்துள்ளது.

## 10.4 தெரியவில்லை – கவிதை

" மலையைப் பார்க்கிறேன்
சிலைக்காகும்
கோயிலுக்காகும்
பங்களாவின் சுற்றுச் சுவர்க்காகும்
தாரோடும் வீதிக்கு
செல்லிக் கல்லாகும்
மலைச் சிகரம்
மனிதச் சாதனைக்காகும்
ஏதேதோ தெரிந்தாலும்
மலையாகப் பார்க்கத் தெரியவில்லை.

மலரைப் பார்க்கிறேன்
புலரும் காதலுக்குத்

குறிப்பு

தூண்டில் முள்ளாகும்
அத்தர்க்காகும்
படத்துக்காகும்
ஏதேதோ தெரிந்தாலும்
மலராகப் பார்க்கத் தெரியவில்லை
என்னைப் பார்க்கிறேன்
கண்காணாச் சமூகத்தை
நிலைநிறுத்தும் கல் தூண்
பரிணாமத்தின் பனிச்சிகரம்
சந்ததியின் சங்கிலியால்
காலம் காட்டும் கடைக் கரணை
ஏதேதோ தெரிந்தாலும்
நானாகப் பார்க்கத் தெரியவில்லை"

மலையைப் பார்த்தபொழுது அது சிலை வடிக்கவும், கோயில் கட்டுவதற்கும், பங்களாவில் சுற்றுச்சுவர் வைப்பதற்கும், தார்ரோடு போடுவதற்கும், பயன்படும். மலைச்சிகரம் மனிதர்களின் சாதனையைக் குறிப்பிடுவதற்கும், மலையிலே ஏறி மனிதன் சாதனை படைப்பதற்கும் உதவும். இப்படி ஏதேதோ சிந்தனைகள் தெரிந்தாலும் 'மலை' என்ற ஒன்றினை மலையாக மட்டும் பார்க்கத் தெரியவில்லை என்கிறார் கவிஞர் ந.பிச்சமூர்த்தி.

மலரைப் பார்க்கிறேன், அது மனதில் புலரும் காதல் உணர்ச்சியை வெளிப்படுத்துவதற்கு தூண்டில் முள்ளினைப் போலப் பயன்படும். 'அத்தர்' என்னும் வாசன திரவியத்திற்குப் பயன்படும். சாமிபடத்திற்கோ, இறந்தவர்களின் படத்திற்கோ மாலையாகும். ஏதேதோ சிந்தனைகள் தோன்றினாலும் மலரை மலராகப் பார்க்கத் தெரியவில்லை.

என்னைப் பார்க்கிறேன். கண்ணிலே காணமுடியாத வருங்காலச் சமூகத்தை நிலை நிறுத்தும் கல்தூணாக விளங்குகிறேன். உயிர்களின் பரிணாமத்தின் பனிச்சிகரமென விளங்குகிறேன். சந்ததியின் தொடர் சங்கிலியால் காலத்தினைக் காட்டும் கடைக்கரணையாக விளங்குகிறேன். இப்படி நான் எனக்கு ஏதேதோவாக தோன்றினாலும் என்னை நான் நானாகப் பார்க்கத் தெரியவில்லை என்று ந.பிச்சமூர்த்தி மலை, மலர், நான் ஆகிய மூன்றினையும் பிறவற்றோடு தொடர்புப்படுத்திப் பார்த்து

குறிப்பு

அறியத் தெரிந்த நிலையில் அதனை அதன் இயல்போடு பார்க்கத் தெரியவில்லை என்கிறார். ஆன்மீகவியலாளர் ஜே.கிருஷ்ணமூர்த்தி அவர்கள் 'மரத்தினை மரமாகப் பார்' என்று கூறும் சிந்தனையையே ந.பிச்சமூர்த்தி அது, அதனை, அதன் இயல்பிலே காணத் தெரியவில்லையே என்று ஏங்குகிறார். புதுக்கவிதையில் எளிமையான வழங்குச் சொற்களோடு கவிஞர் தம் உள்ளத்து உணர்ச்சியை வெளிப்படுத்தியிருப்பதே கவிதை நயமாகும்.

## 10.5 தொகுப்புரை

ந.பிச்சமூர்த்தி 'புதுக்கவிதையின் தந்தை' எனச் சிறப்பிக்கப்படுகின்றவர். இவர் எழுதிய 'காதல்' என்னும் கவிதையே முதல் கவிதையாகும். சுதேசமித்திரன், சுதந்திரச்சங்கு, தினமணி, மணிக்கொடி போன்ற பத்திரிகைகளில் எழுதியுள்ளார். 117 கவிதைகள், 127 சிறுகதைகளை 'வழித்துணை' என்னும் குறுங்காவியத்தை எழுதியுள்ளார். அவர் இயற்றிய 'தெரியவில்லை' என்னும் கவிதை 'மலை' என்னும் ஒன்றைப் பார்க்கும் பொழுது அது, சிலை, கோவில், சாலை, சாதனை எனப் பலவற்றிற்கும் பயனுடையதாக உள்ளது. ஆனால் மலையை யாரும் மலையாகப் பார்ப்பதில்லை. அவ்வாறே மலரையும், காதலிற்கும், வாசனைக்கும், படத்திற்கு மாலையாகவும், பயன்தந்தாலும், யாரும் மலரை மலராகப் பார்ப்பதில்லை. என்னையும் நான் தானாக பார்க்கத் தெரியவில்லை என்னும் அகவயச் சிந்தனையை இக்கவிதையில் உட்பொருளாகக் கொண்டு இயற்றியுள்ளதை, இக்கூறு எடுத்துரைத்துள்ளது.

## 10.6 மாதிரி வினாக்கள் (2மதிப்பெண்கள்):

1. புதுக்கவிதையின் தந்தை என்றழைக்கப்படுபவர் யார்?
   
   ந.பிச்சமூர்த்தி
2. தமிழில் முதன்முதலில் புதுக்கவிதையை எழுதியவர் யார்?
   
   ந.பிச்சமூர்த்தி
3. வால்ட்விட்மனின் எந்நூலினைப் பின்பற்றி ந.பிச்சமூர்த்தி புதுக்கவிதை எழுதினார்?

வால்ட்விட்மனின் 'புல்லின் இதழ்கள்' என்னும் நூலினைப் பின்பற்றி எழுதினார்.

குறிப்பு

4. 'தெரியவில்லை' என்னும் கவிதையை எழுதியது யார்?

ந.பிச்சமூர்த்தி

5. தமிழின் முதல் புதுக்கவிதை எது?

தமிழின் முதல் புதுக்கவிதை ந.பிச்சமூர்த்தி எழுதிய 'காதல் என்னும் கவிதை'

## 10.7 பயிற்சி வினாக்கள் (5மதிப்பெண்கள், 10மதிப்பெண்கள்)

1. தமிழில் 'புதுக்கவிதையின் தந்தை' என்று அழைக்கப்படுபவர் யார்? ஏன்? (5மதிப்பெண்கள்)
2. 'தெரியவில்லை'– கவிதை கூறும் பொருள் யாது? (5மதிப்பெண்கள்)
3. புதுக்கவிதை குறித்து 'தெரியவில்லை' என்னும் கவிதை வழி விளக்குக. (10மதிப்பெண்கள்)

## 10.8 மேலும் படித்தறிக:

ந.பிச்சமூர்த்தி.

தமிழ் விக்கிப் பீடியா.

# கூறு 11 – காசி ஆனந்தன்

# வெற்றிவிழா

11.1 – அறிமுகம்

11.2 – நோக்கம்

11.3 – காசி ஆனந்தன்

11.4 – வெற்றிவிழா - கவிதை

11.5 – தொகுப்புரை

11.6 – மாதிரி வினாக்கள்

11.7 – பயிற்சி வினாக்கள்

11.8 – மேலும் படித்தறிக.

## 11.1 அறிமுகம்

குறிப்பு

காசிஆனந்தன் இயற்றிய ‘காசி ஆனந்தன் கவிதைகள்’,‘உயிர் தமிழுக்கு’,‘தமிழன் கனவு’,‘தெருப்புலவர் சுவர்க் கவிதைகள்’ போன்ற பல படைப்புகளை உருவாக்கியவர். ‘காசி ஆனந்தன் நறுக்குகள்’ என்னும் தொகுப்பும், கவிதையின் மற்றொரு பரிமாணத்தைக் காட்ட வல்லவை. இலங்கைக் கவிஞர் என்ற வகையில் இலங்கை மக்களின் உணர்ச்சிகளைத் தம் கவிதைகளில் வெளிப்படுத்தியிருப்பவர். கவிதை என்பது பல்வேறு தளங்களில், பல்வேறு உணர்ச்சிகளைத் தம் கவிதைகளில் வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் பரிணாமத் தன்மை கொண்டது. மரபுக்கவிதை, புதுக்கவிதை, ஹைக்கூ, சென்ட்ரியூ, லிமரைக்கூ போன்ற பல்வேறு வடிவங்களில் ‘நறுக்குகள்’ என்பதை காசி ஆனந்தன் அறிமுகப்படுத்தி உள்ளார். இதனை ‘உரைஇலக்கியம்’,‘சிந்தியல் இலக்கியம்’ அல்லது ‘உரைச் சிந்தல்’ (Prose Sprinkle) என்று கூறுகின்றார். ‘பளிச்சென வீச்சாகப் பாயும் நறுக்கு’, இன்னொன்று சிதறிய சொற்களாகச் சொரியும் ‘சிந்தல்’ அல்லது கிறுக்கல். இவ்வகையான கவிதையின் வடிவ அல்லது வகை, வளர்ச்சி காலத்தின் கட்டாயமாக தன்னைப் புதுப்பித்துக் கொண்டே வருகின்றது.

## 11.2 – நோக்கம்

1. காசி ஆனந்தன் - அறிமுகம் அறிதல்.
2. புதுவகை கவிதை வடிவம், உணர்ச்சி தெரிதல்.
3. கவிதையின் பரிமாணங்களை அறிதல்.

## 11.3 – காசி ஆனந்தன்

காசி ஆனந்தன் 1938ஆம் ஆண்டு ஈழத்தின் மட்டக்களப்பில் பிறந்தவர். காத்தமுத்து சிவானந்தன் என்னும் பெயரினை ‘காசி ஆனந்தன்’ என்று சுருக்கிக் கொண்டார். ‘ஈழத்து எழுச்சிக் கவிஞர்’ என்னும் சிறப்பினைப் பெற்றார். தன்னுடைய இளம் வயதிலேயேஈழப் போராட்டத்திற்கு எதிரான ஆதிக்கக் குரலினைக் கண்டித்தவர்: போராட்டமும்

குறிப்பு

நிகழ்த்தியவர். சிறைச்சாலைக்கும் சென்றவர். தமிழகத்தில் தங்கி ஈழத் தமிழர் விடுதலைக்குப் போராடியவர். ‘காசி ஆனந்தனின் நறுக்குகள்’ அனல் தெறிக்கும் வெடிகுண்டுகள் என்று கூறுமளவிற்கு உண்மையின் தீப்பிழம்பாக விளங்குவன. பைபிளும், கீதையும் ‘உரை இலக்கியம்’ எனக் குறிப்பிடப் பெறுவது போல் காசி ஆனந்தனின் நறுக்குகளும்,‘உரை இலக்கியம்’ அல்லது ‘சிந்தல் இலக்கியம்’ எனக் குறிப்பிடுகின்றார். சிதறிய சொற்களாய்க் கிடக்கும் இவ்வகை உரை இலக்கியத்தை நான் ‘சிந்தல் இலக்கியம்’ (உரைச் சிந்தல் - Prose Sprinkle)என்று காசி ஆனந்தனே குறிப்பிட்டுள்ளார்.

“தன்பாட்டில் ஓர் இலக்கியன் கிறுக்கித் தள்ளும் எழுத்துக்களாய்த் தோன்றுவதால் இதனைக் ‘கிறுக்கல்’ இலக்கியம் (உரைக் கிறுக்கல் - Prose Sprinkle)என்கிறேன்.

வால்ட்விட்மன், ஆர்தர் ரிம்போ, கலீல் கிப்ரான், பாரதி ஆகியோர் ‘சிந்தல்’ அல்லது ‘கிறுக்கல்’ இலக்கியத்தை வாரிப் பொழிந்தார்கள். பாரதி தான் எழுதிய ‘காட்சி’ உரைக்கிறுக்கலை ‘பா’ (வசனகவிதை) என என்றுமே சொன்னதில்லை,என்பது ‘நறுக்கல்கள்’

சேயிழை தமிழ் மகள் வாய்மலர்
இதழ்களும் சிரித்தன சிரித்தனவே!
நீள்நெடு மாளிகை வீடுகள் நிறைந்தன
குடிசைகள் நீங்கினவே!
நாள்தொறும் வாடிய ஏழையர் பூமுகம்
நகைத்தன நகைத்தனவே!
ஆள்பவர் அடிமையர் உள்ளவர் அற்றவர்
ஆகிய பேதங்கள்
தூள்பட விடுதலை வந்தது!
தமிழ்மனம் குளிர்ந்ததடா!
போயின ஊர்வலம்! வீடெலாம் பொன்விழா
பூத்தன நிறைகுடங்கள்!
ஆயிரம் எழில்வகை! விடுதலை நாளெனில்
அழகொரு காட்சியன்றோ?
வாயிதழ் எங்கணும் வாழ்த்தொலி நின்றது

வாழிய தமிழ்நாடே!

முரசுகள் அதிரும் ஒலியினைக் கேளுங்கள், கேளுங்கள். ஊதுகுழல் முழங்கின. புரவிகளாகிய குதிரைகள் ஆடின, காணுங்கள் காணுங்கள். தமிழ்ப்பாடல் பொழிந்தன. வேட்டுக்கள்(வெடிகள்) அதிர்ந்தன. தாயகம் தனியாட்சி பெற்றது காதில் விழவில்லையோ! காற்றிலே தேனிசை கலந்து தவழ்ந்தது. சேயிழை போன்ற தமிழ்மகள் வாயாகிய மலரின் இதழ்கள் சிரித்தன, சிரித்தனவே.

நீண்ட நெடிய மாளிகை வீடுகள் நிறைந்து உள்ளன. குடிசைகள் யாவும் நீங்கிவிட்டன. நாள்தோறும் வாட்டமுற்று வாடிய ஏழைகளின் பூ போன்ற முகங்கள் நகைத்தன: நகைத்தனவே! ஆளுகின்றவர், அடிமையர், இருப்பவர், இல்லாதவர் ஆகிய வேறுபாடுகள் யாவும் தூளாகிட விடுதலையானது வந்தது. தமிழ் மனம் குளிர்ச்சி பெற்றது. வெற்றி ஊர்வலம் தெருவெங்கும் போயின. வீடுகளில் பொன்விழா மகிழ்ச்சி நிறைந்தது. நிறைகுடங்கள் பூத்தன. ஆயிரம் வகையான அழகு புலப்பட்டது. விடுதலை நாளில் இத்தகைய காட்சி அழகிய காட்சியன்றோ. வாயிதழ்கள் அனைத்தும் எங்கும் வாழ்த்தி ஒலி எழுப்பின. வாழிய தமிழ் நாடே என்று வாழ்த்தி மகிழ்ந்தன என விடுதலை உணர்வினையும் மகிழ்ச்சியினையும் வெற்றிவிழாவாக கவிஞர் காசி ஆனந்தன் தம் கவிதை வழி புலப்படுத்தி உள்ளார்.

## 11.5 தொகுப்புரை

ஈழத்து விடுதலையைத் தம் கண்ணே, முன்னே உணர்ந்து தனியுரிமை பெற்ற நாடாக ‘வெற்றிவிழா’ கொண்டாடியதை தம் கவிதையில் காசி ஆனந்தன் அவர்கள் பதிவு செய்துள்ளார். ஒரு வெற்றிவிழாவில் முரசுகள், ஊதுகுழல்கள், வெடிகள் முழங்க தனியாட்சி பெற்றது, குறித்து வெற்றி ஊர்வலம் சென்று தம் மகிழ்வை மக்கள் கொண்டாடி சென்று தம் மகிழ்வை மக்கள் கொண்டாடி மகிழுகின்றனர். உடையோர் இல்லாதவர், ஆண்டான் அடிமை பேதமற்று விடுதலை பெற்று எங்கும் வாழ்த்தொலி எழும் உணர்ச்சியைத் தம் கவிநயத்தினால் சொல்நயமாக்கிக் காட்டியிருப்பதை இக்கூறு எடுத்துரைத்து உள்ளது.

## 11.6 மாதிரி வினாக்கள்

குறிப்பு

1. காசி ஆனந்தன் இயற்றிய நூல்களில் இரண்டினைக் குறிப்பிடுக.
   உயிர் தமிழுக்கு, தமிழன் கனவு.
2. 'உரை இலக்கியம்' அல்லது 'சிந்தல் இலக்கியம்' என்று காசி ஆனந்தன் குறிப்பிடுவது எது?
   'நறுக்குகள்'
3. காசி ஆனந்தனின் இயற்பெயர் என்ன?
   காத்தமுத்து சிவானந்தன்.
4. 'வெற்றிவிழா' என்னும் கவிதையை இயற்றியவர் யார்?
   காசி ஆனந்தன்
5. 'வெற்றி விழா' என்னும் கவிதையில் 'வெற்றி விழா' எதற்காக?

'வெற்றிவிழா' என்பது தாயகமான யாழ்ப்பாணம் தனியரசாக மாறியதற்காக கொண்டாடப் பெற்றது.

## 11.7 பயிற்சி வினாக்கள் (5மதிபெண்கள், 10மதிப்பெண்கள்)

1. காசி ஆனந்தனின் சிறப்புகளை விளக்குக ((5மதிபெண்கள்)
2. 'வெற்றி விழா'– கவிதை தரும் பொருள் யாது? (5மதிபெண்கள்)
3. காசி ஆனந்தனின் கவிச்சிறப்பினை விளக்குக. (10மதிப்பெண்கள்)

### 11.8 மேலும் படித்தறிக:

காசி ஆனந்தன் நறுக்குகள் (கவிதைத் தொகுதி)

H++:\\WW.+ thamizham.net

FREE E-Books (Tamil) – 1100 /09

பொள்ளாச்சி நசன்.

# பிரிவு -4

## கவிதைகள் - ஹைக்கூ கவிதைகள்

## கூறு – 12 – கல்யாண்ஜி

## வாழ்க்கை

குறிப்பு



## 12.1 – அறிமுகம்

கவிதைகளில் புதுக்கவிதை தன் நெடிய பயணத்தில் பல புதிய கவிஞர்களை அறிமுகம் செய்து கொண்டே வந்துள்ளது. ந.பிச்சமூர்த்தி தொடங்கி வானம்பாடி, எழுத்து, கசடதபற என இதழ்கள் சார்ந்து வளர்ந்த புதுக்கவிதை ஏராளமான கவிப்பிள்ளைகளையும் பெற்றெடுத்துக் கொண்டுள்ளது. மீரா, சிற்பி, மு. மேத்தா, இன்குலாப், ஞானக்கூத்தன், பசவய்யா, அறிவுமதி, அப்துல்ரகுமான், வைத்தீஸ்வரன், பிரமிள், விக்கிரமாதித்தியன், கல்யாண்ஜி, வைரமுத்து,ஈரோடு தமிழன்பன் எனப் பலர். அவர்களின் கவிதைகள் தனிமனித, சமூகச் சிந்தனைகளை கவிநயமாக்கித் தந்துள்ளன. அவ்வகையில் ‘வண்ணதாசன்’ என்னும் ‘கல்யாண்ஜி’ யின் ‘வாழ்க்கை’ என்னும் கவிதையை இக்கூறு வழி அறியலாம்.

## 12.2 – நோக்கம்

1. கவிதையறிவினைப் பெறுதல்.
2. கவிஞர்கள் பற்றி அறிதல்.
3. யதார்த்த கவிதைகள் குறித்து தெளிதல்.
4. சமூகப்பிரச்சனைகளைச் கவிதையாக்கும் திறம் தெரிதல்.

5. மாணவர்கள் கவிதையுணர்ச்சி பெறுதல்

## 12.3 – கல்யாண்ஜி

குறிப்பு

'வண்ணதாசன்' என்னும் பெயரில் சிறுகதை எழுதியவர். 'கல்யாண்ஜி' என்னும் பெயரில் கவிதைகள் இயற்றியுள்ளார். தி.க. சிவசங்கரனுக்கு மகனாக 1946ஆம் ஆண்டு பிறந்தவர். சி.கல்யாணசுந்தரம் என்னும் இயற்பெயர் கொண்டு திருநெல்வேலியில் பிறந்தவர். 1962 இல் எழுத ஆரம்பித்தவர். 'ஒரு சிறு இசை' என்னும் சிறுகதை நூலிற்காக 'சாகித்திய அகாதெமி' விருதினைப் பெற்றவர். 'வண்ணதாசன் கடிதங்கள்' என்னும் தொகுப்பில் 'அன்புடன்' என்னும் தலைப்பில் எழுதியுள்ளார். புலரி, முன்பின், ஆதி, அந்நியமற்ற நதி, மணல் உள்ள ஆறு ஆகிய கவிதைத் தொகுப்புகளையும், கலைக்க முடியாத ஒப்பனைகள், தோட்டத்துக்கு வெளியிலும் சில பூக்கள், சமவெளி, பெயர் தெரியாமல் ஒரு பறவை, மனுஷா மனுஷா, கனிவு, நடுகை, உயரப் பறத்தல், கிருட்டிணன் வைத்த வீடு, ஒளியிலே தெரிவது, சில இறகுகள் சில பறவைகள், ஒரு சிறு இசை போன்ற சிறுகதைத் தொகுப்புகளையும், சின்னு முதல் சின்னு வரை என்னும் நாவலையும், அகம் புறம் என்னும் கட்டுரைத் தொகுதியினையும் எழுதியுள்ளார்.

## 12.4 – வாழ்க்கை – கவிதை

"இறக்கை சிலுப்பும் காக்கையை

எச்சில் இலையைத் தின்றபடி

யோசனை செய்யும் பசுமாட்டை

நனைந்த குரலில் பூ விற்று

நடந்து போகும் சிறு பெண்ணை

ஓட்டல் புகையை ரோட்டின் மேல்

பெட்ரோல் சிதறிய கோலத்தை

பாராமல் ஏன் அவன் மட்டும்

பரிசுச் சீட்டை விலை சொல்லிக்

கூவுகின்றான்? என் கக்கத்துக்

குடையைப் போல பெரிதாகக்

கிழிஞ்சு போச்சோ அவன் வாழ்க்கை"

குறிப்பு

தன்னுடைய இறக்கையைச் சிலுப்பிக் (உதறி) கொள்ளும் காக்கையை, எச்சில் இலையைத் தின்றபடி யோசனை செய்யும் பசுமாட்டினை, பூ விற்கும் பெண் நனைந்த குரலில் பூவினை விற்று நடந்து போவதை, ஓட்டலிலிருந்து வெளிவரும் புகையினை, ரோட்டின் மேல் பெட்ரோல் சிதறிக் கிடக்கும் கோலத்தினை என இக்காட்சிகள் எவற்றையும் பார்க்காமல் பரிசுச் சீட்டினை விற்கும் அவன் மட்டும் ஏன் பரிசுச் சீட்டினை மட்டும் விலை சொல்லிக் கூவுகின்றான். நான் என்னுடைய கக்கத்திலே வைத்திருக்கும் குடையைப் போலவே பெரிதாகவே கிழிஞ்சுப் போச்சோ பரிசுச்சீட்டு விற்கும் அவன் வாழ்க்கை என கல்யாண்ஜி பரிசுச் சீட்டு விற்பவனின் கூக்குரலைச் சுட்டிக் காட்டி அவன் வாழ்க்கை தன் கக்கத்திலிருக்கும் குடையின் கிழிசல் போலப் பெரிதாக உள்ளதோ என வருந்துகின்றார்.

## 12.5 – தொகுப்புரை

‘கல்யாண்ஜி’ ஆகிய ‘வண்ணதாசன்’ எழுதிய கவிதை வாழ்க்கை. அதில் பரிசுச் சீட்டு விற்பவனின் வாழ்க்கையைச் சுட்டிக் காட்டி கவிதையாக்கி உள்ளார். பல்வேறு காட்சிகளைக் கவிதையில் ஒருங்கிணைத்து அதன் மூலம் வறுமையில் வாடும் வாழ்க்கையை உடைய பரிசுச் சீட்டு விற்பவனின் கூக்குரலினைத் தனித்துக் காட்டி அதனைக் தன் கக்கத்து குடையோடு ஒப்பிட்டுக் காட்டுவதில் கவிதை நயம் வெளிப்பட்டுள்ளது. அவலச்சுவையோடு இக்கவிதை எழுதுப்பெற்றுள்ளது போன்ற செய்திகளை இக்கூறு விவரித்துள்ளது.

## 12.6 – மாதிரி வினாக்கள்

1. புதுக்கவிஞர்கள் இருவரின் பெயரினைக் குறிப்பிடுக.

    மீரா,ஈரோடு தமிழன்பன்.

2. புதுக்கவிதையை வளர்த்தெடுத்த இதழ்கள் எவை?

    வானம்பாடி, எழுத்து.

3. வண்ணதாசனின் படைப்புகள் எவை?

புலரி, முன்பின், ஆதி, அந்நியமற்ற நதி, ஒரு சிறு இசை போன்றன.

4. ‘வாழ்க்கை’ என்னும் கவிதையை எழுதியது யார்?

கல்யாண்ஜி.

குறிப்பு

5. கக்கத்துக் குடையைப் போல பெரிதாகக் கிழிந்து போனது யாருடைய வாழ்க்கை?

பரிசுச்சீட்டு விற்பவனின் வாழ்க்கை கக்கத்துக் குடையைப் போல பெரிதாகக் கிழிந்துப் போய்விட்டது.

## 12.7 – பயிற்சி வினாக்கள் (5மதிபெண்கள், 10மதிப்பெண்கள்)

1. வண்ணதாசன் இயற்றிய நூல்கள் எவை? விளக்குக. (5மதிபெண்கள்)

2. ‘வாழ்க்கை’ – கவிதை உணர்த்தும் செய்தி யாது?˙ (5மதிபெண்கள்)

3. கல்யாண்ஜியின் படைப்புகளில் ‘வாழ்க்கை’ கவிதை தரும் நயத்தினைப் புதுக்கவிதையின் வளர்ச்சி வழி நின்று விவரிக்க. (5மதிபெண்கள்)

## 12.8 மேலும் படித்தறிக:

கல்யாண்ஜி கவிதைகள் (முழு கவிதைத் தொகுப்பு)

வ.உ.சி. நூலகம்

(விக்கி மூலம் - இணைய பக்கங்களிலும் உள்ளன)

# கூறு – 13

# கவிஞர் வைரமுத்து.

சவகர்லால்

1. ஓ! மரங்கொத்தி மனிதர்களே!

2. நான் யார்?

3. பாவம்

குறிப்பு

13.1. – அறிமுகம்

13.2 – நோக்கம்

13.3 – கவிஞர் வைரமுத்து

13.3.1 – சவகர்லால்

13.4 – ஓ! மரங்கொத்தி மனிதர்களே!

13.4.1 – நான் யார்?

13.4.2 – பாவம்

13.5 – தொகுப்புரை

13.6 – மாதிரி வினாக்கள்

13.7 – பயிற்சி வினாக்கள்

13.8 – மேலும் படித்தறிக.

## 13.1 அறிமுகம்

திரைக்கவிதை உலகில் தனக்கென ஒரு தனி இடம் பிடித்த கவிஞர் வைரமுத்து அவர்கள். திரையிசைப் பாடல்கள் பல வைரமுத்துவின் பேர் சொல்லும் பாடல்கள். கவிஞர் வைரமுத்து கவிதைத் தொகுப்புகள் பலவும் சமூக, அழகியல் சார்ந்து படைக்கப் பெறும் கவிதைகளைக் கொண்டவை. கவிதைநயம் மிக்க, பல திரையிசைப் பாடல்களைத் தந்திருக்கிறார்கள். அவர் இயற்றிய 'ஓ! மரங்கொத்தி மனிதர்களே, என்னும் கவிதையை இக்கூறு விளக்குகின்றது.

## 13.2 – நோக்கம்

1. மாணவர்கள் கவிஞர் வைரமுத்து குறித்து அறிதல்.

2. கவிதையின் கவிநயம் தெரிதல்.

3. சூழலியல் சார்ந்த கவிதைகளைப் புரிதல்.
4. சூழலியல் விழிப்புணர்வு பெறுதல்



## 13.3 கவிஞர் வைரமுத்து

கவிஞர் வைரமுத்து தேனி மாவட்டம் வடுகபட்டியில் 1953இல் பிறந்தார். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் 'தமிழ் இலக்கியம்' பயின்றார். 1980இல் 'நிழல்கள்' திரைப்படத்தின் மூலம் திரையுலகக் கவிஞராக வளர்ந்தார். தேசிய விருதினை ஆறு முறை பெற்றுள்ளார். திரையிசை மூலம் தம் கவித்திறத்தினைக் காட்டியதோடு தம் கவிதைத் தொகுப்புகளின் வழி கவிநயத்தையும் சமூக விழிப்புணர்வுகளையும் ஏற்படுத்தி உள்ளார். திருத்தி எழுதிய தீர்ப்புகள், இன்னொரு தேசிய கீதம், இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல, தமிழுக்கு நிறமுண்டு, பெய்யெனப் பெய்யும் மழை, கள்ளிக்காட்டு இதிகாசம், வடுகப்பட்டி முதல் வால்கா வரை, தண்ணீர் தேசம், கருவாச்சி காவியம், மூன்றாம் உலகப்போர் போன்ற பல நூல்களை வெளியிட்டுள்ளார். சாகித்ய அகாடெமி விருதினையும் பெற்றுள்ளார்

## 13.4 – ஓ! மரங்கொத்தி மனிதர்களே – கவிதை

மரங்களை வெட்டாதீர்கள்
என் இடுப்பில்
இரத்தம் கசிகிறது
மரங்களை வெட்டாதீர்கள்
மலை விதவையாவதில்
எத்தனை பேருக்கு இஷ்டம்?
மரங்கள்
வளரும் ஓவியங்கள்!
வேர்விட்ட மனிதர்கள்!
பறவைகளின்
வீட்டுவசதி வாரியங்கள்
மரங்களை நீங்கள்
மரங்கள் என்பீர்கள்

நானோ
பூமி
தானே தனக்குத்
தயாரித்த குடைகள்
என்பேன்!
சீதைச் சந்தேகித்த போது
நான்
இராமனைச் சந்தேகித்தேன்
மரங்களை அ.்.றிணை
என்றால்
நான்
இலக்கணத்தைச்
சந்தேகிக்கிறேன்
மரங்களை
மட்டமாய்ப் பேசாதீா்
மனிதா்களே
இறந்த பிறகும்
மரங்களுக்கு மரியாதை உண்டு
உங்களுக்கு ….. ?
மரங்கள் மட்டும்
இல்லையென்றால்
பூமி
மூன்று பங்கு கடல்
ஒரு பங்கு பாலைவனம்
என்று
பூக்கோளம் போதித்திருக்கும்
மரங்கொத்தி மனிதா்களே!
மரங்கள் கையேந்தி
யாசிக்காவிடில்
மழை ஏதப்பா?
மரங்கள் சுவாசிப்பதே

குறிப்பு

மனிதன் சுவாசிக்க வல்லவோ?
மரத்திலிருந்து
ஓர்
இலை உதிர்ந்தால்
நான்
இழவு கேட்கிறேன்
ஒரு மலர் உதிர்ந்தால்
மவுனம் அனுஷ்டிக்கிறேன்.
நீங்கள்
வேரையே வெட்டுகிறீர்கள்
பாவிகளே!
உங்கள்
கோடரியும் இதயமும்
ஒரே உலோகத்தால்
செய்யப்பட்டவையா?
ஒரு மரம்
மண்ணில் விழும் போது
சில நோயாளிகள்
படுக்கையில்
வீழ்கிறார்கள்
மரங்கள் வெட்டாதீர்கள்
இன்று முதல் நிறுத்துங்கள்
இல்லை ------
மரங்களைக் கொலை
செய்தான் -----
என்று -----
இ.பி.கோ வைத் திருத்துங்கள்

மரங்கள் மண்ணின் வாரிசுகள். வாரிசுகளை வெட்டினால் பூமித்தாய் என்ன விளைவுகளைப் பெறுவாள் என்பதை கவிஞர் வைரமுத்து,'ஓ! மரங்கொத்தி மனிதர்களே'என்னும் தலைப்பில் கவிதையாக்கியுள்ளார். மனிதர்களே மரங்களை வெட்டாதீர்கள் என மரங்களே கண்ணீர் வடிக்கின்றன. மரங்களை வெட்டினால் மலைகள்

விதவையாவதில் எத்தனை பேருக்கு விருப்பம். மரங்கள் யாவும் வளருகின்ற ஓவியங்களே! வேர்விட்ட மனிதர்களே, மரங்கள் பறவைகளில் வீட்டுவசதி வாரியங்கள்.

மரங்களை, மனிதர்களே நீங்கள் மரங்கள் என்று கூறுவீர்கள். நானோ, பூமி தானே தனக்குத் தயாரித்துக் கொண்ட குடைகள் என்று கூறுவேன். சீதையை இராமன் சந்தேகித்த பொழுது நான் இராமனைச் சந்தேகித்தேன் என்பது எவ்வளவு உண்மையோ, அதே போன்று மரங்களை அஃறிணை என்றால் நான் இலக்கணத்தைச் சந்தேகிக்கிறேன். மனிதர்களே, மரங்களை மட்டமாக (தரக்குறைவாக) பேசாதீர். மரங்கள் இறந்த பிறகும் அவற்றிற்கு மரியாதை உண்டு. ஆனால் மனிதர்களே உங்களுக்கு என்ன மரியாதை? மரங்கள் மட்டும் இல்லையென்றால் பூமி, மூன்று பங்கு கடல் ஒரு பங்கு பாலைவனம் என்று புதிய பூக்கோளத்தினைப் பூமி நமக்கு போதித்திருக்கும். மரங்கள் தங்கள் கைகளை ஏந்தி யாசிக்காவிட்டால் மழை ஏது? மரங்கள் சுவாசிப்பதே மனிதர்களாகிய நீங்கள் சுவாசிக்க தானே? மரத்திலிருந்து ஓர் இலை உதிர்ந்தால் நான் இழவு கேட்கிறேன். ஒரு மலர் உதிர்ந்தால் மவுனம் அனுஷ்டிக்கிறேன். நீங்கள் வேரையே வெட்டுவதற்கு முயலுகின்றீர்கள். பாவிகளே! கோடரியும், இதயமும் ஒரேஉலோகத்தால் செய்யப்பட்டவையா? ஒரு மரமானது மண்ணிலே விழுகின்ற பொழுது சில நோயாளிகள் படுக்கையில் விழுகின்றார்கள் என்பதை மறவாதீர்கள். மரங்களை வெட்டாதீர்கள், இன்று முதல் நிறுத்துங்கள். இல்லையென்றால் மரங்களைக் கொலை செய்தான் என்று இ.பி.கோ. (Indian Penal Code) என்பதை திருத்தம் செய்யுங்கள் என்று கவிஞர் வைரமுத்துவின் கவிதை சூழலியல் சார்ந்த சிந்தனையை முன் வைத்துள்ளது.

## 14.1 – நான் யார்? - கவிதை

குறிப்பு

" நான் யார் என்பது தெரியவில்லை – நிற்கும்
நீ யார் என்பது புரியவில்லை
நான் யார்? நீ யார்? நடப்பவர் யார்? - இங்கே
நெருக்கிடும் உறவினர் யார்யார்யார்?

என்னும் கவிதையை சவகர்லால் அவர்கள் இயற்றி உள்ளார். கவிதையானது ஆன்ம தேடுதலை, எல்லாம் அவன் தான் எனில் நான் யார்? என்னும் கேள்வியை முன் வைத்தே உருவாக்கி உள்ளார்.

நான் யார் என்பது தெரியவில்லை. என் முன்னே நிற்கும் நீ யார் என்பது புரியவில்லை. நான் யார்? நீ யார்? நடப்பவர் யார்? நமக்குள்ளே நம்மை நெருக்கிடும் உறவினர் யார்யார்யார்? நான் என்பது உடல்தானா? அன்றி அதை இயக்கிடும் உயிர்தானா? 'நான்' என்பது எதனைச் சொல்வது என நான் நாளெல்லாம் நினைக்கின்றேன்., தெரியவில்லை. ஒவ்வொரு நாளும் உடல் தேடும் சுவையினைத் தேடுகின்றேன். என் நாக்கின் சுவையறிந்து அதனைத் தேடுகின்றேன். 'வாள்' போன்று துயரம் என்னை அறுக்கின்ற பொழுது நான் ஒளி பொருந்திய இறைவனின் திருவடியைத் தேடுகின்றேன்.

ஒவ்வொரு நாளும் தேடி அனுபவிப்பவன் நான் தானா? இல்லை துன்பத்தில் வருந்தியே இறைவனின் திருவடி தேடி என்னை நானே ஏமாற்றிக் கொள்பவன் நான்தானா? இல்லையென்றால் அந்தத் தேடல் என்பதே நான் தானா?

என் மனத்தினுள்ளே பயணம் போகின்றேன். அங்கே பல கழிவுகள் மாசுகள் காண்கின்றேன். மனம் என்பதே நான் தானா? அன்றி அந்தக் கழிவுகளும் மாசும் நான்தானா?

ஆன்மா என்னும் ஒளியாகிய கடல் அலையின் வீச்சிலே, ஒரு அற்புதமான சோதி ஒளிருகின்றதே. 'ஆன்மா' என்பது நான்தானா? அந்த அழகிலே குளிப்பவன் நான்தானா?

ஐம்பொறி சார்ந்த புலன்கள் அனைத்தையும் அவை போகின்ற போக்கிலே எங்கும் போகவிடுபவன் நான்தானா? புலன்களை அடக்குவதற்கு நாளும் போராட்டம் புரிந்தே களைப்படைகின்றவன் நான்தானா?

ஆத்திரம் மிக்க கொடுமுடி தான் நானா? இல்லை அமைதியின் கொள்கலனாக விளங்குபவன் தான் நானா? 'ஆத்திரம்' என்னும் கோபத்தைப் போக்கி அறிவின் ஒளியை என்னுடைய அகத்தின் உள்ளே காண்பவன் நான்தானா?

எல்லாமே நான்தான் என்று கூறினால், உள்ளே இருப்பவனாகிய அவனும் நான் தானா? வல்லவனாகிய அந்த இறைவன் எனக்குள் அமர்ந்துவிட்டால் அந்த மாயமும் அவனும் தான் நானா? என கவிஞர் சவகர்லால் 'நான்' என்பது 'எது' என்னும் கேள்வியை முன் வைத்து உடலா, உயிரா, உடற்சுவையா, நாவின் சுவையா, அனுபவமா, தேடலா, மலமும்மாசுமா, ஆன்மாவில் ஒளிரும் சோதியா, புலன் வழி செல்பவனா, புலனை அடக்குபவனா, கோபமுடையவனா, அமைதியானவனா, அறிவொளி காண்பவனா – என எதுவென அறியமுடியா நிலையில் 'நான் யாரென' முடிகின்றது.

## 13.4.2 – பாவம் - கவிதை

சவகர்லால் எழுதிய 'பாவம்' என்னும் கவிதை ஐம்புலனின் நுகர்வினையும், மாறுபடும் நிலைகளையும் எடுத்துரைக்கின்றது.

"பூவுலக மாந்தர்க்குக் கண்கள் வைத்தான்
பார்வையினால் மனம்மலர விழிகள் வைத்தான்
மேவிவரும் ஓசைநலம் கேட்டு நெஞ்சம்
மேன்மையுற இரு செவிகள் அழகாய் வைத்தான்
காவினிலே பூத்தமலர் மணம் வைக்கக்
கட்டழகு முகத்தினிலே மூக்கை வைத்தான்
நாவினையே உரையாட வைத்தான் - இன்ப
நாட்டியங்கள் அரங்கேற மெய்யை வைத்தான்"

குறிப்பு

இவ்வுலகினிலே மனிதர்களுக்கு கண்களை வைத்து அதன் வழி பார்க்கவும் வைத்தான். அப்பார்வையின் மூலம் மனமானது மலர்வதற்கு விழிகளை வைத்தான். மனமானது மேன்மையுற இரு செவிகள் வழி இனிமையான ஒலிகளைக் கேட்பதற்கு அழகாய் வைத்தான். சோலையிலே பூத்திருக்கும் மலர்களின் மணங்களை நுகர கட்டழகு முகத்தினிலே மூக்கினை வைத்தான். நாவினையே உரையாட வைத்தான். அதன் வழி இன்ப நாட்டியங்களை அரங்கேற 'உடல்' என்னும் 'மெய்யினை' வைத்தான்.

வைத்த இறைவனை மறந்து விட்டோம். ஒவ்வொரு கணமும் தீமையினை வளர்ப்பதற்கே ஐம்புலனைத் தீட்டிக் கொள்வோம். சைத்தானின் ஆட்சிபீடமாக உடலினைத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்டோம். ஐம்புலன்களும் தத்தம் வழியே சென்று 'கைத்தாளம்' போட்டதற்கே தொண்டு செய்ய முடியாது வருந்துகின்றோம். நல்ல பாதையை சைத்தானும் காட்டாது மனித நெஞ்சமும் சரியான பாதையைக் கேட்காது. அது தானே கெட்டுப் போய் நைந்துவிடும்.

கண்களிலிருக்கும்இமைகள் தீமையினைப் பார்ப்பதற்கே ஒவ்வொரு கணமும் திறக்கிறது. இரு பக்கத்திலுள்ள செவி வழியே தீமை வெள்ளம் ஓடி வர அழைக்கின்றது. மூக்கோ நாற்றத்தினையே நுகருகின்றது. உடலோ என்றும் உருப்படாது போகிறது. நல்உறவிற்கு வழிகாட்டும் நாவானது தன் நாநுனியில் தீயினை உண்டாக்கிச் சுடுகிறது. இந்நிலையில் மனிதன் பாவமன்றி வேறேன்ன.

மனிதன் தன் ஐம்புலன்களின் வழி நல்லதை நாடாது தீயதையே நாடுவதால் மனிதனின் கட்டுப்பாடற்ற ஐம்புலன்களால் மனிதன் அழிவையே தேடுகிறான்: மனிதன் பாவம்! என்று கவிதையின் மூலம் சவகர்லால் அழகாக பாடியுள்ளார்

## 13.5 – தொகுப்புரை

கவியரசு வைரமுத்து மரங்களை வெட்டாதீர்கள் மனிதர்களே என்று 'ஓ! மரங்கொத்தி மனிதர்களே' என்னும் தலைப்பில் மரங்களின்

## குறிப்பு

தேவையைக் கவிதையாக்கியுள்ளார். மனிதன் மரமின்றி வாழமுடியாது. பூமி மரமின்றி சுவாசிக்க முடியாது என்னும் உண்மைகளை ‘பூமிக்கு மரங்களே குடைகள்’, பூமியின் மூன்று பங்கு கடல், ஒரு பங்கு பாலைவனம்’ போன்ற வரிகளில் அழகாக நயமாக்கியுள்ளார். மரங்களை மனிதனோடு ஒப்பிட்டு, மரங்கள் மரணித்தால் மரியாதையுண்டு. மனிதன் மரணித்தால் என்ன மரியாதையுண்டு, மனிதர்களின் இதயமும் கோடரியும் ஒரே உலோகத்தால் ஆனதோ? ‘மரங்கள் சுவாசிப்பதே மனிதன் சுவாசிக்கத் தானே’ போன்ற வரிகளில் கவிதையாக்கியுள்ளார். மரங்களின் தேவையை வலியுறுத்தியும், சுற்றுத்சூழலை காப்பாற்ற வேண்டும் என்பதை எடுத்துரைக்கும் கவிதை.

‘சவகர்லால்’ இயற்றிய நான் யார்? பாவம் ஆகிய இரு கவிதைகளும், நான் யார் என்னும் தேடுதலையும், ஐம்பொறி வழியாக மனிதன் வழி தவறி செல்வதையும் குறித்து பாடியுள்ளதை இக்கூறு மூலம் அறிய முடிகின்றது.

## 13.6 மாதிரி வினாக்கள் (2மதிப்பெண்கள்)

‘ஓ! மரங்கொத்தி மனிதர்களே’ என்னும் கவிதையை இயற்றியவர் யார்?

கவிஞர் வைரமுத்து.

‘நான் யார்’ என்னும் கவிதையின் ஆசிரியர் யார்?

சவகர்லால்.

‘பாவம்’ என்னும் கவிதையை இயற்றிய கவிஞர் யார்?

சவகர்லால்.

பறவைகள் வாழும் வீட்டுவசதி வாரியங்கள் எவை?

மரங்கள்

மரங்களைக் கவிஞர் வைரமுத்து எங்ஙனம் வருணித்துள்ளார்?

மரங்களை ‘வளரும் ஓவியங்கள்’,‘வேர் விட்ட மனிதர்கள்’,‘பறவைகளின் வீட்டு வசதி வாரியங்கள் என வருணித்துள்ளார்.

குறிப்பு

'வாள்' போன்ற துயரம் அறுக்கின்ற பொழுது யாரைத் தேடுவதாக கவிஞர் சவகர்லால் குறிப்பிடுகின்றார்?

'வாள்' போன்ற துயரம் அறுக்கின்ற பொழுது இறைவனைத் தேடுவதாக கவிஞர் சவகர்லால் குறிப்பிடுகின்றார்.

யார் 'பாவம்' என்று கவிஞர் சவகர்லால் கூறுகிறார்?

கவிஞர் சவகர்லால் மனிதன் பாவம் என்று கூறுகிறார்.

எதனுடைய ஆட்சிபீடமாக உடலினைத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்டோம்?

சைத்தானின் ஆட்சிப்பீடமாக உடலினைத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்டோம்.

## 13.7 – பயிற்சி வினாக்கள் (5மதிப்பெண்கள் , 10 மதிபெண்கள்)

1. 'ஓ! மரங்கொத்தி மனிதர்களே' என்னும் தலைப்பில் கவிதை அறிவுறுத்துவன யாவை? (5மதிப்பெண்கள்)

2. 'நான் யார்?' என்னும் கவிதையின் உட்பொருளை விளக்குக (5மதிப்பெண்கள் )

3. 'பாவம்' என்னும் கவிதையில் கவிஞர் சவகர்லால் யார் பாவம் என்று புலப்படுத்துகிறார் (5மதிப்பெண்கள்)

4. மனிதனுக்கு அறிவுத்துவன கவிதைகள் என்பதை கவிஞர் வைரமுத்து, சவகர்லால் கவிதைகள் வழி விவரிக்க (10மதிப்பெண்கள்)

5. புதுக்கவிதை, மரபுக்கவிதையின் வேறுபாடுகளை நும் பாடப்பகுதி வழிநின்று விளக்குக (10மதிப்பெண்கள்)

## 13.8 – மேலும் படித்தறிக:

1. வல்லிக்கண்ணன்
புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்
தமிழ் இணையக் கல்வி கழகம் - நூலகம்

2. சவகர்லால்
விக்கி பிடியா இணையதளம்

3. கவிஞர் வைரமுத்து
விக்கி பிடியா இணையதளம்

குறிப்பு

## கூறு 14. ஹைக்கூ கவிதைகள்

**1. தமிழன்பன்**
**2. கழனியூரன் கவிதைகள்**



## 14.1 அறிமுகம்

கவிதை வடிவமைப்பில் ‘ஹைக்கூ’ கவிதைகள் கவிதையின் வளர்ச்சி நிலையைக் காட்டுவன. காலத்தின் சுழற்சியில் இலக்கியத்தின் பரிணமிக்கும் பரிணாமத்தின் நிலையில் மரபுக்கவிதை, புதுக்கவிதை, ஹைக்கூ கவிதை, சென்ட்ரியூ கவிதை, லிமரைக்கூ என வகைப்படுத்தப்பட்டுள்ளன. கவிதையின் ‘வாமன வடிவம் எனச்

சிறப்பிக்கப் பெறும் ஹைக்கூ கவிதையில் ஈரோடு தமிழன்பன், கழனியூரன் கவிதைகள் இக்கூறில் அறிவுறுத்தப்பட உள்ளன.

குறிப்பு

## 14.2 நோக்கம்

1. மாணவர்கள் ஹைக்கூ கவிதை குறித்து அறிதல்.
2. ஈரோடு தமிழன்பன், கழனியூரன் அறிமுகம் அறிதல்.
3. ஹைக்கூ கவிதை எழுதும் பயிற்சி பெறுதல்.

## 14.3 ஹைக்கூ கவிதைகள்

ஹைக்கூ கவிதைகள் ஜப்பானிய கவிதை வடிவத்திலிருந்து தமிழிற்கு வந்த ஒரு வடிவம். உலக அளவில் புகழ் பெற்ற ஒரு கவிதை வடிவம் ‘ஹைக்கூ’. ஜப்பானிய மொழியில் ‘டாங்கா’ என்ற வடிவத்தின் அங்கமாக அதன் முதற் பகுதியில் இருந்தது. ‘ரெங்கா’,‘டாங்கா’ போன்ற ஜப்பானிய மரபுக்கவிதையிலிருந்த விடுபட்டு எளிய, இனிய மூன்றடி கவிதையாக, சின்னஞ்சிறு கவிதையாக சுதந்திரம் பெற்றது. 15ஆம் நூற்றாண்டில் தோன்றிய இந்தக் கவிதை வடிவம் தோன்றிய காலத்திலிருந்த சிறிதும் செல்வாக்குக் குறையாமல் வளர்ந்து கொண்டே வந்து ஜப்பானியர்களின் வாழ்க்கையிலிருந்து பிரிக்க முடியாத ஒன்றாக ஆகிவிட்டது. ஹைக்கூவின் இலக்கணம் புறவடிவத்தோடு மட்டுமின்றி அதன் உள்ளடக்கத்திற்கும், வெளியீட்டு முறைக்கும் இயைந்த ஒன்று என்பதால் உலக அளவில் புகழ் பெற்றது. 5-7-5 என்னும் அசை அமைப்பைக் கொண்டது. மூன்றடிகளால் ஆனது. இறுதி அடியானது பளீரிடும் உண்மையுடன் விளங்குவது.

ஹைக்கூவின் மிக முக்கியமான பண்பு அதன் ‘ஜென்’ தத்துவப்பார்வை. புத்தமதத்திற்கு ஒரு பிரிவாகிய ‘ஜென்’ ஜப்பானியர்களுடைய வாழ்க்கையில் இயைந்த தத்துவம். அத்தகைய ஹைக்கூ கவிதைகளைப் பின்பற்றி தமிழிலும் அக்கவிதை வடிவத்தினைக் கொண்டு வந்தனர். ஈரோடு தமிழன்பன், அப்துல்ரகுமான், கழனியூரன், முருகபூபதி போன்ற பலரைக் குறிப்பிடலாம். சி.மணி அவர்களே ‘நடை’ இதழில் ஹைக்கூவை மொழிபெயர்த்து வெளியிட்டார். அப்துல்ரகுமான் தி.லீலாவதியிடம் கொடுத்து, மொழிபெயர்ப்பு செய்த ‘ஜப்பானிய ஹைக்கூ சில’ என்னும் நூல்’ ஜப்பானியர் கவிஞர்களான

ராய்ஸான், ஹீஷீகி, பாஷோ, மோரிடாகி, இஸ்ஸா, ஷிசி, ஸோகன், பூஸன், தாயூ, கியோராய், தாய்கி, ஷீாஸன், யாஹா, கிகாகு. டான்சூய், இட்சுஜின், ஓனிட்சுரா, பேரிலான், ஜோகுன், ஸாய்காகு சொசெகி, எட்சுஜின், கோயோ எனப் பலருடைய கவிதைகளை மொழி பெயர்ப்பு செய்துள்ளார்.

“ எந்த இலை முதலில் விழும்?
இலைகளுக்கு எப்போதுமே தெரியாது
காற்றாவது அறியுமா?

“ இருள் படிந்து உறங்கும் குளம்
திடீரெனத் தவளையின் பாய்ச்சல்
நீர்ச் சப்தம்”

எனப் பல கவிதைகள் ஜப்பானிய கவிதைகளாக தமிழ்க் கவிதைக்குப் பாதை காட்டின.

## 14.4 தமிழன்பன், கழனியூரன் கவிதைகள்

ஈரோடு தமிழன்பன் எனச் சிறப்பிக்கப் பெறும் தமிழன்பன் ஈரோட்டில் பிறந்ததால் அப்பெயர் பெற்றார். பேராசிரியர், எழுத்தாளர், இதழாசிரியர், கட்டுரையாளர், சொற்பொழிவாளர், தொலைக்காட்சி செய்தி வாசிப்பாளர் எனப் பன்முக ஆளுமைகளைக் கொண்டவர். ‘வணக்கம் வள்ளுவ’ என்னும் நூலிற்கு சாகித்திய அகாதெமி விருது பெற்றவர். கவியரங்கக் கவிதைகள் பலவற்றில் பங்கேற்றவர். தமிழன்பன் கவிதைகள், நெஞ்சின் நிழல், சிலிர்ப்புகள், தீவுகள் கரையேறுகின்றன, தோணிகள் வருகின்றன, அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம், காலத்திற்கு ஒரு நாள் முந்தி, ஊமைவெயில் போன்ற பல புத்தகங்களை எழுதியவர். ஹைக்கூ கவிதைகளின் முன்னோடியாக விளங்குபவர். அவருடைய இரு ஹைக்கூ கவிதைகள்

1. “சுடுகிற காலம் வரும்வரை
இந்தப் பானை சக்கரத்தில்
சுழல வேண்டியது தான்”

குறிப்பு

மண் பானைகள் களிமண்ணைக் கொண்டு சக்கரத்தைச் சுழற்றி குயவன் செய்வது. பானை பயன்பாட்டிற்கு வரும்வரை சக்கரத்தில் சுழன்று தான் ஆகவேண்டும் என்னும் ஹைக்கூ கவிதை ஆழ்ந்த பொருளைக் கொண்டது. மண்பானை என்பது உடல். அதில் ‘உயிர்’என்னும் பயன்பாடு இருக்கும் வரை வாழ்க்கைச் சக்கரத்தில் சுழல வேண்டியது தான். அதன் பிறகு அந்த உடலினைச் சுடுகாட்டில் கொண்டு போய் எரித்து விடுவார்கள் என்னும் வாழ்க்கைத் தத்துவத்தைக் குறிப்பிட்டுள்ளது.

2. “ஓட்டுப் போட்டுவிட்டு
திரும்பி வந்த பிணம் திடுக்கிட்டது
தனது கல்லறையில் வேறொரு பிணம்”

தேர்தலில் நிகழும் கேலி அவலத்தைச் சுட்டிக்காட்டுவதாக இந்த ஹைக்கூ கவிதை உள்ளது. சுடுகாட்டில் இடநெருக்கடி ஏற்படும் அபாயநிலையையும்அழகாக சித்தரித்துள்ளது. இக்கவிதையில் இருநிகழ்கள் குறித்த நையாண்டி செய்திருப்பது தற்கால வாழ்க்கையின் அவலநிலையை சுருக்கென சுட்டிக்காட்டியுள்ளது. இறந்து போனவரின் ஓட்டினை (வாக்கினை) உயிரோடு இருப்பவர் போடுவது போல, இறந்து போனவர் உயிரோடு இருப்பவருக்கு ஓட்டு போடும் (வாக்களிக்கும்) முரண் கவிதையின் அழகியலை உணர்த்துகின்றது.

**கழனியூரன் கவிதைகள்**

‘கழனியூரன்’ இயற்பெயர் அப்துல்காதர் என்பதாகும். தொடக்கப்பள்ளி ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். ‘கழனியூரன்’ என்னும் பெயரில் கவிதை, கட்டுரை, கதைகள் எழுதியிருப்பவர். நெல்லை நாடோடிக்கதைகள், நாட்டுப்புற நீதிக் கதைகள், கி.ரா. அணிந்துரைகள், நட்சத்திரவிழிகள், நிரந்தர மின்னல்கள், நாட்டுப்புறத்து நகைச்சுவைக் கதைகள் எனப் பல நூல்களை எழுதியுள்ளார். அவர் இயற்றிய இரு ஹைக்கூ கவிதைகள்.

1. “ஆபிஸ் முடிந்து அம்மா வந்தாள்
உயிர்ப்பித்தது பதினெட்டு மாதப் பொம்மை”

இக்கவிதை தற்கால வாழ்க்கைச் சூழலில் தாய்மை – குழந்தை ஆகிய இருவரையும் பிரிக்கும் பொருளாதார சூழ்நிலையை மூன்று வரிகளில் ஹைக்கூவாக படம் பிடித்துக் காட்டியுள்ளார். ஆபிஸ் முடிந்து வீடு திரும்பும் அம்மா, அம்மா வந்தவுடன் பதினெட்டு மாதமாகிய குழந்தை, அதுவரை பொம்மையாக இருந்தது, உயிர் பெறுகின்றது. குழந்தையை அருகிலிருந்து கவனிக்க முடியாத தாயின் உணர்வையும், தாயினைப் பிரிந்திருக்கும் குழந்தையின் உணர்வையும் அழகாக ஹைக்கூ கவிதையாக படைத்துள்ளார்.

2. “உலை அரிசி விற்ற பணத்தில்
பார்த்த படத்தின் பெயர் பசி”

என்னும் ஹைக்கூ கவிதை திரைப்பட மோகம் வயிற்றுப்பசிக்கான உணவினையும் விற்கத் தூண்டுகிறது. சமைப்பதற்கு வைத்திருந்த அரிசியினை விற்று திரைப்படத்தினைப் பார்க்கும் அவலநிலை. வறுமையிலிருந்தாலும் திரைப்படம் ஈர்க்கும், அடிமைப்படுத்தும் மோகம் எத்தகையது என்று உணரமுடிகின்றது.

## 14.5 தொகுப்புரை

ஈரோடு தமிழன்பன், கழனியூரன் ஆகிய இருவரும் இயற்றிய ஹைக்கூ கவிதைகள் தற்கால சமூகத்தின் சமூகநிலையை, அதன் அவலநிலையைச் சுட்டிக்காட்டியுள்ளன. மூன்று வரி வாமன கவிதையான ஹைக்கூ கவிதை அதன் பொருளில் விஸ்வரூபம் எடுத்து நிற்கின்றது.

## 14.6 மாதிரிவினாக்கள் (2 மதிப்பெண்கள்)

1. ஹைக்கூ என்றால் என்ன?

மூன்று வரி வாமன கவிதை 5-7-5 என்னும் அசைகளைக் கொண்டது. ஜப்பானிலிருந்து தமிழிற்கு வந்த கவிதை வடிவம்

.2. ஜப்பானிய ஹைக்கூ கவிதை எந்த மதத்தோடு தொடர்புடைய கவிதை வடிவமாக தோன்றியது?

புத்த மதத்தின் 'ஜென்' தத்துவப் பார்வையோடு தொடர்புடையது.



3. ஜப்பானிய ஹைக்கூ கவிஞர்கள் இருவரைக் குறிப்பிடுக.

பாஷோ, பூஸன்.

4. தமிழில் ஹைக்கூ கவிஞர்கள் இருவரைக் குறிப்பிடுக.

அப்துல்ரகுமான்,ஈரோடு தமிழன்பன்

5. சமூக அவலத்தினைச் சுட்டும் ஹைக்கூ கவிதை ஒன்றினைக் குறிப்பிடுக.

"ஓட்டுப் போட்டுவிட்டு
திரும்பி வந்த பிணம் திடுக்கிட்டது
தனது கல்லறையில் வேறொரு பிணம்"

## 14.7 பயிற்சி வினாக்கள் (5மதிபெண்கள், 10மதிப்பெண்கள்)

1. 'ஹைக்கூ' கவிதை வடிவம் குறித்து எழுதுக. (5மதிபெண்கள்)

2. ஜப்பானிய ஹைக்கூ கவிதை, கவிஞர்கள் குறித்து நீங்கள் அறிவன யாவை? (5மதிபெண்கள்)

3. 'ஹைக்கூ' கவிதை தமிழில் தோன்றி வளர்ந்த நிலையை விவரிக்க. (10மதிபெண்கள்)

## 14.8 மேலும் படித்தறிக:

ஜப்பானிய ஹைக்கூ
டாக்டர் தி.லீலாவதி
அன்னம் (பி)லிட்
சிவகங்கை மாவட்டம்
முதற்பதிப்பு -1987.

குறிப்பு

## அழகப்பா பல்கலைக்கழகம்

## தொலைநிலைக்கல்வி இயக்ககம்

## பி.லிட்., தமிழ் -10741–கவிதை இலக்கியம்

## இரண்டாமாண்டு – நான்காம் பருவம்

## மாதிரிவினாத்தாள்

காலம்: 3 மணி மதிப்பெண்- 75

### பகுதி-அ

(அ) அனைத்து வினாக்க்களும் ஓரிரு வரிகளில் விடையளி:

(10x2=20 மதிப்பெண்கள்)

1. பாஞ்சாலி–யார் ? .
2. கனகசுப்புரெத்தினம் என்றுஅழைக்கப்புடும் கவிஞர் யார் ?

.3. மரபுக்கவிதைஎன்றால் என்ன ?

4. உமார்கய்யாம் பாடலினைமொழிபெயர்ப்புசெய்தவர்எக்கவிஞர் ?
5. தைப்பாவை–பொருள் தருக .
6. தன் ஆறாவதுவிரல் வழி எழுதும் கவிஞர் யார் ? ஏன் ?
7. கக்கத்துக் குடையைப் போலக் கிழிந்துப் போனதுஎவருடையவாழ்க்கை ?
8. பறவைகளின் வீட்டுவசதிவாரியம் எது ?
9. பாவம் என்னும் கவிதையை இயற்றியவர் யார் ?

10.ஹைக்கூ என்றால் என்ன ?

### பகுதி-ஆ

(ஆ) அனைத்து வினாக்களுக்கும் ஒருபக்கஅளவில்

விடையளி :(5x5=25 மதிப்பெண்கள்)

11 (அ) மரபுக்கவிதைகுறித்துவிளக்குக

அல்லது

(ஆ) பாஞ்சாலிசபதத்தில் மாலைவருணனை–விளக்குக ?

12. (அ) உதாரன் நிலவினை வருணிக்கும் விதம் யாது ?

அல்லது

குறிப்பு

(ஆ) தை மகளினைக் கண்ணதாசன் எங்ஙனம் வரவேற்கின்றார் ?

13. (அ)நீராரும் கடலுடுத்தபாடல்பற்றிவிளக்குக

அல்லது

(ஆ) சிக்கனம் கவிதையின் தனிச்சிறப்புகள் யாவை ?

14. (அ) மரங்கொத்தி மனிதர்களே- தரும் சிந்தனைகளை விளக்குக.

அல்லது

(ஆ)காசிஆனந்தனின் நறுக்குகள் -பற்றிஎழுதுக.

15.(அ) நான் - கவிதையின் **விளக்கம்** யாது ?

அல்லது

(ஆ) ஹைக்கூ கவிதைகுறித்து விளக்குக

**பகுதி - இ**

(இ) ஏதேனும் மூன்றுவினாக்களுக்கு மட்டும் கட்டுரை வடிவில்

**விடையளி:** **(3x10=30 மதிப்பெண்கள்)**

16. திருதிராட்டிரனுக்கும் துரியோதனன் உரையாடல்குறித்துக் கட்டுரைக்க
17. புரட்சிக்கவியின் புரட்சிச் சிந்தனைகள் - விவரிக்க
18. உமார்கய்யாம் பாடல்களின் தத்துவார்த்தக் கருத்துகளைப் பற்றிவிளக்குக
19. மரபுக்கவிதையின் சிறப்புகளை நும்பாடப்பகுதி கொண்டு விளக்குக
20. புதுக்கவிதைக் கூறுகளைப் புதுக்கவிதை வழி விளக்கிவரைக .

-------------